பதற்றம் அதிகமாக இருந்தது. அவன் இந்த மலைப்பகுதியை நன்கு அறிந்தவன். விலங்குகளால் எந்தவிதமான பாதிப்பும் ஏற்பட வாய்ப்பில்லை. ஆனால், இளவரசி யாரின் பயணத்தை வேந்தர்படையினரோ, வெங்கல்நாட்டினரோ பார்த்துவிடக் கூடாது. அப்படி நேர்ந்தால் அஃது இளவரசியின் உயிருக்கே ஆபத்தாகிவிடும். எனவே, மிகுந்த எச்சரிக்கையோடு அழைத்துச்சென்றான்.

பல்லக்குக்குள் பொற்சுவையும் சுகமதியும் எதிரெதிராக உட்கார்ந்திருந்தனர். அது, பெருமெத்தையும் விரிசிறகும்கொண்ட பெரும்பல்லக்கன்று; ஒரு நார்க்கயிறும் இளம்பஞ்சு தூவியும்கொண்ட குறும்பல்லக்கு. ஒருவர் மட்டுமே பயணிப்பதற்கானது. ஆனால், அதில் இருவர் பயணித்தனர். ``நான் இறங்கி நடந்து வருகிறேன்'' என்று சுகமதி எவ்வளவோ சொல்லிப்பார்த்தாள். பொற்சுவை கேட்கவில்லை. ``நீ பல்லக்கில்தான் வரவேண்டும்'' என்று உள்ளே அமர வைத்துக் கொண்டாள். அண்ணகர்கள், பல்லக்கைத் தூக்கி நடந்தனர்.

``இந்தச் சிறிய இடத்தில் நீங்கள் தனியே அமர்ந்து வருவதுதான் வசதியாக இருக்கும். இப்போது பாருங்கள், கால் நீட்டக்கூட முடியாமல் குறுக்கி உட்கார்ந்திருக்கிறீர்கள். எனது மனதுக்கு வேதனையாக இருக்கிறது. நான் இறங்கி நடந்து

வருகிறேன் இளவரசி'' என்று சொல்லி, பல்லக்கை விட்டு இறங்க மீண்டும் அனுமதி கேட்டாள்.

``எனது வாழ்வின் மிக முக்கியமான இந்த நேரத்தில், நீ எனக்கு மிக அருகில் இருக்க வேண்டும் சுகமதி.''

``எல்லா நேரங்களிலும் நான் உங்களுக்கு அருகில்தானே இருக்கிறேன் இளவரசி?''

இளஞ்சிரிப்போடு பொற்சுவை சொன்னாள், ``நீ என்னை விட்டகலாத நிழல். ஒளியின்போது நிழல் வெளியில் இருக்கும். இருளின்போது நிழல் உள்ளுக்குள் வந்து உட்கார்ந்துகொள்ளும். அதனால்தான் இந்த இருளில் என் அருகில் உன்னை உட்காரவைத்துக் கொண்டேன்.''

பொற்சுவையின் சொற்கள் அன்பால் மயக்கின. ஆனால், அன்பைப் பெறத் தகுதியானவர்கள்தாம் அதை உள்வாங்க வேண்டும். சுகமதியோ தனக்கு அந்தத் தகுதி இல்லை என்று எப்போதும் நம்புகிறவள். தான் பொற்சுவையின் பணிப்பெண். `நீரோ, பாலோ, தேனோ தன்மீது எது கொட்டினாலும் உள்ளிறங்க அனுமதிக்காத கல்போலத்தான் பணிப்பெண்ணின் மனம் இருக்க வேண்டும்' என்று சிறு வயது முதல் சொல்லி வளர்க்கப்பட்டவள். எனவே, சுகமதியை அந்த வார்த்தைகள் ஒன்றும்

செய்துவிடவில்லை. ஆனாலும் பொற்சுவையின் வார்த்தைகளை வேறு திசைக்கு மாற்ற விரும்பினாள் சுகமதி.

பல்லக்கில் சிறு கண்ணாடிக்குடுவையில் விளக் கொளி சிந்திக் கொண்டிருந்தது. பொற்சுவையின் முகத்தை உற்றுப்பார்த்தபடியே சொன்னாள், ``நீண்டகாலத்துக்குப் பிறகு உங்களின் முகம் பூத்து மிளிர்கிறது இளவரசி.''

``அப்படியா..!'' என்று மகிழ்வு பொங்கக் கேட்டவள், ``பல ஆண்டுகளுக்குப் பிறகு ஆசானையும் பார்த்தறியாத பாரியையும் காணப்போகிறேன் அல்லவா... எனது முகம் மலராமல் என்ன செய்யும்? நான் காற்றில் மிதந்துகொண்டிருக்கிறேன் சுகமதி. எனக்குள் கவிதைகள் ஊற்றெடுக்கின்றன. சக்கரவாகப்பறவை வந்திறங்கும் நாளன்று நாம் எப்படி மகிழ்ந்திருப்போமோ, அதைவிடப் பலமடங்கு மகிழ்வில் மனம் கூத்தாடுகிறது.''

``எனது மனமும் மகிழ்வில்தான் இருக்கிறது இளவரசி. அதேநேரம் உள்ளுக்குள்ளிருக்கும் அச்சம், நேரம் கூடக்கூடப் பெருகுகிறது.''

``ஏன்?''

``இந்தப் பயணத்தின் ரகசியம் வெளியில் தெரிந்துவிட்டால்..?''

``இந்தப் பயணத்தின் நோக்கம் நிறைவேறுகிறதா என்பதுதான் முக்கியம். மற்றதெல்லாம் பொருட்டல்ல.''

``நீங்கள் ஒரு முடிவெடுத்துவிட்டால் அந்த முடிவை மட்டும்தான் பொருட்படுத்துவீர்கள். ஆனால், நீங்கள் எடுக்கும் எந்த முடிவையும்விட நீங்கள்தான் எனக்கு முக்கியம்.''

சிரித்தாள் பொற்சுவை.

போர்க்களம் விட்டு அகன்று நாகக்கரட்டுக்கு வந்த பிறகு கூடாரங்களில் ஆயுதங்களை வைத்துவிட்டு வீரர்கள் உணவருந்தினர். இன்றைய போர், சிறுபாதிப்புகூட யாருக்கும் ஏற்படாத வகையில் முடிவுக்கு வந்தது. உணவருந்தி முடித்தவுடன் இரவாதனின் தலைமையிலான விற்படையின் பெரும்பிரிவு தென்திசை நோக்கிப் புறப்பட்டது.

இருளினூடே புரவிகள் வேகம்கொண்டன. சற்றே நீண்ட பயணம் அது. குளவன்திட்டின் பின்புறத்தை அடைய குதிரைகள் விரைந்தன. வீரர்கள் வருவதற்கு முன்பே அங்கு எண்ணற்ற தீப்பந்தங்கள் ஏற்றப்பட்டு எல்லாவிதமான ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. நேற்றிரவே இந்தத் திட்டம் பேசப்பட்டுவிட்டதால், அதற்கான ஏற்பாட்டை முன்கூட்டியே தொடங்கி விட்டான் இரவாதன். இந்தப் பணிக்காகப் பகல் முழுவதும் இந்த இடத்தில் பலர் வேலைபார்த்துள்ளனர். வீரர்கள்

வந்தடையும்போது அவர்களின் பயிற்சிக்கான ஆயத்தம் முழுமை பெற்றிருந்தது.

இந்தத் தாக்குதலுக்கு, இரவாதனுடன் பிடறிமானும் கரிணியும் தலைமை யேற்கவிருந்தனர். மூஞ்சலுக்குள் மூன்று விதமான தாக்குதலை நடத்த வேண்டி யுள்ளது. கவச உடை பூண்ட அகப்படை வீரர்களைத் தாக்கி அழிப்பது ஒன்று. பொய்க்கூடாரங்களில் குவிந்துள்ள வீரர்கள் சாரிசாரியாக வெளிவந்து தாக்குதலைத் தொடுப்பர்; அவர்களைத் தாக்கி அழிப்பது இரண்டு. நீலன் இருக்கும் கூடாரம் நோக்கி முன்னேறிப் போய் அவனை மீட்பது மூன்று. இந்த மூன்றும் தனித்தனியான தன்மைகளோடு செய்யப்படவேண்டிய தாக்குதல்கள்.

குறிப்பாக, மூஞ்சலுக்குள் நுழைந்த பிறகு வில்லால் தாக்குவதற்குத் தேவையான இடைவெளிகள் போதுமான அளவுக்கு இருக்காது. பெரும்பாலும் வாள்வீச்சுக்கும் ஈட்டி உள்ளிட்ட ஆயுதங்களாலான தாக்குதலுக்கும்தான் அதிக தேவை இருக்கும். பறம்புப்படையின் முதற்பெரும் ஆற்றல், வில்லில்தான் இருக்கிறது. அதை அதிகம் பயன்படுத்த முடியாத நிலையில், மாற்றுத்திட்டத்தையும் அதற்குப் பொருத்தமான ஆயுதங்களையும் முடிவுசெய்யவேண்டியிருந்தது.

மூஞ்சலுக்குள் நுழையவிருக்கும் அனைத்து வீரர்களுக்கும், நடத்தப்போகும் தாக்குதலைப் பற்றிய முழுமையான புரிதல்

தேவை. இரவாதன் முன்சொல்லியபடி, மூஞ்சலின் முழு வரைபடம் ஆயத்தநிலையில் இருந்தது. அதை வைத்து, தாக்குதல் திட்டத்தைத் தனது படைக்கு விளக்கத் தொடங்கினான். இரவு முழுமைக்கும் நீளும் பயிற்சி தொடங்கியது.

வெங்கல்நாட்டின் கடைசிக் குன்றைக் கடந்து பல்லக்குப் பயணித்துக் கொண்டி ருந்தது. மலைமீது பல்லக்கைத் தூக்கிச் செல்லும்போது உள்ளுக்குள் அசைவும் சரிவுமாக இருந்தது. சிறுபல்லக்கில் இருவர் எதிரெதிரே உட்கார்ந்திருந்ததால் சரிவில் இறங்கும்போதும் மேட்டில் ஏறும்போதும் பிடித்துக் கொள்ள வசதியாக இருந்தது. தனது கையோ, காலோ பொற்சுவையின் மீது படும்போதெல்லாம் மன்னிப்பு கேட்டபடியே இருந்தாள் சுகமதி.

அண்ணகர்கள், பெருஞ்சரிவு ஒன்றில் பல்லக்கை இறக்கிக் கொண்டிருந்தனர். முன்புறம் கால் மடக்கி உட்கார்ந்திருந்த சுகமதியின் கால்களை இறுகப் பிடித்தபடி சரிந்துவிடாமல் தன்னை நிலை நிறுத்திக் கொண்டாள் பொற்சுவை. சுகமதியோ தனது கால் பகுதியை இளவரசி பிடித்தபோது துடித்துப்போனாள். எவ்வளவு முயன்றும் விலக்க முடியவில்லை. ஆனால், பொற்சுவையோ சரிந்து கொண்டிருப்பதால் மட்டும் பிடிக்கவில்லை; அவளுக்கு அது பிடித்திருந்தது.

`உனது கை, எனது உடலில் பட்டால் அத்தனை முறை மன்னிப்பு கோருகிறாயே, எனது கை உனது காலில் பட்டால் என்ன

செய்வாய்?' என்பதுபோலத்தான் இருந்தது அவளது செய்கை. பல்லக்கு, சரிவு நிலையிலிருந்து சற்றே சமநிலை அடைந்தது. பொற்சுவை, பல்லக்கில் இருந்த சிறுமணியில் ஓசையெழுப்பினாள். அண்ணகர்கள் நடப்பதை நிறுத்தி, தாங்குகோல்களால் பல்லக்குக்கு முட்டுக் கொடுத்தனர். முன்னால் சென்றுகொண்டிருந்த காராளி, வேகவேகமாகப் பல்லக்கின் அருகில் வந்து நின்றான்.

திரையைச் சிறிதே விலக்கி ``வெங்கல்நாட்டின் ஆறு ஊர்களின் எல்லையைக் கடந்துவிட்டோமா?'' எனக் கேட்டாள்.

``இன்னும் சிறுபொழுதில் கடந்துவிடுவோம் இளவரசி. பள்ளத்தாக்குக்கு அருகில் வந்துவிட்டோம்'' என்றான்.

``விரைவுபடுத்து'' என்று சொல்லியபடி திரையை மூடிக் கொண்டாள். அண்ணகர்கள் மீண்டும் நடக்கத் தொடங்கினர்.

``ஏன் இளவரசி இவ்வளவு முக்கியமாகக் கேட்கிறீர்கள்?'' என்று வினவினாள் சுகமதி.



அண்ணகர்கள் முழுவேகமாக நடக்கத் தொடங்கும் வரை அமைதிகாத்தவள் பிறகு சொன்னாள், ``இந்தப் போரின் ஒரு பகுதிதான் தட்டியங்காட்டில் நடக்கிறது. இன்னொரு பகுதி இந்த ஆறு ஊர்களில்தான் நடந்துகொண்டிருக்கிறது.''

புரியாமல் விழித்தாள் சுகமதி. ``இந்த ஆறு ஊர்க்காரர்கள்தாம் போரிலே ஈடுபட மாட்டோம் என்று சொல்லிவிட்டார்களே. பிறகு எப்படி..?''

``அதனால்தான் எல்லா வகையான உளவுத்தொழிலுக்கும் இந்த ஊர்கள் களமாக அமைந்துவிட்டன. மூவேந்தர்களும் தனித்தனியாக இந்த ஊரார்களைக் கொண்டு பறம்பை உளவுபார்க்கின்றனர்.''

சற்றே அதிர்ச்சியோடு சுகமதி கேட்டாள் ``அப்படியென்றால், நாம் செல்லும் செய்திகூட உளவுபார்க்கப்பட்டிருக்குமா?''

சுகமதியின் கண்களை உற்றுப்பார்த்தபடி பொற்சுவை சொன்னாள், ``பேரரசர்கள் என்ன செய்கிறார்கள் என்பதை நாம் அறிந்திருக்கும் போது, நாம் என்ன செய்கிறோம் என்பதையும் அவர்கள் அறிந்திருக்க வாய்ப்புண்டு அல்லவா?''

திடுக்கிட்டாள். ``பேரரசர்கள் என்ன செய்யப்போகிறார்கள் என்பதை நீங்கள் அறிந்துள்ளீர்களா இளவரசி?''

``ஆம். அந்தச் செய்தியை அறிந்ததால்தான் இன்றே செல்ல வேண்டும் என முடிவுசெய்தேன்.''

``போரை நிறுத்துவதற்கான பேச்சுக்குத்தானே பாரியைப் பார்க்கப்போவதாகக் கூறினீர்கள்?''

``அது கடந்த வாரச் சூழல். இனி இந்தப் போரை யாராலும் நிறுத்த முடியாது. அந்நிலை கடந்துவிட்டது.''

``அப்படியென்றால், யாருடைய வெற்றிக்காவது உதவப்போகிறீர்களா?''

``வெற்றி தோல்வியைப் போர்க்களம்தான் தீர்மானிக்கும். அதில் நாம் ஏன் உதவ வேண்டும்?''

``பிறகு, இந்தப் பயணத்தின் நோக்கம்தான் என்ன?''

``பாரியை, சதியால் வீழ்த்தத் திட்டமிட்டுள்ளனர். இன்றிரவு அந்தச் சதி நிகழப்போகிறது. அதைத் தடுக்கவே நான் போகிறேன்.''

மிரண்டது சுகமதியின் முகம். ``நீங்கள் சொல்வது உண்மையா இளவரசி? நம் பேரரசரா இந்தச் செயலைச் செய்யப்போகிறார்?''

``நம் பேரரசர் அல்ல. சோழப்பேரரசர் அந்தச் செயலைச் செய்யப்போகிறார்.''

சற்றே நிம்மதியானாள் சுகமதி. தமது பேரரசுக்கு எதிரான செயலில் தாம் ஈடுபடவில்லை என்பது அவளின் பெருமூச்சுக்குக் காரணமாக இருக்கலாம். ஆனால், அதைப் பொற்சுவை கவனிக்காததுபோல இருந்துகொண்டாள்.

``கொலைச் சதியை நிறுத்தப்போகும்போதுகூட உங்களின் முகம் பதற்றமேதுமின்றி இருக்கிறதே!''

``செய்யப்போகும் செயலின் முக்கியத்துவம். சிறு ஐயம்கூட எனது நடவடிக்கையின் மீது ஏற்பட்டுவிடக் கூடாது என்பதில் உள்ள தெளிவு. உண்மையில் எனது வாழ்நாளில் இவ்வளவு பதற்றத்தை நான் இதற்கு முன்னர் அடைந்ததில்லை. ஆனால், அதை வெளிக்காட்டிவிடக் கூடாது என்பதில் முழு கவனத்தோடு இருக்கிறேன். எனது முகம் முழுமையாகப் பூத்திருக்கிறது என்பதை நீயே நம்பிய பிறகு, வேறு யார் ஐயம்கொள்ள முடியும்?''



இந்தப் பயணத்தின் தன்மை, இப்போதுதான் சுகமதிக்கு முழுமையாகப் புரியத் தொடங்கியது. ``நான் மறுபடியும் கேட்கிறேன், இதனால் உங்களுக்கு ஆபத்து ஏதும் வந்துவிடாதே!''

``அது, நம் பேரரசர் எவ்வளவு ஒற்றறிகிறார் என்பதைப் பொறுத்தது.''

``இளவரசியாரின் செயலை அவ்வளவு துல்லியமாக ஒற்றறிகின்றனரா?''

``ஆம். காராளியின் எல்லா நடவடிக்கைகளும் அவர்களால் கண்காணிக்கப்படுகின்றன.''

நடுங்கிப்போனாள் சுகமதி. ``என்ன சொல்கிறீர்கள் இளவரசி? அவனை நம்பித்தானே இந்தப் பயணத்தையே மேற்கொள்கிறோம். அப்படியென்றால், இது உறுதியாக ஆபத்தில் போய்த்தான் முடியும்.''

``காராளியிடம் பொய் இல்லை. அவன் உண்மையான கலைஞன். ஆனால், அவனுடைய எல்லா நடவடிக்கைகளும் ஒற்றறியப்படுகின்றன. அவன் நமக்குச் சொல்வதைப்போல அவனைப் பற்றி வேறு யாரோ சொல்லிக் கொண்டிருக்கின்றனர். போர்நிறுத்ததுக்காகப் பேசப்போவதாக இருந்தால் இந்தப் பயணத்தை நான் மேற்கொண்டிருக்க மாட்டேன். ஆனால், இது பாரியின் உயிர் பறிக்கும் சதி தொடர்பானது. இதைக் கேள்வியுற்ற பிறகு எப்படி நான் போகாமல் இருக்க முடியும்?''

``கேள்விப்பட்டது உண்மை என எப்படி நம்பினீர்கள்?''

``எல்லாவற்றையும் உண்மையில்லை என நம்பு. அப்போதுதான் உண்மை எதுவோ அது மட்டும் தனித்துத் துலங்கும்.''

``உங்களைப் போன்ற இளவரசியார்களுக்குத் தான் அது முடியும். எங்களைப் போன்றோர் எல்லாவற்றையும் நம்பவே பயிற்றுவிக்கப் பட்டவர்கள்.''

``பிறகு ஏன் கேள்வி எழுகிறது சுகமதி?''

அமைதி சூழ்ந்தது.

குளவன்திட்டிலிருந்து வந்த பாரியும் காலம்பனும் குடிலில் உணவருந்திக் கொண்டி ருந்தனர். மற்றவர்கள் பாட்டாப்பிறையில் அமர்ந்திருந்தனர். தேக்கன் நேற்றைப்போல் இன்றைக்கும் வரவில்லை. தனது குடிலிலேயே தங்கிவிட்டான். வாரிக்கையனும் நாகக்கரட்டின் மீதே இருந்துவிட்டார். உதிரனும் ஈங்கையனும் விண்டனும் எதிர்ப்புறம் நின்று பேசிக் கொண்டிருக்க, அவர்களைப் பார்த்தபடி அமர்ந்திருந்தார் கபிலர். அவரது மனம் மிகுந்த கலக்கத்தில் இருந்தது.

தேக்கனிடமோ, முடியனிடமோ கலந்துகொள்ளாமலேயே பொற்சுவையை அழைத்துவரச் சொல்லிவிட்டோமே என்ற தவிப்பு அடங்கவில்லை. அந்நேரம், பாரியைப் பார்த்துவிட்டு முடியன் பாட்டாப்பிறை நோக்கி வந்து கொண்டிருந்தான். அவன் இங்கு

வருவதற்குள் எதிர் சென்று பேசிவிடலாம் என அவனை நோக்கி நடந்தார். தீப்பந்த வெளிச்சம் சிறிது தொலைவுக்குத்தான் இருந்தது. ஆனாலும் வேகமாக நடந்து முன் சென்றார்.

மேலேயிருந்து இறங்கிக் கொண்டிருந்த முடியனைப் பார்த்ததும் தேக்கனின் உடல்நலம் பற்றிக் கேட்டறிந்தார். சொற்களின் வழியே தனது கவலை வெளிப்பட்டுவிடாதவாறு சொல்ல முனைந்தான் முடியன். அதே முயற்சியோடுதான் தொடர்ந்து வந்த கபிலரின் சொற்களும் இருந்தன. நேற்று தன்னைத் தேடி வந்த காராளி சொல்லிய செய்தியைப் பகிர்ந்துகொண்டார். ``தேக்கனையோ, உன்னையோ கலந்துகொண்டுதான் அவனுக்கு மறுசொல் சொல்லவேண்டும் என்று நெடுநேரம் காத்திருந்தேன். ஆனால், இருவரும் வந்துசேரவில்லை. வேறு வழியில்லாமல் அழைத்துவரச் சொல்லிவிட்டேன்'' என்றார்.

அதிர்ச்சிக்குள்ளானான் முடியன். ``ஏன் அப்படிச் சொன்னீர்கள்? போர்ச்சூழல் எவ்வளவு மோசமாகிக் கொண்டிருக்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறீர்கள். இந்நிலையில் அவர்கள் இங்கு வருவது எந்த வகையிலும் பொருத்தமல்ல'' என்று கூறினான்.

``எனக்கும் புரிந்தது. அதனால்தான் அதைத் தவிர்க்க முயன்றேன். ஆனால், முடியவில்லை. நீங்கள் இருவரும் வந்து

சேராததால் என்னால் வேறு முடிவெடுக்க முடியவில்லை'' என்றார்.

இவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் வீரன் ஒருவன் முடியனைக் கண்டு பேச பாட்டாப்பிறையிலிருந்து மேலேறி வந்தான்.

``காராளி என்பவன், நாகக்கரட்டின் வடமுனைப் பள்ளத்தாக்குக்கு வந்துள்ளான். அவனோடு பல்லக்கு ஒன்றும் வந்துள்ளது. கபிலரிடம் கேட்டுவிட்டுத்தான் வருவதாகச் சொல்கிறான். உள்ளே அனுமதிக்கலாமா?'' என்று கேட்டான்.

முடியன், கபிலரைப் பார்த்தான். ``நாளைதான் வருவான் என நினைத்தேன்'' என்று மெல்லிய குரலில் சொன்னார் கபிலர்.

வருவதன் நோக்கம் என்னவாக இருக்கும் என முடியனால் புரிந்துகொள்ள முடியவில்லை. இவ்வளவு தொலைவு வந்த பிறகு திருப்பி அனுப்புதல் முறையல்ல என்று மட்டும் தோன்றியது. ``சரி, காராளியை அங்கேயே நிறுத்திவிடுங்கள். பல்லக்கை மட்டும் அனுப்பிவையுங்கள். வழிகாட்ட நம் வீரர்கள் வரட்டும்'' என்றான்.

பள்ளத்தாக்கின் நுழைவுப்பகுதியில் காராளி நிறுத்தப்பட்டான். பறம்புவீரர்கள் இருவர் வழிகாட்ட அண்ணகர்கள் பல்லக்கைத் தூக்கிக் கொண்டு பின்தொடர்ந்தனர்.

பல்லக்குக்குள் உரையாடல் இறுக்கம்கொள்ளத் தொடங்கியது. சுகமதிக்கு அச்சமும் பதற்றமும் அதிகமாகின. அடுத்து என்ன நடக்கும் என்பதை அவளால் எண்ணிப்பார்க்கவே முடியவில்லை. முகத்தில் வியர்வை துளிர்த்தது. ``சிறு பல்லக்கு என்பதால் காற்றோட்டமாக இல்லை'' என்று பொற்சுவையிடம் சமாதானம் சொல்லிக் கொண்டாள். ஆனால், பொற்சுவைக்கு வியர்க்கவில்லை. அவள் தெளிவுகொண்டிருந்ததால், தான் செய்யப்போகும் வேலை எத்தகையது என்பதைப் பற்றிப் பலமுறை மனதுக்குள் சிந்தித்துப் பார்த்துக் கொண்டாள். வாழ்வு, முன்னிலும் பொருள்பொதிந்த இடத்துக்குத் தன்னை இட்டுச்செல்வதாக உணர்ந்தாள்.

சுகமதியால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. `இவ்வளவு பெரிய செயலுக்குப் போகும்போதுகூட இளவரசியால் எப்படி இயல்பு மாறாமல் இருக்க முடிகிறது? என்னதான் சிந்தனையை ஒருமுகப்படுத்தினாலும் மனதின் ஆழத்திலிருக்கும் உணர்வு, நீருக்குள் இருக்கும் காற்றுக்குமிழியைப்போல முகத்தில் வெளிப்பட்டுத்தானே ஆகவேண்டும். ஆனால், பொற்சுவையின் முகத்தில் எதையும் கண்டறியவே முடியவில்லையே?' எனச் சிந்தித்தவண்ணமே இருந்தாள்.

இரலிமேட்டுக்கும் நாகக்கரட்டுக்கும் இடைப்பட்ட பள்ளத்தாக்கில் சமதளப்பயணம் என்பதால் இடுக்கி நெருக்கி உட்காரும் நிலையில்லை. ஆனாலும் சுகமதியால் இயல்பாய்

இருக்க முடியவில்லை. என்ன செய்வது எனத் தெரியாமல், பொற்சுவையின் முகத்தைப் பார்ப்பதும், பிறகு பார்வையைத் தவிர்த்து, குனிந்து கால்விரல்களைப் பார்ப்பதும், சிறு விளக்கின் அசைவைப் பார்ப்பதுமாக வந்தாள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, எதையோ சொல்ல, தலை நிமிர்ந்து பொற்சுவையைப் பார்த்தாள். அவளது முகத்தில் மாற்றங்கள் தெரிந்தன. தனது எண்ணத்திலிருக்கும் குழப்பம்தான் அப்படித் தோன்றுகிறது என நினைத்துக் குனிந்து கொண்டாள்.

சிறிய இடைவெளிக்குப் பிறகு மீண்டும் பொற்சுவையின் முகத்தைப் பார்த்தாள். அவளது முகத்தில் வியர்வைத் துளிகள் இருந்தன. சுகமதி அதிர்ச்சிக்குள்ளானாள். திடீரென இளவரசிக்கு என்ன ஆயிற்று எனப் புரியவில்லை. `காற்றோட்டம் குறைவாக இருப்பதால் வியர்க்கிறதோ!' என நினைத்து, ``பல்லக்கின் திரையை விலக்கட்டுமா இளவரசி?'' என்று கேட்டாள்.

``வேண்டாம்'' என்று மறுத்தாள் பொற்சுவை. இவ்வளவு நேரம் பேசிவந்த குரலின் இனிமை இப்போது இல்லை. அவளது எண்ணம் குழப்பத்துக்குள் மூழ்குவது தெரிந்தது. சுகமதி, அவளது முகத்தையே உற்றுப்பார்த்தாள்.

பொற்சுவையின் கண்கள் இங்குமங்குமாக அலைமோதின. சுகமதி தன்னைக் கண்டறிகிறாள் என்றுகூட அவளால் கணிக்க

முடியவில்லை. மனம் தத்தளித்தபடி இருந்தது. என்ன செய்வதென அறியாத பதற்றம் சூழ்ந்தது. சட்டெனச் சொன்னாள், ``உனது காதில் இருக்கும் அணிகலனைக் கழற்று.''

சுகமதிக்குப் புரியவில்லை. `எனது காதணியை ஏன் கழற்றச் சொல்கிறாள்?' என்று மனம் குழம்பியபடி இருக்க, கைகள் காதணியின் திருகாணியைத் திருகிக் கொண்டிருந்தன.

அவளின் கைகள் செய்துகொண்டிருந்த அதே வேலையை, பொற்சுவையின் விரல்களும் செய்துகொண்டிருந்தன. அவள் தனது காதணியின் திருகாணியைக் கழற்றிக் கொண்டிருந்தாள். ஏன் இதைச் செய்கிறாள் என்று சுகமதிக்கு முற்றிலும் விளங்கவில்லை.

சுகமதி அணிந்திருந்தது சிறிய வடிவிலான பூங்குழைக் காதணி. அதை அவள் கழற்றும்போதே பொற்சுவை தான் அணிந்திருந்த பெரிய வடிவிலான மகரக்குழைக் காதணியைக் கழற்றி சுகமதியின் கைகளில் கொடுத்தாள்.

அதை வாங்கியபடி புரியாமல் விழித்த சுகமதியைப் பார்த்து ``நீ இந்தக் காதணியை இட்டுக் கொள்'' என்றாள்.

``இளவரசி அணிந்திருக்கும் மகரக்குழைக் காதணியை நான் மாட்டுவதா?!'' சொல்லும்போதே அச்சத்தில் நடுங்கினாள்.

ஆனால் பொற்சுவையோ, ``நான் வேறு காரணத்துக்காகச் சொல்கிறேன், அணிந்துகொள்'' என்றாள். சுகமதி மீண்டும் மறுக்கவே, சற்றே கோபத்தை வெளிக்காட்டினாள்.

அதன் பிறகு சுகமதியால் மறுக்க முடியவில்லை. பாண்டியநாட்டு இளவரசியின் விலைமதிப்பற்ற மகரக்குழைக் காதணியைத் தனது காதில் மாட்டிக் கொண்டாள்.

பொற்சுவை, சுகமதியின் காதுகளையே உற்றுப்பார்த்தாள். மகரக்குழைக் காதணி ஆடியபடியே வந்தது.

காதணியையே பார்த்துக் கொண்டிருந்த பொற்சுவை, பல்லக்கில் சுடர்விட்டுக் கொண்டிருந்த சிறுவிளக்கை எடுத்து அதை சுகமதியின் கைகளில் கொடுத்தாள்.

அவள் என்ன செய்கிறார் என, சுகமதிக்குப் புரியவில்லை. ஆனாலும் அவள் சொன்னபடி விளக்கை இறக்கிப் பிடித்துக் கொண்டாள்.

பொற்சுவையோ, பல்லக்கின் திரையை மிகச்சிறிய அளவு மட்டும் விலக்கி வெளிப்புறமாகப் பார்த்தாள்.

இவ்வளவு சிறிய அளவு விளக் கொளியில் எதைப் பார்த்துவிட முடியும் எனப் புரியாமல் தவித்தாள் சுகமதி.

சிறிது நேரத்துக்குப் பிறகு விளக்கை மீண்டும் மேலே மாட்டச் சொன்னாள்.

சுகமதி விளக்கை மாட்டினாள்.

``தங்களின் நடவடிக்கை எதுவும் புரியும்படி இல்லை இளவரசி.''

``சிறிது நேரம் பொறு சொல்கிறேன்.''

பொற்சுவையின் மனம் சற்றே அமைதிகொண்டது. அடுத்து என்ன செய்யவேண்டும் என விரைவாக முடிவெடுக்கத் தொடங்கினாள். இதை சுகமதிக்குத் தெரியப்படுத்துவது அவசியம் எனத் தோன்றியது.

இதுவரை பேசியதைவிட மெல்லிய குரலில் சொன்னாள், ``நான் சொல்வதைக் கேட்டு அச்சப்படாதே. நமது பல்லக்கைத் தூக்கி வருகிறவர்கள் அண்ணகர்கள் அல்லர்.''

ஒரு கணம் நடுங்கி மீண்டாள் சுகமதி, ``என்ன சொல்கிறீர்கள் இளவரசி?''

``ஆம். நினைவுதெரிந்த நாள் முதல் பல்லக்கில் பயணிப்பவள் நான். பல்லக்குப் பயணத்தின் அத்தனை விதத்தையும் என்னால் எளிதில் கண்டறிய முடியும்.''

கண்ணிமைக்காமல் பார்த்தாள் சுகமதி.

``அண்ணகர்கள் பல்லக்கைத் தூக்குவதற்கும் மற்றவர்கள் பல்லக்கைத் தூக்குவதற்கும் எவ்வளவோ வேறுபாடுகள் உண்டு. அண்ணகர்கள் பல்லக்கைத் தூக்கிச்செல்வது நீரில் மிதக்கும் பூவைப் போன்றது. அதுவே மற்றவர்கள் தூக்கிச்செல்வது கூடையில் தூக்கிச்செல்லும் பூவைப்போன்றது. வீசும் காற்றுக்கும் தூக்கிச்செல்பவரின் தோள் குலுங்கலுக்கும் பூ ஆடிக் கொண்டேதான் இருக்கும்.''

``இவர்கள் அண்ணகர்கள் இல்லையா இளவரசி?''

``ஆம். எனக்கு முதலிலேயே சிறிய ஐயம் வந்தது. ஆனால், மேடு பள்ளத்தில் பல்லக்கைத் தூக்கி வந்ததாலும், சிறுபல்லக்கில் இருவர் மிக நெருக்கமாக உட்கார்ந்திருந்ததாலும் கண்டறியாமல் விட்டுவிட்டேன். இப்போது சமதளத்தில் செல்லும்போது எனது மகரக்குழைக் காதணிகள் காதுமடல்களிலிருந்து அசைந்து அசைந்து கழுத்தைப் போய்த் தட்டிக் கொண்டே இருந்தன. இவ்வளவு கனமான காதணிகள் இப்படி அசையும்படி அண்ணகர்கள் ஒருபோதும் பல்லக்கைத் தூக்கிச்செல்ல மாட்டார்கள். அதனால்தான் உனது காதில் மாட்டி அவை அசையும் விதத்தைப் பார்த்தேன்.''

``திரையை விலக்கிக் கீழே பார்த்தது?'' என்று கேட்டு முடிக்கும் முன் பொற்சுவை சொன்னாள், ``ஐயத்தை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டுமல்லவா? அதனால் விளக்கின் ஒளியில் தூக்கிச்செல்பவர்களின் கால்களைப் பார்த்தேன்.''

சுகமதியின் கண்கள் நடுங்கியபடியே அவளது முகத்தைப் பார்த்தன. பொற்சுவை சொன்னாள், ``அண்ணகர்களின் கால்களில் முடி இருக்காது. ஆனால், இந்தக் கால்களை நீ பார்க்கிறாயா?'' என்றாள்.

பதறினாள் சுகமதி, ``அப்படியென்றால் நம்மைத் தூக்கிச்செல்வது யார் இளவரசி?''

சற்று அமைதிக்குப் பிறகு சொன்னாள், ``நம் அண்ணகர்களை நமக்குத் தெரியாமலேயே மாற்ற, வேறு யாரால் முடியும்? நம் பேரரசர்தான் இதைச் செய்திருப்பார்.''

``ஏன்?''

``பாரியைக் கொல்ல நம் மூலம் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடாக இஃது இருக்கலாம்.''

சொல்லும்போதே பொற்சுவைக்கு வியர்த்து அடங்கியது. ``கொலையைத் தடுக்க வருவதாக நினைத்து, கொலையாளிகளை அழைத்து வந்துள்ளேன்.''

சுகமதிக்கு மயக்கம் வருவதுபோல் இருந்தது. பொற்சுவையின் கண்களைக்கூட அவளால் பார்க்க முடியவில்லை; நீர் பெருகியது.

பல்லக்கு சட்டென நின்றது. பறம்புவீரர்கள், ``பல்லக்கை இங்கு இறக்குங்கள்'' என்று சொல்வது கேட்டது.

பதறிய சுகமதி, பொற்சுவையின் கைகளை இறுகப்பற்றினாள்.

``நான் உங்களை இறங்க விட மாட்டேன்'' சொல்லிக் கொண்டிருக்கும்போதே கண்ணீர் பொங்கியது.

அவளின் பிடியிலிருந்து கைகளை விலக்கி, அவளின் தலையைத் தொட்டபடி பொற்சுவை சொன்னாள், ``பதற்றப்படாதே. நாம் எண்ணிய இடத்துக்குத்தான் வந்துள்ளோம். இனி பின்வாங்க முடியாது. நமது அறிவு நமக்குக் கைகொடுக்கும். நம்பிக்கையுடன் எதிர்கொள்வோம்.''

``இல்லை. நான் கடமை வழுவ மாட்டேன். உங்களுக்கு எந்தத் தீங்கும் நேர அனுமதிக்க மாட்டேன்'' என்று பதறினாள்.

``நீ எனது கனவின் மிச்சம். உனது வார்த்தைகளில்தான் அது முழுமைகொள்ளப் போகிறது. இங்கு என்ன நடந்தாலும் பல்லக்கை விட்டு நீ கீழிறங்கக் கூடாது'' என்று சொல்லியபடி சட்டெனத் திரை விலக்கி வெளியேறினாள் பொற்சுவை.

தூக்கிவந்த அறுவர் தலைவணங்கி நின்றிருந்தனர். அவர்களுக்கு அருகில் பறம்பு வீரர்கள் நால்வர் நின்றிருந்தனர். பல்லக்கிலிருந்து வெளிவந்ததும் எதிரில் இருந்த மரத்தின் அடிவாரத்தைப் பார்த்தாள். அங்கு நிறைய தீப்பந்தங்கள் எரிந்துகொண்டிருந்தன. மரத்தின் அடிவாரத்தில் இருந்த கல் இருக்கைகளில் ஆறேழு பேர் பேசிக் கொண்டிருந்தனர். இடது ஓரத்தில் ஆசான் கபிலர் இருந்தார்.

பாட்டாப்பிறையின் வலது ஓரத்தில் பாரி இருந்தான். இடையில் முடியன், ஈங்கையன், உதிரன், விண்டன், காலம்பன் ஆகியோர் இருந்தனர். ஆனால், பொற்சுவை யாரையும் பார்க்கவில்லை. நேராக, கபிலரை நோக்கி நடக்கத் தொடங்கினாள்.

மனதுக்குள் எண்ணங்கள் புரண்டெழுந்து கொண்டிருந்தன. சோழனின் சதித்திட்டத்தை எப்படிச் சொல்வது? உடன் வந்துள்ள பாண்டிய வீரர்களின் தாக்குதலை எப்படித் தடுப்பது? எதுவுமே அவளுக்குப் பிடிபடவில்லை. கண்களுக்கு வேறெதுவும் தெரியவில்லை. ஆசானின் முகம் மட்டுமே தெரிந்தது. அவரின் அருகில் வந்து நின்றாள் பொற்சுவை. `வேகமாக வந்துவிட்டோமா?' என ஒரு கணம் எண்ணினாள். என்ன முடிவெடுப்பது என்பதறியாத பதற்றத்தோடு பணிந்து ஆசானின் கால்களைத் தொட்டாள்.

கண் கலங்கிய கபிலர், அவளுக்கு வாழ்த்து சொல்லி எழுந்திருக்கச் சொன்னார். ஆனால், பொற்சுவையால் எழுந்திருக்க

முடியவில்லை. அடுத்து என்ன செய்வது என்பது அவளுக்குப் பிடிபடவில்லை. குனிந்து வணங்கியபடி இருந்தவளின் மனம் கொந்தளித்தபடி இருந்தது. தன் வழியாகப் பாரியை எப்படி அடையாளம் கண்டறிவார்கள்; தாக்குதலுக்கு என்ன உத்தியை வகுத்திருப்பார்கள் எனச் சிந்தித்தபடியே எழுந்தாள்.

ஆசான் வாஞ்சையோடு அவளின் தலையைத் தொட்டு வாழ்த்து சொல்லியபடி இருக்க, அவர் முகத்தைப் பார்த்ததும் பொற்சுவை கேட்டாள், ``ஈங்கையன் எங்கு இருக்கிறார் ஆசானே?''

சற்றே அதிர்ச்சிக்குள்ளானார் கபிலர். `பாரியைத்தானே கேட்பாள் என நினைத்தோம். ஏன் ஈங்கையனைக் கேட்கிறாள்?' எதுவும் புரியவில்லை. இடதுகையை நீட்டி மூன்றாவதாக நிற்பவனைக் காட்டினார் கபிலர்.

பொற்சுவையின் கால்கள் அவனை நோக்கித் திரும்பின. பல்லக்கின் மேற்பிடிமானங்கள் முழுவதும் உள்ளொடுங்கிய ஈட்டிகளால் ஆனவை. `பொற்சுவை, கபிலரை வணங்கிய பிறகு பாரியை வணங்கிப் பேசுவாள். அந்தக் கணத்தில் அவனைத் தாக்கி அழிக்கவேண்டும்' என்னும் ஆணையோடுதான் நன்கு பயிற்சிபெற்ற வீரர்களைக் குலசேகரபாண்டியன் அனுப்பியிருந்தார். பொற்சுவையின் கால்கள் ஈங்கையனை நோக்கி நகரத்

தொடங்கியபோது பாண்டிய வீரர்கள் பல்லக்கோடு ஒட்டியுள்ள ஈட்டியை இறுகப்பற்றினர்.

பொற்சுவையின் மனம் தள்ளாடியது. `பாரி எங்கு இருக்கிறான்; ஒரு கணமேனும் அவன் முகத்தைப் பார்க்க வேண்டும்' என மனதுக்குள் தோன்றியது. `ஒருவேளை அந்த முகத்தைப் பார்த்துவிட்டால், தன்னை அறியாமலே கைகள் குவிந்து தாள்பணிந்துவிடுவோம். வேண்டாம்' என மனதின் அடங்காத தவிப்போடு மூன்றாம் நிலையில் இருந்த ஈங்கையனின் முன்னால் வந்து நின்றாள். உடன் நிற்கும் யாருக்கும் எதுவும் புரியவில்லை.

ஈங்கையனைப் பார்த்தபடி கைகளைக் குவித்து கால் தொட்டு வணங்க மண்டியிட்டாள் பொற்சுவை. ஈங்கையன் பதற்றத்தோடு அவளைத் தடுக்க முற்படும்போது பாண்டிய வீரர்களின் ஈட்டிகள் மின்னலெனப் பாய்ந்தன. அருகில் நிற்பவர்கள் என்னவென்று அறியும் முன்பு அடுத்தடுத்து இறங்கின ஈட்டிகள். மற்றவர்கள் ஈங்கையனை நோக்கி ஓடிவருவதற்குள் கபிலரின் முகம் நோக்கிப் பீய்ச்சியடித்தது ஈங்கையனின் குருதி. கணநேரத்தில் பாட்டாப்பிறை போர்க்களமானது.

எதிர்பாராத கணத்தில் தாக்குதலில் இறங்கிய பல்லக்குத் தூக்கிகளைச் சுற்றி நின்றிருந்த பறம்புவீரர்கள், கண்ணிமைக்கும்

நேரத்தில் வெட்டிச் சரித்தனர். ஒருவன்கூட உயிர் தப்பவில்லை. அலறல் ஒலி மேலெழும் முன்பே எல்லாம் முடிந்தன.

தாக்குதல் ஓசை கேட்டுப் பதற்றத்தோடு பல்லக்கை விட்டு வெளியில் வந்தாள் சுகமதி. மரத்தடியைப் பார்த்த கணத்தில் ``ஐயோ... இளவரசி..!'' என்று உயிர் உருகக் கத்திக் கொண்டு ஓடினாள்.

# பாரி – 103

**த**ட்டியங்காட்டில் ஆறாம்நாள் போர் தொடங்கவிருந்தது. இருபக்கமும் படைகள் அணிவகுத்தன. வழக்கம்போல் திசைவேழர் பரண்மீது ஏறினார். நேற்றைப்போல இன்று இருக்காது; தாக்குதல் முழு அளவில் இருக்கும் என்று நினைத்தபடி நாழிகைக்கோலின் நிழலை உற்றுநோக்கிக் கொண்டிருந்தார். இருபக்கப்படைப் பிரிவுகளும் ஒன்றினை ஒன்று எதிர்நோக்கியபடி இருந்தன.



போர் தொடங்கும் நேரம் நெருங்கிய பின்னும் உதியஞ்சேரலும் செங்கனச்சோழனும் கூடாரத்தை விட்டு வெளிவரவில்லை. ஈங்கையன் தங்களுக்கு வழங்கிய வாக்குப்படி நடந்துகொண்டானா என்பது தெரியவில்லை. ஆனால், பறம்புப்படை முழுமையாகத் தட்டியங்காட்டில் வந்து அணிவகுத்து நிற்கிறது. அப்படியென்றால் பாரி கொல்லப்படவில்லையா; என்னதான் நடந்தது என்பதை அறிய இருவரும் தவித்தனர்.

இன்னொரு பக்கம் குலசேகரபாண்டியனின் கூடாரத்தில் பொதியவெற்பன் இருந்தான். நேற்றிரவு இரலிமேடு நோக்கிப் புறப்பட்ட பொற்சுவை இன்னும் வந்துசேரவில்லை. அழைத்துச்சென்ற காராளியும் வரவில்லை என்று ஆறு ஊர்களிலும் உள்ள உளவுக்காரர்களிடமிருந்து உறுதியான செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன.

அப்படியென்றால், அங்கு என்னதான் நடந்தது; பல்லக்குத்தூக்கிகளாக அனுப்பப்பட்ட பாண்டியநாட்டு வீரர்கள் தங்களுக்கு இட்டபணியைச் செய்தார்களா; பாரி கொல்லப்பட்டானா, இல்லையா; பறம்புப்படை வழக்கம்போல் வந்து அணிவகுத்து நிற்பதைப் பார்த்தால் பாரி கொல்லப்படவில்லை என்று தெரிகிறது.

ஒருவேளை பாரி தாக்குதலுக்கு உள்ளாகி அவனுக்குச் சிகிச்சையளிக்கின்றனரா; பொற்சுவை என்ன ஆனாள் என்ற

விடைதெரியாத கேள்விகளுக்குமுன் நிலைகொள்ளமுடியாத பதற்றத்தில் நின்றுகொண்டிருந்தார் பேரரசர் குலசேகரபாண்டியன்.

போர் தொடங்கும் நேரம் நெருங்கியதால் செங்கனச்wசோழன், ‘‘நாம் முதலில் போர்க்களம் புகுவோம்; இல்லையென்றால் பாண்டியனுக்கு நம்மீது ஐயம் உருவாகும். ஈங்கையனின் தாக்குதல் என்னதான் ஆனதென்று அங்கிருந்தபடியே தெரிந்துகொள்ள முயல்வோம்’’ என்று உதியஞ்சேரலிடம் சொன்னான். அவனது கூற்றினை உதியஞ்சேரலும் ஏற்றான். இருவரும் கவசம்பூண்டு போர்க்களம் புறப்பட்டனர்.

பாண்டியனுக்கும் இதே நிலைதான். நாம் போர்க்களத்தில் இல்லையென்றால் சேரனுக்கும் சோழனுக்கும் நம்மீது ஐயம் வரும். எனவே வழக்கம்போல் நாம் போர்க்களம் செல்வோம். பாரியின் மீதான நம் வீரர்களின் தாக்குதல் பற்றி அங்கிருந்தபடியே அறிந்துகொள்ள முயல்வோம்’’ என்று சொல்லி, பொதியவெற்பனுடன் போர்க்களம் புறப்பட்டார் குலசேகர பாண்டியன்.

பறம்பு வீரர்கள் வழக்கம்போல் முழு ஆற்றலோடு களத்தில் நின்றனர். ஆனால், பறம்புத் தளபதிகள் எல்லோரும் பெருங்கலக்கத்தில் இருந்தனர். நேற்றிரவு நடந்த நிகழ்வு அவர்கள் அத்தனை பேரையும் உலுக்கியிருந்தது. பாட்டாப்பிறையில்

அனைவரும் இருக்கும்பொழுதே பாரியைக் கொல்ல நடந்த முயற்சி அவர்களைப் பேரதிர்ச்சிக்கு உள்ளாக்கியது.

சுகமதியின் கதறலும் கபிலரின் கண்ணீரும் யாரையும் இயங்கவிடவில்லை. எல்லோரும் நிலைகுலைந்து நின்றனர். பாண்டிய வீரர்கள் எறிந்த ஈட்டிகள் பொற்சுவையையும் வீழ்த்தின. கபிலர் ஓடிப்போய் அவளைத் தூக்கும் முன்பே உயிர்பிரிந்தது. அதன் பின்புதான் பல்லக்கிலிருந்து சுகமதி வெளியில் வந்தாள்.

பொற்சுவையின் நிலைகண்டு கதறிக் கொண்டு ஓடினாள். குருதியில் மூழ்கிக்கிடந்த பொற்சுவையின் கால்களைத் தனது மடியில் எடுத்துவைத்துக் கொண்டு காடதிரக் கதறினாள். அவள் சொல்லி அழுத சொற்களை நினைக்க நினைக்க முடியனின் கண்களில் நீர்பொங்கியபடி இருந்தது.

பறம்புப்படையின் முன்பகுதியை வழக்கம்போல் அவன் குதிரையில் சுற்றிவந்தான். எதிரிகளும் தங்களின் படைகளை அணிவகுத்து நிறுத்தியிருந்தனர். தேர்ப்படையில் கருங்கைவாணன் நின்றுகொண்டிருந்தான். படையின் நடுப்பகுதியில் மையூர்கிழார் நின்றுகொண்டிருந்தார். குதிரையில் சென்றுகொண்டே எல்லாவற்றையும் பார்த்தபடி படையைக் கடந்தான் முடியன். அவனால் சிந்தனையை ஒருமுகப்படுத்த முடியவில்லை.

எப்பொழுதும்போல் படையின் இறுதிப்பகுதியில் நின்றுகொண்டிருந்தான் தேக்கன். நேற்றிரவு அவன் நாகக்கரட்டில் கூடாரத்தில் தங்கியிருந்தான். நடந்த தாக்குதலைக் கேள்விப்பட்டு அவசர அவசரமாக அங்கு ஓடினான். பாட்டாப்பிறைக்குத் தேக்கன் வந்து நின்றதும் அவன் கால்களைப்பற்றிக் கதறினார் கபிலர். பெரும்புலவரின் கண்ணீர்பட்ட கணத்தில் தேக்கனின் உடலே நடுங்கியது.



குருதிபொங்கும் பொற்சுவையின் உடலை மடியில் கிடத்தியிருந்த கபிலர், எதிரில் சாய்ந்துகிடந்த ஈங்கையனையும் பார்த்துக் கதறிக்கதறி அழுதார். எல்லாக் கொலைகளுக்கும் தானே காரணம் ஆகிவிட்டதாக நினைத்தார். அத்தாக்குதலை யாராலும் விளங்கிக் கொள்ள முடியவில்லை.

ஈங்கையன்மீதான இரக்கமும் தங்களின் கண்முன்னால் ஒரு பெண் கொலைசெய்யப்பட்டுவிட்டாள் என்ற பதற்றமும் அனைவரையும் நிலைகுலையச் செய்தன. நள்ளிரவுக்குப்பின் சுகமதி பேசத் தொடங்கினாள். பொற்சுவையின் உடலில் கசிந்துகொண்டிருக்கும் குருதி பாரியின் உயிர்காக்கச் சிந்தப்பட்டது என்பதை அறிந்தபொழுது பறம்பே உறைந்துபோனது.

திசைவேழர் தன் கைகளை உயர்த்தியவுடன் போர்முரசங்கள் முழங்கின. தட்டியங்காட்டுப்போரின் ஆறாம்நாள் தொடங்கியது. படைகளின் தாக்குதல் தொடக்கத்திலேயே வீறுகொண்டு இருப்பதுபோல் அவருக்குத் தெரிந்தது. பறம்புப்படை வழக்கம்போல் அணிவகுத்திருந்தது. இரவாதன் இரவு முழுவதும் குளவன்திட்டின் அடிவாரத்தில் தனது படையைப் பயிற்றுவித்தான். அவனுடன் சேர்ந்து முஞ்சலைத் தாக்கி நீலனை மீட்பதற்கான திட்டத்தின் தளபதிகளான கரிணியும் பிடறிமானும் இடமும் வலமுமாக வந்து நின்றனர். குளவன் திட்டிலிருந்து நேராகத் தட்டியங்காட்டுக்கு வந்துசேரத்தான் பொழுது சரியாக இருந்தது. நேற்றிரவு நடந்தது எதுவும் இரவாதனுக்குத் தெரியாது. வழக்கம்போல் பீறிடும் ஆற்றலோடு களம்வந்து நின்றான் இரவாதன்.

போரின் முதல் நாழிகையிலேயே ஆயுதங்களின் சீற்றம் அதிகமிருந்தது. குறிப்பாக வேந்தர்படையின் தாக்குதல் மிகுவலிமையோடு இருந்தது. பறம்பின் விற்படை எதைநோக்கித் திரும்பி நகர்வது என்பதை இன்னும் முடிவுசெய்யாமல் இருந்தது. எப்பொழுதும் உதிரன் போர்தொடங்கிய கணத்திலேயே அதனை முடிவுசெய்வான். ஆனால் இன்று அவன் முடிவேதுமின்றிக் களத்தில் நின்றான்.

நேற்றிரவு பாட்டாப்பிறையில் தாக்குதல் நடத்தபொழுது அவனது கையருகேதான் ஈங்கையன் இருந்தான். அவன்மீது ஈட்டிகள் பாய்ந்தபொழுது துடித்துப்போனான் உதிரன். தாக்குதல் நடத்திய பாண்டியனின் பல்லக்குத் தூக்கிகளை கணநேரத்தில் பறம்புவீரர்கள் வெட்டிவீசினர். ஆனாலும் ஈங்கையனை இழந்ததால் வந்த ஆவேசம் கட்டுக்கடங்காமல் இருந்தது.

சுகமதி பேசத் தொடங்கிய பிறகு நிலைமை தலைகீழாக மாறியது. வேட்டுவன் பாறைக்கு அருகில் சிகிச்சை எடுத்துவந்த ஈங்கையனையும் அவன் தோழர்களையும் நம்பிக்கைக்கு உரியவர்கள் என்று தெரிவித்தது நீலனும் உதிரனும்தான். அவர்களைப்பற்றி இன்னும் நன்கு விசாரித்து அறியாமல் தவறு செய்துவிட்டோமோ என்று தோன்றியது. ஆனாலும் துரோகம் கழுத்துவரை வந்து நின்றதை யாராலும் எளிதில் கடக்க முடியவில்லை. தேக்கன், முடியன், உதிரன், விண்டன் என எல்லோரும் தட்டியங்காட்டில் நிலைகுலைந்து நின்றுகொண்டிருந்தனர்.

வேந்தர்களின் தரப்பில் குலசேகரபாண்டியன், செங்கனச்சோழன், உதியஞ்சேரல், பொதியவெற்பன் ஆகிய நால்வரும் விடை அறிய முடியாத கேள்விகளோடு நின்றுகொண்டிருந்தனர். அவர்களால் போர்க்களத்தில் கவனங்கொள்ள முடியவில்லை. தாம் பெரிதும் நம்பிய திட்டத்தால்

ஏற்பட்ட பயனென்ன என்பதை எவ்வகையிலும் உறுதிப்படுத்த முடியாமல் தவித்துக் கொண்டிருந்தனர்.

ஆனால், அவர்கள் தளபதிகளான உறுமன்கொடி, துடும்பன், வெறுகாளன், மாகனகன், கருங்கைவாணன், மையூர்கிழார் ஆகிய யாருக்கும் எவ்விதக் குழப்பமும் பதற்றமும் இல்லை. நேற்றிரவு நடந்த எதுவும் அவர்களுக்குத் தெரியாது. எனவே, அவர்கள் போர்க்களத்துக்குரிய செயல்திட்டங்களோடு நின்றனர்.

தாக்குதலின் தன்மையை வழக்கம்போல் குளவந்திட்டிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தான் பாரி. நேற்றிரவு கண்களுக்கு முன் பீறிட்ட குருதியெல்லாம் தன்பொருட்டே பீறிட்டது. கபிலரின் மடிமீது சாய்ந்துகிடந்த பொற்சுவையை நெடுநேரம் பார்த்துக் கொண்டே இருந்தான். இன்னொரு புறம் ஈங்கையனின் உடல் கிடந்தது. சுகமதி சொல்லக்கேட்ட பின் அவனது உடலை யாரும் மடிமீது தூக்கி வைத்துக் கொள்ளவில்லை.



கொல்லப்பட்ட இருவருக்குமாகக் கலங்கிய உள்ளம் சிறிதுநேரத்திலேயே ஒருவருக்கு எதிராக மாறியது. பெருகிய குருதி துரோகத்தால் காய்ந்தும் தியாகத்தால் ஒளிர்ந்தும் வெளிப்பட்டது.

ஈங்கையன் தன் குலங்காக்கத்தானே இக் கொடிய செயலுக்கு ஒத்துக் கொண்டுள்ளான். தலைமுறை தலை முறையாகப் போராடியும் சோழப்பேரரசை வீழ்த்த முடியவில்லை. இந்நிலையில் தன் குலங்காக்க அவன் செய்த கடைசி முயற்சியாக இது இருந்துள்ளது.

ஏதோ ஒருவகையில் அவனது குருதியிலும் தியாகத்தின் சிற்றொளி அடங்கியிருந்தது. மீதமிருக்கும் கரும்பாக்குடி வீரர்கள் அனைவரும் இரவோடு இரவாகப் பறம்பு வீரர்களால் சூழப்பட்டனர். ஒரு சிலருக்கு மட்டுமே இத்திட்டம் தெரிந்திருந்தது. மற்றவர்களுக்குத் தெரியவில்லை. இவர்களை என்ன செய்வது; கைது செய்து சிறையிடுவது என்ற பழக்கமே பறம்பில் இல்லை. தலைவன் செய்த தவற்றுக்காக மற்றவர்களை தண்டித்தல் தகுமா; இப்படியே அனுப்பினால் எதிரிகளோடு சேர்ந்து நமக்கு எதிராகப் போரிடவும் வாய்ப்புள்ளது என்று பறம்புத் தளபதிகள் தங்களது அறத்திற்கும் ஈங்கையனின் துரோகத்திற்கும் இடையில் முடிவெடுக்க முடியாமல் அல்லாடினர்.

பாரி குளவன்திட்டு நோக்கிப் புறப்படும்பொழுது ‘‘ஈங்கையனின் இறுதிச் சடங்கினைச் செய்ய அவர்களை அனுமதியுங்கள்’’ என்று தேக்கனிடம் சொல்லி விட்டுப் போனான். அவனது சொல்லிலிருந்தே இச்செயலின்பால் அவன் கொண்டுள்ள கருத்தைத் தேக்கனால் புரிந்துகொள்ள முடிந்தது.

“போர் முடியும் வரை ஆயுதங்களைத் தொடக்கூடாது. மீறி ஆயுதங்களைக் கைக் கொண்டால் அதற்குரிய விளைவிற்கு ஆளாவீர்கள்” என்று கூறி, அவர்கள் இருக்க வேண்டிய இடத்தையும் தெரிவித்தான். அவர்கள் அனைவரையும் காரமலையின் பின்புறம் அழைத்துச்செல்ல, பறம்புவீரர்கள் ஆயத்தமாயினர்

தேக்கன் தட்டியங்காட்டுக்கு வந்துசேர்ந்த சிறிதுநேரத்திலேயே போர் தொடங்கியது. வழக்கம்போல் இருபக்க அணிகளும் போரிட்டுக் கொண்டிருந்தன. அவனுடைய எண்ணங்கள் முழுக்க நேற்றிரவு நடந்த நிகழ்வுபற்றியே இருந்தது. ‘கபிலர், பொற்சுவை வருவதற்கு அனுமதிகொடுக்கவில்லை என்றால் என்ன நடந்திருக்கும்? குகைக்காவலின்பொழுது ஈங்கையனால் பாரியை ஒன்றும் செய்துவிட முடியாது. அது கொடிவரிசைகொண்ட குகை. பாரி எங்கு துயில்கிறான் என்பதையே கண்டறிய முடியாது. காவல் எல்லையைத் தாண்டி உள்ளே நுழைந்திருந்தால் வெளிவருதற்கான வழியையே கண்டறிய முடியாது. ஒன்றினுள் ஒன்றாகப் பின்னல் தொடர்புகளைக் கொண்ட அக்குகைக்குள் நுழைபவன் எளிதில் சிக்கிக் கொள்வான். ஈங்கையனின் நோக்கம் அனைவராலும் அறியப்பட்டிருக்கும்.

கோட்டைகளிலும் அரண்மனையிலும் நடக்கும் சதியைப்போல எந்தவொரு தாக்குதலையும் பறம்பில் எளிதில் நடத்திவிட

முடியாது. ஆனால் யாராக இருந்தாலும் ஏமாறும் ஓர் இடமுண்டு. அதுதான் பறம்பு வீரர்கள் பல்லக்கின் தன்மையை அறியாமல் பாட்டாப்பிறை வரைக்கும் அதை அனுமதித்தது. அந்த வகையான பல்லக்கினை இதற்கு முன்னால் பார்த்தறியாததாலும் இரவு நேரமாக இருந்ததாலும் அதன் மேற்புறத்தில் மறைத்து வைக்கப்பட்டிருந்த ஈட்டிகளைக் கவனிக்காமல் விட்டனர்.

சில நாள்களாக ஈங்கையனின் தாக்குதல் சொல்லிக் கொள்ளும்படி இல்லை. அதற்குக் காரணம் அவன் வகுக்கப்பட்ட படையினூடே தாக்கிமுன்னேறும் பயிற்சியற்றவன் என நினைத்தோம். ஆனால், அவன் எதிரிகளால் இயக்கப்பட்டுள்ளான் என்பதை அறியாமல் போய்விட்டோம்' என்று எண்ணங்களை ஓடவிட்டபடி ஈட்டியை ஊன்றிப்பிடித்து நின்றுகொண்டிருந்தான் தேக்கன்.

பொழுது உச்சத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது. பறம்பின் வீரர்கள் வழக்கம்போல் தாக்குதலை நடத்திக் கொண்டிருந்தனர். தனித்த உத்திகள் வகுக்கப்படாத நிலையில் நின்றுதாக்கும் முறையை அவர்கள் கடைப்பிடித்துக் கொண்டிருந்தனர். வாட்படைத் தளபதியாக இருக்கும் தேக்கன் பின்வரிசையில் இருப்பதால் இளம்வீரன் அருவன் படையை வழிநடத்தினான்.

முடியனின் சிந்தனையில் வெறுமை மேவி இருந்தது. பறம்பின் உள்நிலத்துக்குள் தனது கைக்கெட்டும் தொலைவில் எதிரியின்

ஈட்டிகள் பாய்ந்திருக்கின்றன என்றால் நாம் இன்னும் எச்சரிக்கையோடு இருந்திருக்க வேண்டும். தான் தவறவிட்ட இடமென்ன என்று சிந்தித்தபடி இருந்தான். வேந்தர்படையின் தாக்குதலில் ஏதோ வேறுபாடு இருப்பதை அவ்வப்பொழுது பார்க்க முடிந்தது. ஆனால், பெரிதாக எதுவும் தோன்றவில்லை.

பகற்பொழுதின் இருபதாவது நாழிகை நெருங்கிக் கொண்டிருந்தபொழுது வேந்தர்படையின் தாக்குதலில் வேகம் கூடியது. அத்தாக்குதலை எதிர்கொள்ளப் பறம்பு வீரர்களுக்கு சற்றே நேரம் தேவைப்பட்டது. வெறும் தடுப்பரண் தாக்குதல் மட்டுமே போதாது, உத்தியை மாற்ற வேண்டும் என்பதை உதிரன்தான் முதலில் உணர்ந்தான். கூவல்குடியினர் மூலம் செய்தி முடியனுக்குச் சொல்லப் பட்டது. அவன் அதை உணர்ந்து அடுத்து என்ன நடக்கும் என்ற சிந்தனையில் இருந்தான். ஆனால், எதிரியின் தாக்குதல் திட்டம் என்னவாக இருக்கும் என்பதைக் கணிக்க முடியவில்லை. வேந்தர்படையின் தாக்குதல் பலமடங்கு வீரியமடைந்தது.

அப்பொழுதுதான் முடியன் ஒன்றைக் கவனித்தான். காலையிலிருந்து கருங்கைவாணன் தேர்ப்படையிலேயே நின்றிருந்தான். ஏன் வேறுபக்கம் போகாமல் இங்கேயே இருக்கிறான் என்று சிந்தித்த பொழுதுதான் மையூர்கிழாரின் நினைவு வந்தது. தலைமைத்தளபதியிடம் மற்ற தளபதிகளுக்குச்

செய்தியைச் சேர்க்க மூன்று போர்ப்பணியாளர்கள் இருப்பர். தனித்த ஆடையமைப்புகொண்ட அவர்கள் மூவரும் இன்று மையூர்கிழாரின் அருகில் நின்றனர். முடியன் காலையில் பார்த்த காட்சியை இப்பொழுது மீண்டும் நினைவுபடுத்திப்பார்த்தான். சற்றே அதிர்ச்சியாக இருந்தது.

‘இன்றைய போரின் தலைமைத் தளபதியாக மையூர்கிழாரா களத்தில் நிற்கிறான்?’ எண்ணிப்பார்த்தபடியே அதனை உறுதிசெய்தான். அப்படியென்றால் தாக்குதலின் உத்தி வழக்கமானதாக இருக்காது. நமது தாக்குதலை உடனடியாக வேகப்படுத்த வேண்டும் என முடிவுசெய்தான். கூவல்குடியினர் மூலம் அனைத்துத் தளபதிகளுக்கும் செய்தி அறிவிக்கப்பட்டது.

நிலைமையை உணர்ந்தவுடன் உதிரன் தனது விற்படையை வேந்தர்படையின் நடுப்பகுதியை நோக்கி முன்னகர உத்தரவிட்டான். தொலையிலக்க அம்புகள் சீற்றம் கொள்ளத்தொடங்கின.

தாக்குதலின் வேகம் இருபக்கமும் மிக வலிமையோடு இருந்தது. வேந்தர்படை பறம்பின் விற்படையை மட்டும் தற்காத்து எதிர்கொண்டது. மற்ற படைகளைத் தாக்கி முன்னேறியது. பறம்புப்படைகள் வேந்தர்படையை முழுமையாக எதிர்கொண்டன.

முடியனின் உத்தரவு இரவாதனை அடையும்பொழுது சரியாக இருபது நாழிகை முடிந்திருந்தது. நேற்றுக்கு முந்தைய இரவில் பேசப்பட்டபடி கடைசி பத்து நாழிகைக்கான போர் உத்தி தொடங்கி விட்டது எனக் கருதிய இரவாதன் தனது குதிரைப்படையின் தாக்குதலை எண்ணிப்பார்க்க முடியாத வேகத்தோடு முன்னெடுத்தான்.

நேற்றிரவு நடந்ததெதுவும் இரவாதனுக்குத் தெரியாது. அதே நேரம் அதற்கு முந்தைய நாளிரவு பேசப்பட்ட தாக்குதல் உத்தியை நிறைவேற்றும் நிலையில் முடியன் இல்லை. இப்பொழுது அவன் வேந்தர்படையின் தாக்குதலை எதிர்கொள்வதற்கான திட்டத்தையே வகுத்தான். முடியனின் சிந்தனை முழுவதும் மையூர்கிழாரைச் சுற்றியே இருந்தது. அவன் கருங்கை வாணனைப்போலப் பெருவீரனல்லன்; ஆனால், பறம்பைப்பற்றியும் பறம்பின் தாக்குதல்முறையைப் பற்றியும் ஓரளவு தெரிந்தவன். எனவே, அவனை மிகுந்த எச்சரிக்கையோடு கையாளவேண்டும் என எண்ணினான்.

இரவாதனின் தாக்குதல் சீறி முன்னேறியது. நேற்று இரவு முழுவதும் பயிற்சி பெற்ற அப்படையணியினர் தங்களின் வேலைத்திட்டத்தை நிறைவேற்றத் தொடங்கினர். மூஞ்சலை அடையும் வரை யார் முன்னிலையிலிருந்து படைநடத்த வேண்டும்

என்று இரவாதன் தீர்மானித்திருந்தான். அவர்கள் அதேபோல, படையை மூஞ்சலை நோக்கி அழைத்துச்சென்றுகொண்டிருந்தனர்.

மற்ற பகுதியில் வேந்தர்படையின் தாக்குல் வலிமைமிகுந்ததாக இருந்தது. பறம்புப்படை திறனோடு அதனை எதிர் கொண்டது. உதிரன் தனது விற்படையை எப்பக்கமாகக் கொண்டுசெல்ல என்று கேட்டு முடியனுக்குச் செய்தி அனுப்பினான். முடியனோ ஆபத்து எப்பக்கம் அதிகம் என்பதை இன்னும் கணிக்கவில்லை. கருங்கைவாணனின் மீதும் அவனுக்கு ஐயம் இருந்தது. மையூர்கிழாரின் மீதும் அவனுக்கு ஐயம் இருந்தது. இருவரில் யாரை நோக்கி உதிரனின் படையணியைத் திருப்புவது என்பதை முடிவுசெய்ய, சற்றே நேரம் தேவைப்பட்டது.

வழக்கம்போல் பறம்பின் விற்படையை எதிர்கொள்ள முடியாமல் வேந்தர்படைத் தளபதி துடும்பன் பின்வாங்கத் தொடங்கினான். வாட்படைத் தளபதி மாகனகனை, பறம்புத் தளபதி அருவன் எதிர்கொண்டான். தாக்குதல்கள் தீவிரமடைந்து கொண்டிருந்தன. தேர்ப்படைத்தளபதி வெறுகாளனோடு கருங்கைவாணனும் இணைந்து கொண்டான். எனவே, பறம்புத் தளபதி விண்டனால் முன்னகர முடியவில்லை. ஆனால், பின்வாங்காமல் சமாளித்துக் கொண்டிருந்தான். மையூர்கிழார் எப்பக்கம் போகப்போகிறான்; அவனது உத்தி என்னவாக

இருக்கிறது என்பதை அறிவதிலேயே முடியன் கவனமாக இருந்தான்.

இந்நிலையில் இரவாதனின் தலைமையிலான குதிரைப்படை நினைத்துப் பார்க்க முடியாத வேகத்தில் மூஞ்சலை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தது. ஏற்கெனவே திட்டமிட்டபடி மூஞ்சலை ஒரே நேரத்தில் மூன்று முனைகளிலிருந்து தாக்குதல் தொடுக்க வேண்டும். முடியன் ஒருபக்கமும் விண்டன் ஒருபக்கமும் தாக்கி மூஞ்சலின் அரணை உடைக்க வேண்டும். உடைத்தவுடன் உள்ளே நுழையாமல் முன்றடுக்கு அரணை முழுமையாக அழிக்கும் பணியைச் செய்ய வேண்டும். உள்நுழைந்து தாக்கி நீலனை மீட்கும் பணி இரவாதனுடையது. அதே சிந்தனையோடு இரவாதனின் படை முன்னகர்ந்து கொண்டிருந்தது.

குளவன்திட்டிலிருந்து பார்த்துக் கொண்டிருக்கும் பாரிக்கு, களத்தில் நடக்கும் தாக்குதலில் வேறுபாடுகள் இருப்பதுபோல் தெரிந்தது. ஆனால், என்னவென்று பிடிபடவில்லை. கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். இரவாதன் தலைமையிலான குதிரைப்படை சீறும் அம்புபோல் எதிரிகளைக் கிழித்து உள்நுழைந்துகொண்டிருந்தது. குளவன் திட்டிலிருந்து பார்க்கும்பொழுது அதன் வேகத்தைத் துல்லியமாகக் கணிக்க முடிந்தது. மற்ற படைப்பிரிவுகளோடு வேந்தர்படை மிகக்கடுமையாகப் போரிட்டுக் கொண்டிருக்கும்பொழுது

குதிரைப்படையை மட்டும் ஏன் அவ்வாறு எதிர்கொள்ளாமல் இருக்கின்றனர் என்ற ஐயம் உடனே தோன்றியது. களத்தை இன்னும் சற்றுநேரம் கூர்ந்துகவனித்தான் பாரி.

எதிரிகள் மாறுபட்ட உத்திகளைப் பயன்படுத்துகின்றனர். நம் வீரர்கள் அதைப் புரிந்துகொண்டு செயலாற்ற வேண்டும் என்று தோன்றியது. இவ்வெண்ணம் உருவாகிக் கொண்டிருக்கும்போதே இரவாதனின் குதிரைப்படை பாதித் தொலைவைக் கடந்து உள்ளே போய்விட்டது. நினைத்ததைவிட வேகமாக அவன் உள்ளே போய்க் கொண்டிருந்தான். அவனைச் சிக்கவைக்க எதிரிகள் வகுத்த போர் உத்திக்குள் மிகவேகமாக உள்நுழைந்து கொண்டிருந்தான். உடனடியாகக் கூவல்குடியினருக்கு உத்தரவிட்டான் பாரி.

குளவன்திட்டிலிருந்து கூவல்குடியினரின் மறைபொருள் குறிப்பு நாகக்கரட்டிலிருக்கும் கூவல்குடியினருக்கு வந்து சேர்ந்தது. வாரிக்கையன் தலைமையில் செய்தியைச் சொல்வதற்கான வீரர்கள் அனைவரும் அங்கே இருந்தனர். இரவாதன் வேகத்தைக் கட்டுப்படுத்தி, பின்தங்கச் சொல்வதற்கான உத்தரவினைப் பாரி தெரிவித்திருந்தான். உடனடியாக அதற்கான ஓசை எழுப்பப்பட்டு, இரிக்கிச்செடியின் ஒளிரும் பால்கொண்ட குறிப்புகள் காட்டப்பட்டன.

நாகக்கரட்டிலிருந்து ஓசை எழுப்பப் பட்டவுடன் அது யாருக்கு என்பதைத்தான் முதலில் அனைத்துத் தளபதிகளும்

பார்ப்பர். அது குதிரைப்படைத் தளபதிக்கான குறிப்போடு சொல்லப்படும் ஓசையாதலால் மற்றவர்கள் தாங்கள் முன்னெடுக்கும் தாக்குதலில் கவனம் செலுத்துவர். இரவாதனோ மூஞ்சலை அடையும் நோக்கோடு மின்னல் வேகத்தில் முன்னேறிக் கொண்டிருந்தான். அவனது காதில் எவ்வித ஓசையும் விழவில்லை. அவன் தனது கவனத்தை எதைநோக்கியும் திருப்ப ஆயத்தமாக இல்லை. மூஞ்சலின் அரண் உடைந்து சிதறும் கணத்தைக் காணும் நோக்கில் குதிரையை விரட்டிக் கொண்டிருந்தான்.

நாகக்கரட்டிலிருந்து மீண்டும் மீண்டும் ஓசை எழுப்பப்படுவதை சிறிதுநேரங் கழித்தே முடியனால் உணரமுடிந்தது. அது இரவாதனுக்கானது, அவன் எதிரிப் படைக்குள் அதிக தொலைவு உள்ளே போயுள்ளான் என்பது அதன் பிறகுதான் தெரியவந்தது. அப்பொழுதுதான் நேற்றுக்கு முந்தைய நாள் உருவாக்கப்பட்ட திட்டம் நினைவுக்கு வந்தது. நேற்று இரவு நிகழ்ந்த நிகழ்வால் அத்திட்டத்தை நிறைவேற்றுதல் குறித்து வேறுயாருடனும் முடியன் பகிர்ந்துகொள்ளவில்லை. ஆனால், இரவு முழுவதும் பயிற்சியிலிருந்த இரவாதன் காலையில் நேரடியாகக் களத்துக்கு வந்தான். ஏற்கெனவே, வகுக்கப்பட்ட திட்டப்படி இருபதாம் நாழிகை முடிந்தவுடன் அவன் முன்னேறிப்போகிறான் என்பது முடியனுக்குப் புரிந்தது.

ஆனால், இதற்குள் மையூர்கிழார் வகுத்த உத்தியும் இருக்கிறது என்பதை அவன் முதலில் கணிக்கவில்லை. மற்ற படைகளை வலிமையோடு தாக்கி முன்னேறவிடாமல் நிறுத்திவிட்டு, குதிரைப்படையை மட்டும் முழுமையாக உள்வாங்கி அழிக்கும் திட்டத்தை மையூர்கிழார் தீட்டியிருந்தான்.

நாக்கரட்டிலிருந்து மீண்டும் மீண்டும் குறிப்பொலி எழுப்பப்பட்டது. இப்பொழுது அபாயக் குறிப்பொலியாக ஒலிக்கத்தொடங்கியது. இரவாதன் மூஞ்சலை நெருங்கிவிட்டான். ஏற்கெனவே திட்டமிட்டபடி மற்ற இரு தளபதிகளும் இரு திசைகளிலிருந்தும் மூஞ்சலை நோக்கி முன்னேறுவார்கள் என்ற எண்ணத்துடனே மூஞ்சலின் அரணை நோக்கி அம்புகளைச் செலுத்தத் தொடங்கினான்.

முடியனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. எதிரிகளின் தாக்குதல் மிகக்கடுமையாக இருந்தது. எப்படையையும் முன்னுக்கு நகர்த்த முடியவில்லை. வேந்தர்படையினர் முழுமையான ஆற்றலோடு தாக்கிக் கொண்டிருந்தனர். கருங்கைவாணனும் வெறுகாளனும் தேர்ப்படையின் மீது கடுந்தாக்குதலை நடத்திப் பெருஞ்சேதத்தை உருவாக்கிக் கொண்டிருந்தனர். நிலைமையை உணர்ந்து உடனடியாக முடியன் அவ்விடம் போனான். ஆனால் அவனது கவனம் முழுவதும் கூவல்குடியினரின் குறிப்பொலியின் மீதே இருந்தது. செய்தியை நேரடியாகச் சொல்ல உதிரனையோ,

அருவனையோ அனுப்பலாமா என்று சிந்தித்தான். ஆனால் எல்லா முனையிலும் தாக்குதலின் வேகம் உச்சங்கொண்டிருந்தது.

சூளூர் வீரர்கள் அறுபது வகையான ஆயுதங்களைக் கையாளத் தெரிந்தவர்கள். பேரரசர்களைக் காப்பதற்கான தேர்ந்த பயிற்சிகொண்ட அகப்படையினைத் தாக்கி அழிக்க, கரிணியின் தலைமையிலான பிரிவு முழுத்திட்டமிடலோடு பாய்ந்து முன்னேறியது. பொய்க்கூடாரங்களிலிருந்து வெளிவரும் எண்ணிலடங்காத வீரர்களைக் கொன்றுகுவிப்பதற்கான திட்டத்தோடு பாய்ந்து முன்னேறினர் பிடறிமான் தலைமையிலான வீரர்கள்.

கரிணியும் பிடறிமானும் வகுக்கப்பட்ட திட்டத்தின் அடிப்படையில் தாக்குதலைத் தொடுக்கின்றனரா என்று பார்ப்பது இரவாதனின் வேலையல்ல; அவனது ஒரே இலக்கு நீலன் இருக்கும் கூடாரத்தை நோக்கி எதிரிகளைக் கொன்றழித்து முன்னேறுவது மட்டும்தான்.

மூன்றுதன்மைகளில் தெளிவாக வகுக்கப்பட்ட திட்டத்தோடும் பறம்பினர் இப்போரில் இதுவரை பயன்படுத்தாத பல்வேறுவிதமான ஆயுதங்களோடும் இரவாதனின் குதிரைப்படை மூஞ்சலை நோக்கி வந்தது. பகழி அம்புகளால் மூஞ்சலின் வெளிப்புற அரண் தகர்த்தெறியப் பட்டது. சங்கிலித்தொடர்போல் அடுத்தடுத்து வந்து இடைவெளியை நிரப்பும் அவர்களின் மூன்றடுக்கு ஏற்பாடுகளை எல்லாம் இடியெனத் தாக்கி நிலைகுலையச் செய்தனர்.

யாராலும் உடைக்கவோ உள்நுழையவோ முடியாது என்று சொல்லப்பட்ட மூஞ்சலின் வெளிப்புற அரணை, குதிரையின் வேகத்தைக் குறைக்காமலேயே உடைத்து உள்நுழைந்தனர் சூளூர் வீரர்கள்.

ஒற்றை நுனியில் உடைத்து உள்நுழைந்தவர்கள் விசிறியைப்போல கணநேரத்தில் அரைவட்டமாக விரிந்தனர். வெளியிலிருக்கும் மொத்தக்குதிரைப் படையும் உள்ளே வந்து வட்டத்துக்குள் சேர்ந்தபின் அது வட்டவடிவப் படையமைப்பாகத் தன்னை மாற்றிக் கொண்டது. வட்டம் எல்லா திசைகளிலும் ஒரே நேரத்தில் விரியத்தொடங்கியது. கணக்கில்லாத அம்புகளும் ஈட்டிகளும் வெடித்து வெளிவர, வட்டம் தன்னைப் பெரிதுபடுத்தியபடியே இருந்தது.

நாகக்கரட்டிலிருந்து மீண்டும் மீண்டும் கூவலொலி எழுப்பப்பட்டு, இருக்கிச்செடியின் ஒளிரும் குறிப்புகள் காட்டப்பட்டுக் கொண்டே இருந்தன. களத்தில் நின்ற பறம்புத் தளபதிகள் அனைவரும் குறிப்பொலியைக் கவனித்தனர். இடைவிடாத குறிப்பொலி அனைவருக்கும் பதற்றத்தை உருவாக்கத் தொடங்கியது.

நாகக்கரட்டின் மேலிருந்து வாரிக்கையன் காட்சியைத் தெளிவாகப் பார்த்தான். மூஞ்சலை உடைத்து இரவாதன் உள்நுழைந்துகொண்டிருந்தான். அன்று முடியன் கவலையோடு

சொன்னது நினைவுக்கு வந்தது. “இரவாதன் தாக்குதல் போரில் நிகரற்றவனாக இருக்கிறான். ஆனால், களத்தின் முழுமையைக் கவனித்து முன்னேறுவதில் குறைபாடு உடையவனாக இருக்கிறான். அது ஆபத்தை உருவாக்கிவிடும்.”

காட்சியைப் பார்த்துக் கொண்டி ருப்பதைத் தவிர வேறெதையும் வாரிக்கையனால் செய்ய முடியவில்லை. குளவன்திட்டிலிருந்தும் இதே ஒலிக்குறிப்பு மீண்டும் மீண்டும் வருகிறது. என்ன செய்வதென்று புரிபடாமல் நின்றான் வாரிக்கையன்.

உதிரன், விண்டன், அருவன், முடியன் என யாரும் தங்களின் இடம்விட்டு நகரமுடியாத நிலைக்கு உள்ளானார்கள். வேந்தர்படை முழுவலிமையோடு இறங்கிவந்து மறித்துப் போரிட்டுக் கொண்டிருக்கிறது. மூஞ்சல் இருப்பதோ தட்டியங்காட்டின் வடமூலையில். மொத்தப்படையையும் பிளந்துகொண்டு அந்தக் கடைசிப்பகுதிக்குப் போய் இரவாதனுக்கு உதவுவது எப்படி என யாருக்கும் புரியவில்லை.

கருங்கைவாணன், வேந்தர்படையின் தேர்ப்படைத் தளபதி வெறுகாளனோடு இணைந்து வலிமைமிகுந்த தாக்குதலைத் தொடுத்துக் கொண்டிருக்கிறான். பறம்புத் தளபதி விண்டனால் மட்டும் அதை எதிர்கொள்ள முடியாது என்பதால் அவனுடன்

முடியன் இணைந்து நிற்கிறான். அப்படியிருந்தும் தாக்குதலின் வேகம் இணையற்றதாக இருக்கிறது.

போர்ச்சூழலில் என்ன முடிவெடுப்பதென்றே தெரியாத ஒரு கணத்தை முதன்முறையாக முடியன் சந்தித்தான். உணர்ச்சியின் படபடப்பு அவனை ஆக்கிரமிக்கத் தொடங்கியது. சட்டென ஒரு முடிவுக்கு வந்தான். இரவாதன் தன் மகன் என்ற உணர்வில் எந்தவொரு முடிவையும் எடுத்துவிடக் கூடாது. நடைபெற்றுக் கொண்டிருப்பது பெரும்போர். இதில் கணிப்புகளும் உத்திகளும் பிழைபடும் வாய்ப்புகள் உண்டு. அப்பிழையை உணரும்பொழுது சரிசெய்யும் முயற்சிக்காகப் பேரிழப்புகளைக் கண்டுவிடக் கூடாது. எண்ணங்கள் மனத்துக்குள் உறுதியாகிக் கொண்டிருக்கும் பொழுது, தேக்கன் அவ்விடம் வந்து சேர்ந்தான்.

அதே நேரத்தில், எதிரில் நின்று போரிட்டுக் கொண்டிருந்த கருங்கை வாணனை நோக்கி விரைந்து வந்தார் மையூர்கிழார். இரண்டு பக்கமும் தலைமைத்தளபதிகள் பதற்றத்தோடு இருந்தனர். முடியனைப் பார்த்துத் தேக்கன் சொன்னான், “நாக்கரட்டிலிருந்து மீண்டும் மீண்டும் குறிப்பொலி கேட்டுக் கொண்டே இருக்கிறது. இரவாதனின் படை தனித்துப்போய் மாட்டிக் கொள்ளக் கூடாது. நீ உடனடியாக இவ்விடம் நீங்கி, அவனோடு போய்ச் சேர்.”

திடீரென மையூர்கிழார் வந்து நின்றதைப் பார்த்துக் கருங்கைவாணன் திகைத்துப்போனான். என்னவென்று கேட்பதற்குள்

அவரே சொன்னார், “எதிரிகளின் குதிரைப்படையைப் பின்புறமாக உள்ளிழுத்து, சூழ்ந்து தாக்கி அழிப்பதற்கான உத்தியைத்தான் நாம் வகுத்தோம். ஆனால் அவர்களோ, நாம் சற்றும் எதிர்பார்க்காத வகையில் மூஞ்சலையே உடைத்துக் கொண்டு உள்ளே போய்விட்டார்கள்.” மிரட்சியுற்றான் கருங்கைவாணன். “மூஞ்சலின் காப்பரணை உடைத்துவிட்டார்களா?”

“ஆமாம். அதனால்தான் நான் விரைந்து இங்கு வந்தேன். நீங்கள் உடனடியாக இவ்விடம் விட்டு மூஞ்சலை நோக்கிப் போகவேண்டும்.”

பதற்றத்தோடு தேக்கன் சொன்னான், “நீ இவ்விடம் விட்டு விலகிச்செல். எது செய்தாவது இரவாதனுக்குத் தீங்கு நேராமல் தடு.”

தேக்கனின் சொல்கேட்டுக் கடுஞ்சினத்தோடு பதிலுரைத்தான் முடியன், “கருங்கைவாணனும் வெறுகாளனும் இணைந்து நின்று தாக்கிக் கொண்டிருக்கின்றனர். நான் இவ்விடம் விட்டு அகன்றால் நமது தேர்ப்படையைப் பெருஞ்சேதத்துக்கு உள்ளாக்கிவிடுவார்கள். அதுமட்டுமல்ல, இங்கிருந்து எதிரிகளின் மொத்தப் படையையும் கிழித்துக் கொண்டுபோய் நான் மூஞ்சலை அடைவது இயலுகிற செயலல்ல.”

“எம்முயற்சியாவது செய். இவ்விடம் விட்டுப் போ” என்றான் தேக்கன்.

“எதிரி உன்னையும் என்னையும் குறிபார்த்துத்தான் தேர்ப்படையில் வந்து வலிமைகொண்ட தாக்குதலை நடத்துகிறான். நான் இவ்விடம் விட்டுப் போனால், உன்னையோ, விண்டனையோ இழப்பேன். அதே நேரம் மூஞ்சலையும் சென்றடைய மாட்டேன்” என்று அம்பினை நாணில் தொடுத்தபடியே கத்தினான் முடியன்.

மையூர்கிழாரின் சொல்கேட்டுப் பெருங்கோபத்துடன் கத்தினான் கருங்கைவாணன், “நான் இவ்விடம் விட்டு இப்பொழுது அகன்றால் நமது தேர்ப்படையை முற்றிலும் இழக்கநேரிடும். எதிரிப்படையின் தலைமைத்தளபதி முடியனின் தாக்குதலை ஒருபொழுதுகூட வெறுகாளனால் எதிர்கொள்ள முடியாது. குதிரைப்படையையும் யானைப் படையையும் இழந்து நிற்கும் நாம் தேர்ப்படையையும் இழக்க நேரிடும். எனவே, நான் இவ்விடம் விட்டு அகல்வது அறிவீனம்.”

“அப்படியென்றால் இரவாதனைக் காப்பாற்ற முடியாதா?” எனக் கத்தினான் தேக்கன்.

“அப்படியென்றால் மூஞ்சலைக் காப்பாற்ற முடியாதா?” எனக் கத்தினார் மையூர்கிழார்.

# பாரி –104

**ஆ**றாம் நாள் போரின் கடைசி நான்கு பொழுதுகள் மீதம் இருந்தன. தட்டியங்காட்டில் இதுவரை இல்லாத வகையில் இருதரப்பும் பதற்றத்தில் நிலைகுலைந்துகொண்டிருந்தன. மையூர்கிழாரால் கருங்கைவாணனை மூஞ்சலை நோக்கி அனுப்ப முடியவில்லை. தேக்கனால் முடியனை இரவாதனை நோக்கி அனுப்ப முடியவில்லை. யார் எங்கு நிலைகொண்டு தாக்குவது என்பதைப் பற்றி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கருத்து இருந்தது.

திசைவேழர், பரண்மேல் திணறியபடி நின்றுகொண்டிருந்தார். போர்க்களத்தின் நடுப்பகுதியில் தாக்குதல் வீரியம்கொண்டிருந்தது. அதேநேரம் தட்டியங்காட்டின் இடது விளிம்புக்கு அப்பால் மூஞ்சல் பகுதியில் வலிமைமிகுந்த தாக்குதல் நடக்கிறது. நேரமாக ஆக போரின்விதிகள் எல்லா இடங்களிலும் மீறப்படுவதற்கான வாய்ப்புகள் அதிகம் இருக்கின்றன. இருதரப்பிலும் கடும்தாக்குதல் நடக்கிறது. தான் நடுவில் இருக்கும் பரணில் நிற்பதா அல்லது இடதுபக்கக் கடைசிப்பரணில் நின்று மூஞ்சலைக் கவனிப்பதா என முடிவெடுக்க முடியாத குழப்பத்தில் நின்றார் திசைவேழர்.



குளவன்திட்டில் நின்றுகொண்டிருக்கும் பாரி, போர்க்களத்தின் தன்மையை உற்றுப்பார்த்தபடி இருந்தான். எங்கும் குழப்பம் சூழ்ந்திருப்பதைத் தெளிவாக அறிய முடிந்தது. நாகக்கரட்டின் மேலிருந்து இரவாதனுக்குரிய மறைக்குறிப்புகள் மீண்டும் மீண்டும் காட்டப்பட்டுக் கொண்டிருந்தன. கூவல்குடியினரின் ஓசை இடைவெளியின்றி வெளிப்பட்டது. வாரிக்கையனுக்கு வேறு என்ன செய்வது என்பது பிடிபடவில்லை.

போர்க்களத்துக்கு உள்ளே இருப்பவர்களும் களத்தை விட்டு வெளியே நிற்பவர்களுமாக எல்லோரும் ஒரே நேரத்தில் பதற்றத்தால் பீடிக்கப்பட்டிருந்தனர். நிலைமை என்னவாகும் என்பதை யாராலும் கணிக்க முடியவில்லை. சரியும் மஞ்சள் வெளிச்சத்தினூடே களத்தை உற்றுநோக்கிக் கொண்டிருந்த பாரியின் சிந்தனை, முடிவை நோக்கி நகர்ந்தது. இனி தாமதிக்க வேண்டாம் என எண்ணிய கணத்தில், கையை உயர்த்தினான் பாரி. அருகிருந்த

கூவல்குடியினர் அதற்கேற்ற ஓசையை வெளிப்படுத்தினர். நாகக்கரட்டில் இருந்தவர்களுக்கான உத்தரவு குளவன்திட்டிலிருந்து வந்தது. போர்க்களம் நோக்கி வெளிப்படுத்தும் ஓசையை உடனடியாக நிறுத்தினான் வாரிக்கையன்.

இரவாதன், மூஞ்சலுக்குள் தனது முழுப்படையுடன் நுழைந்துவிட்டான். இனியும் பின்னோக்கி வரச்சொல்லும் மறைகுறிப்புகளைச் சொல்லிக் கொண்டிருப்பது தவறு. உள்ளே நுழைந்தவன் இதுவரை நாகக்கரட்டின் குறிப்புகளைக் கவனித்தறியவில்லை. இனி தற்செயலாகக் கவனித்துவிட்டால் உள்ளே தாக்குதல் தொடுத்து முன்னேறுவதா அல்லது வெளியேறுவதா என்ற குழப்பத்தை அவனுக்கு உருவாக்கும். அந்தத் தடுமாற்றம் தாக்குதலை வலிமையிழக்கச்செய்து ஆபத்தை உருவாக்க வாய்ப்பிருக்கிறது. எனவே, கூவல்குடியின் ஓசையை நிறுத்தச் சொன்னான் பாரி. முழுமையான திறனோடு உள்ளே நுழைந்தவனை எந்த விதத்திலும் திசைதிருப்ப வேண்டாம். இதுவரை செய்த முயற்சிகள் சரி; இனி இதைத் தொடரக் கூடாது. வீரத்தின் விடை என்னவோ அதை ஏற்க ஆயத்தமாவோம் என்று நிலைகொண்டான் பாரி.

குழப்பமும் பதற்றமும் நிலவிய இந்த நேரத்தில் பாரி எடுத்த இந்த முடிவு களத்தில் உடனே விளைவை உருவாக்கியது. தேக்கனோடு முரண்பட்டு உரையாடிக் கொண்டிருந்த முடியன்

நிம்மதிப்பெருமூச்சு விட்டான். கூவல்குடியினரின் குறிப்பொலி நின்றுவிட்டது. இரவாதன் மூஞ்சலுக்குள் நுழையாமல் நின்றுவிட்டான் என்ற முடிவுக்கு வந்தான். பறம்புத்தளபதிகள் அனைவரும் அவ்வாறே நினைத்தனர். பதற்றத்திலிருந்து பறம்புத்தளபதிகள் வெளிவந்த கணத்தில் தாக்குதலின் வேகம் மேலும் வலிமையடையத் தொடங்கியது.

எதிர்ப்பக்கம் நின்றிருந்த கருங்கைவாணனுக்கும் மையூர்கிழாருக்கும் இந்த ஓசை நிறுத்தப்பட்டதன் காரணம் புரியவில்லை. அவர்களின் குழப்பம் அதிகரித்தது. பறம்பின் தரப்பில் தாக்குதலின் வேகம் அதிகரிக்க, மையூர்கிழாரின் குழப்பம் மேலும் அதிகமாகியது.

முடியனோடு அவ்வளவு நேரம் உரத்தகுரலில் பேசிக் கொண்டிருந்த தேக்கன், தனது பேச்சை நிறுத்திக் கொண்டான். முடியனின் தாக்குதல் தீவிரமாகியது. அவன், கருங்கைவாணனை நோக்கிச் சீற்றத்துடன் முன்னேறினான். தேக்கன் தாக்குதல் களத்தை விட்டு, தனது இடத்துக்குப் பின்நோக்கி நகர்ந்தான். அவனால் நிலைமையை உணர முடிந்தது. இரவாதனின் படை மூஞ்சலுக்குள் முற்றிலும் நுழைந்திருக்கும். இனியும் பின்வாங்கச்சொல்லும் குறிப்பொலிகள் வேண்டாம் எனப் பாரி முடிவெடுத்திருப்பான் எனக் கருதினான்.

நேற்றைக்கு முந்தைய நாள் இரவு மூஞ்சலைப் பற்றி இரவாதன் விளக்கியவை எல்லாம் அவனின் நினைவுக்குள் மேலெழுந்துகொண்டிருந்தன. மூஞ்சலைப் பற்றி அவனுக்கிருந்த தெளிவும் சூளூர் வீரர்களின் தாக்குதல் திறனும் நம்பிக்கை அளிப்பதாக இருக்கும் அதேநேரம், மூவேந்தர்களின் அகப்படையையும் கவசப்படையையும் எளிதாகக் கருதிவிடக் கூடாது. அதுமட்டுமன்று, ஏற்கெனவே முடிவுசெய்ததைப்போல முடியனும் விண்டனும் அங்கு போகவில்லை. இந்நிலையில் தான் என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றிய திட்டம் இரவாதனுக்கு இருக்குமா? மூஞ்சலுக்குள் நுழைந்த பிறகு நீலனை மீட்கும் சிந்தனை மட்டுமே தீவிரம்கொள்ளும். உணர்வின் உந்துதலில் இணையற்ற தாக்குதலை நடத்துவான். அந்தத் தாக்குதல், எதிரியைக் கலங்கடிக்கும். அதேநேரம் மையப்பொறியைத் தாக்கி முன்னேறுபவனுக்குத் தேவையான முழுமைகொண்ட தெளிவு அவனிடம் இருக்குமா? இன்னொரு வகையில் சிந்தித்தால், ஏறித்தாக்குபவனுக்குச் சூழலைப் பற்றி முழுமையும் தெரியாமல் இருத்தல் நல்லது. வீரத்தின் மீது அறியாமை கலந்த குருட்டுத்தனம் படிந்திருந்தால் அது உருவாக்கும் விளைவு எண்ணிப்பார்க்க முடியாததாக இருக்கும்.

இன்றைய போர் இதுநாள் வரை நடந்ததைப் போன்ற நிலையில் முடியப்போவதில்லை. இரவாதன், போரின் போக்கைத்

தனது கையில் எடுத்துக் கொண்டான். இனி அவனது வீரமே எல்லாவற்றையும் முடிவுசெய்யும். எண்ணங்கள் மேலெழுந்தபடி இருக்க, படைப்பிரிவின் இறுதிப்பகுதியில் வந்து நிலைகொண்டான் தேக்கன்.

எதிர்த்திசையில் படையின் மூன்றாம்நிலைக்குப் பின்னால் வேந்தர்கள் நின்றுகொண்டிருந்தனர். காற்றின் துணைகொண்டு பறம்பு வீரர்கள் அம்பெய்த பிறகு, தங்களின் பாதுகாப்பு முறையை வேந்தர்கள் மாற்றியமைத்துக் கொண்டனர். படைப்பிரிவையொட்டி நிற்காமல் தனித்து நிற்கின்றனர். ஒருவேளை காற்றில் கூரம்புகள் பறந்துவந்தால், கவசவீரர்கள் கணநேரத்தில் பாதுகாப்புக் கூண்டை உருவாக்குவார்கள். அம்புகளும் ஈட்டிகளும் உள்நுழைய முடியாத கவசக்கூண்டாக அது இருக்கும்.

மூஞ்சலுக்குள் எதிரிகளின் படைப்பிரிவு ஒன்று நுழைந்துவிட்ட செய்தி வேந்தர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. உண்மையில் இது யாரும் எதிர்பாராத ஒன்று. காலையில் மையூர்கிழாரிடம் படையின் தலைமைப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டபோதுதான் இந்தத் திட்டத்தை அவர் கூறினார். பறம்புப்படையில் வலிமைமிகுந்தவை விற்படையும் குதிரைப்படையும்தான்.

விற்படையைச் சூழ்ந்து அழிக்க முந்தையநாள் கருங்கைவாணனால் வகுக்கப்பட்ட திட்டம் முழுத் தோல்வியில் முடிந்தது. இன்று குதிரைப்படையை உள்ளிழுத்துத் தாக்கி

அழிக்கும் திட்டத்தை மையூர்கிழார் சொன்னார். பறம்பின் மொத்தப்படையையும் முன்னகரவிடாமல் தாக்கும் அதேநேரம் குதிரைப்படையை மட்டும் முழுமையாக உள்வாங்கினால் சூழ்ந்து தாக்கிக் கடும் அழிவை உருவாக்க முடியும்.

குதிரைப்படையின் அழிவு பறம்புக்குப் பேரிடியாக அமையும் என்றான். நேற்றிரவு பொற்சுவை சென்ற இடத்தில் என்ன நடந்தது என்று தெரியாத குழப்பத்தில் இருந்த குலசேகரபாண்டியன், மையூர்கிழாரின் திட்டத்துக்கு ஒப்புதல் தெரிவித்தார். மற்ற இரு வேந்தர்களும் அதே குழப்ப மனநிலையில் இருந்ததால் இந்தத் திட்டம் பற்றிக் கூடுதலாக உரையாடிக் கொள்ளவில்லை.



ஆனால், இப்போது அதுவே பேராபத்தாகிவிட்டது. உள்ளிழுத்த குதிரைப்படை நாம் நினைத்ததைவிட வீரியமான தாக்குதலை நடத்தி மூஞ்சலின் அரணை உடைத்து உள்நுழைந்துவிட்டது.

ஆபத்து உச்சக்கட்டத்தை அடைந்தது. ``மூஞ்சலுக்குள் நுழைந்த ஒருவன்கூட உயிரோடு திரும்பக் கூடாது; அனைவரையும் கொன்று புதையுங்கள்'' என்று உத்தரவிட்டார் குலசேகரபாண்டியன்.

இணையற்ற தாக்குதல் திறனும் தற்காப்புத் திறனும்கொண்ட கவசப்பெரும்படையோடு உதியஞ்சேரல், சோழவேழன், பொதியவெற்பன் ஆகிய மூவரும் புறப்பட்டனர். வேந்தர்களுக்குரிய இசை வாத்தியங்களை அந்தப் படையின் முன்கள வீரர்கள் முழங்கியதும் குதிரைகளும் தேர்களும் பாயத் தொடங்கின. தட்டியங்காட்டை விட்டு வெளிப்புறத்தில் இந்த நிலம் இருப்பதால் ஈக்கிமணலும் கருமணலும் இங்கு இல்லை. எனவே, குதிரைகள் நினைத்துப்பார்க்க முடியாத வேகத்தோடு மூஞ்சலை நோக்கி விரைந்தன.

குளவன்திட்டின்மேல் நிற்கும் பாரி, மூன்று நாள்களுக்குப் பிறகு இடதுபுறமாகத் திரும்பி குகையில் இருக்கும் விளக்கைப் பார்த்தான். அருகில் நின்றிருந்த இகுளிக்கிழவனுக்கு, பார்வையின் பொருள் புரிந்தது. ஆனால், விளக்கின் சுடர் அசைவற்று எரிந்தது. கண்கள், மூஞ்சலை நோக்கிப் பாய்ந்து செல்லும் வேந்தர்களின் கவசப்படையையே பார்த்துக் கொண்டிருந்தன.

இரவாதனின் தலைமையிலான சூளூர்ப்படை, மூஞ்சலுக்குள் முழு வட்ட அமைப்பை உருவாக்கி முன்னகர்ந்துகொண்டிருந்தது. வட்டவடிவப் பெரும்பாறையொன்று மெள்ள உருள்வதைப்போல அதன் தன்மை இருந்தது. மூஞ்சலின் அகப்படைக்கு, முன்னகர்ந்துவரும் சூளூர்ப்படையை எப்படி நிறுத்துவதென்று தெரியவில்லை. ஏனெனில், எந்த ஒரு வீரனும் இதில் தனித்து

இல்லை. உருளும் பாறையைக் கண்டு விலகும் உயிரினங்கள்போல அகப்படையினர் விலகவேண்டியிருந்தது.

சூளூர்ப்படையினரின் மெய்யுறைச் சட்டை ஆயுதங்களால் துளைக்க முடியாதது. அதேநேரம் மிகக் குறைந்த எடையுடையது. வேந்தர்களின் அகப்படை பெரும் எடைகொண்ட இரும்பாலான கவச உடையைக் கொண்டது. எனவே, வீரர்களால் வேகம்கொண்டு பாய முடியாது. பறம்புப்படையின் ஒவ்வொரு வீரனும் எண்ணற்ற ஆயுதங்களைத் தன் தோளிலும் இடுப்பிலும் தொங்கவிட்டுள்ளான்.

உள்ளே நுழைந்த படை இதுவரை தாக்குதலைத் தீவிரப்படுத்தவில்லை. முதலில் தன்னை நிலைநிறுத்திக் கொண்டது. பிறகு எந்தத் திசை நோக்கி நகரவேண்டுமென முடிவுசெய்தது. சூளூர் வீரன் ஒருவன் கொண்டுவந்த மூங்கில் ஒன்றை வட்டத்தின் நடுவில் நேராக நிமிர்த்தினான். இன்னொரு வீரன் கண்ணிமைக்கும் வேகத்தில் அதன் மேல் ஏறினான். மூஞ்சல் முழுவதும் இருக்கும் கூடாரங்களின் மேற்கூம்பைப் பார்க்கும் உயரத்துக்கு ஏறினான்.

சூளூர் வீரர்களை முன்னின்று தாக்கிக் கொண்டிருந்த அகப்படையினர், திடீரென ஒருவன் எதிரிகளின் வட்டப்படையின் நடுவில் மூங்கிலை நட்டு கிடுகிடுவென மேலேறிக் கொண்டிருப்பதைப் பார்த்தனர். முதலில், அவர்களுக்கு அது பிடிபடவில்லை. பிறகு அகப்படைத் தளபதி, மேலேறுபவனை நோக்கித் தாக்குதல் தொடுக்க உத்தரவிட்டான். முன்னிலை வீரர்கள்

வில்லெடுத்து அம்பெய்தனர். அம்புகள் பாயும் முன்பு மூங்கிலின் மேலேறியவன் ஏறிய வேகத்தில் மூஞ்சல் முழுமையையும் கண்களைச் சுழற்றிப் பார்த்துவிட்டு அங்கிருந்து கீழே குதித்தான். அம்புகள் காற்றில் பறந்துகொண்டிருந்த போது அவன் தரையிலே நிலைகொண்டான்.

அவன் சொல்லப்போகும் திசைக்காகத்தான் இரவாதன் காத்திருந்தான். கபிலர் நீலனுக்கு வழங்கிய போர்வை எண்ணற்ற மருத்துவ வேர்களால் பின்னப்பட்டது. அதில் காற்றில் தீயும் வேரொன்று இருக்கிறது. அதிலிருந்து சிறிது சிறிதாகக் கசியும் புகையால் கூடாரத்தின் மேற்பகுதியில் கருநீலம் படிந்திருக்கும். மூங்கிலின் மேலேறியவன் அந்தக் கூடாரத்தைப் பார்த்தவுடன் மேலிருந்து கீழே குதித்தான்.

குதித்தவன் குறிப்பைச் சொன்ன கணத்தில் முன்வகுக்கப்பட்ட திட்டத்தின் அடிப்படையில் தாக்குதலைத் தொடங்கினான் இரவாதன். அதுவரை முன்னும் பின்னுமாக அசைந்தபடி நின்றுகொண்டிருந்த பாறை, கடகடவென உருளத் தொடங்கியதுபோல் இருந்தது. பறம்பின் தரப்பில் அம்புகளும் ஈட்டிகளும் பீறிட்டபோது அகப்படையினர் முன்னகர முடியாமல் தடுப்பு உத்தியைக் கைக் கொள்ளத் தொடங்கினர்.

வட்டவடிவப் பேருருளை மூன்றாகப் பிளக்கத் தொடங்கியது. கரிணியின் தலைமையிலான வீரர்கள் அகப்படையை எதிர்கொள்ள

உருவிய வாளோடு பாய்ந்து முன்னேறினர். அவர்கள் பிரியும் வேகத்திலேயே பிடறிமானின் தலைமையிலான குழுவினர் பொய்க் கூடாரங்களில் உள்ளவர்களை எதிர்கொள்ள, தனித்து முன்னேறினர். இருபெரும் கூராகப் படை பிளவுபட்டபோது நீலனை நோக்கிச் செல்ல ஆயத்தமானது இரவாதன் தலைமையிலான குழு.



வேந்தர்படை வீரர்கள் அனைவரும் வலதுகையில் ஆயுதமும் இடதுகையில் கேடயமும் ஏந்தியிருந்தனர். ஆனால், பறம்புவீரர்கள் யாருடைய கையிலும் கேடயம் இல்லை. எல்லோரும் இரு கைகளிலும் ஆயுதங்களை ஏந்தியபடி இருந்தனர். உடல் முழுக்க மெய்யுறைக் கவசம் இருக்கிறது; அதுபோதும். இப்போதைய தேவை நீலனை மீட்பது மட்டும்தான். எனவே, ஒவ்வொரு வீரனும் எண்ணிலடங்காத வீரர்களைக் கொன்றுகுவிக்கும் வெறியோடு மூஞ்சலுக்குள் நுழைந்துள்ளனர்.

கரிணியின் தலைமையிலான படை தாக்குதலைத் தொடங்கிய கணமே, அதன் வேகம் எதிர்கொள்ள முடியாததாக இருந்தது. தாக்குதலின் ஆற்றலால் வேந்தர்களின் அகப்படை சற்றே பின்வாங்கியது. பிடறிமானின் தலைமையிலான அணி முன்னகரும்போதே படையின் நடுப்பகுதியிலிருந்து மூன்று

பெருமூங்கில்களை மேலே உயர்த்தி முக்கோண வடிவில் மூன்றின் முனைகளையும் ஒன்றோடு ஒன்று பொருத்தி நிறுத்தினர்.

மறுகணமே எண்ணற்ற வீரர்கள் ஒருவர்பின் ஒருவராக அதில் ஏறி, கோபுரம் போன்ற அமைப்பை உருவாக்கினர். மூங்கிலின் பிடிமானத்தோடு ஒருவர் தோளில் ஒருவர் ஏறி, கூடாரத்தைவிட அதிக உயரத்தை உருவாக்கிக் கொண்டனர். இவையெல்லாம் நினைத்துப்பார்க்க முடியாத வேகத்தில் படையின் நடுப்பகுதிக்குள் நடக்கின்றன.

கோபுரத்தில் மேலேறியவர்கள் உச்சியில் இருந்தபடி கூடாரத்தின் மேல் நிலையில் தாக்குதல் தொடுக்கத் தொடங்கினர். பகழி அம்புகள், கூடாரத்தின் மேற்கூரையைக் கிழித்துக் கொண்டு உள்ளே இறங்கின. உடலெங்கும் கவசம் அணிந்த வீரர்கள், மேற்கூரையிலிருந்து பாய்ந்துவந்து தலையையும் கழுத்தையும் தாக்கும் அம்புகளைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. பொய்க்கூடாரத்தில் இருந்த வேந்தர்படை வீரர்கள், இடைவிடாது கூரையைப் பிளக்கும் அம்புகளை எதிர்கொள்ள முடியாமல் சிதறி வெளியேறினர். பொய்க்கூடாரம் ஒன்று கலைந்த வேகத்தில் அதன் கூச்சலும் கலவரமும் மற்றவற்றைக் கலைத்தன. அகப்படை சிதறி, பொய்க்கூடாரங்கள் கலையத் தொடங்கும்போது வேந்தர்கள் கவசப்படையோடு மூஞ்சலுக்குள் நுழைந்தனர்.

இடதுபுறமாக உதியஞ்சேரல் நுழைந்தான். அவன் கண்முன்னே, சிதறும் அகப்படையைக் கொன்றுகுவித்து முன்னகர்ந்துகொண்டிருந்தது சூளூர்ப்படை. எதிர்த்திசையில் அதைவிட வேகமாக இன்னொரு படை போய்க் கொண்டிருந்தது. அப்பக்கமிருந்து உள்ளே நுழைந்தான் சோழவேழன். பிடறிமானின் தாக்குதல் பொய்க்கூடாரங்களைப் புரட்டியது. மூஞ்சலின் கட்டுக்கோப்பு குலைந்துகொண்டிருந்த போது வேந்தர்கள் மூவரும் தங்களின் சிறப்புப் படையோடு உள்நுழைந்தனர்.

மிகக்குறுகிய நேரத்தில் சூறைக்காற்றுபோல தாக்குதல் நடத்திய பறம்புப்படை, மூஞ்சலின் மொத்த இயக்கத்தையும் நிலைகுலையச்செய்தது. தாங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் காட்சியை வேந்தர்களால் நம்ப முடியவில்லை. ஆனாலும் எதிர்த்தாக்குதலைத் தொடுக்க அவர்களுக்கு அதிக நேரமாகவில்லை. பல போர்களையும் தாக்குதலையும் வெற்றிகரமாக நடத்திய எண்ணற்ற அனுபவம்கொண்டது வேந்தர்களின் சிறப்புப்படை. இதுபோன்ற சூழலை எத்தனையோ முறை கையாண்ட தளபதிகள் அதில் இருந்தனர்.

உதியஞ்சேரலின் படை கரிணியின் தலைமையிலான படையோடு மோதத் தொடங்கியது. அதே நேரத்தில் சோழவேழனின் படை பிடறிமானின் படையை எதிர்கொண்டது.

எண்ணிப்பார்க்க முடியாத வலிமையும் தாக்குதல் திறனும்கொண்ட இருதரப்புச் சிறப்புப்படைகளும் ஒன்றையொன்று எதிர்கொண்டன.

இருபக்கச் சிறகுகளிலும் கரிணியும் பிடறிமானும் எண்ணிலடங்காத ஆயுதங்களின் வழியே வேந்தர்படையைத் தாக்கிக் கொண்டிருந்த போது, தனது இரையைக் கவ்வ விண்ணிலிருந்து வெட்டி இறங்கும் கழுகின் வேகத்தில் நீலனின் கூடாரம் நோக்கிப் பாய்ந்துகொண்டிருந்தான் இரவாதன். மூஞ்சலுக்குள் நுழைந்த இடத்திலிருந்து நீலனின் கூடாரம் இருக்கும் இடம் வரை மூன்று தடுப்புநிலைகள் உள்ளன.

வெளிப்புற அரணை உடைத்து முதல் தடுப்புக்கு அருகில் பறம்புப்படை வந்தபோது வேந்தர்கள் மூவரும் வந்துசேர்ந்தனர். ஆனால், அப்போது இரவாதன் இரண்டாவது தடுப்பைத் தாக்கிக் கொண்டிருந்தான். நிலைமையைக் கணிக்கும் நேரம்கூட வேந்தர்களுக்கு வாய்க்க வில்லை. அவன் இரண்டாவது தடுப்பை உடைக்கும்முன் தனது படை அவ்விடம் விரைந்து செல்ல உத்தரவிட்டான் பொதியவெற்பன்.

இரவாதனின் வேகமும் தாக்குதலின் தன்மையும் யாராலும் கற்பனைசெய்ய முடியாத அளவுக்கு இருந்தன. தென்னோலையைக் கிழித்துக் கொண்டு உள்ளிறங்கும் மூங்கிற்கழிபோல எதிரிகளின் கவசங்களைத் துளைத்து உள்ளிறங்கின பகழி அம்புகள்.

அம்பென்பது மூன்று விசைகள் மையம்கொள்வது. இழுத்து வளைக்கும்போது உள்ளுக்குள் விரியத்துடிக்கும் நரம்பு; பின்னிழுக்கும்போது முன்வாங்கத் துடிக்கும் நாண்; முன்னும் பின்னுமாக வீரனின் இரு கைகளைக் கொண்டு கூட்டப்படும் விசை. இந்த மூன்றின் குவிமையமே விடுபடும் அம்பாய் ஏகிச்செல்லும். இந்த மூன்றும் வேந்தர்படையைவிட மூன்று மடங்கு அதிக ஆற்றலோடு வெளிப்பட்டன சூளூர் வீரர்களிடம். குறுங்காது முயலின் குருதிவாடை காற்றெங்கும் மிதந்துகொண்டிருந்தது.

பொதியவெற்பனின் சிறப்புப்படை இரவாதனின் படையை நோக்கி முன்னேறியது. அப்போது சற்றும் எதிர்பார்க்காமல் சூளூர் வீரர்கள் விசிறி வடிவ உருளிகளான எறிவட்டுகளை வீசத் தொடங்கினர். ஈட்டி என்றால் போர்வீரன் ஒன்றைத்தான் வைத்திருக்க முடியும். ஆனால், ஒவ்வொரு வீரனும் பத்துக்கும் மேற்பட்ட எறிவட்டுகளை இடுப்பிலே கோத்துவைத்திருந்தான். கண்ணிமைக்கும் நேரத்தில் காற்றைக் கிழித்துக் கொண்டு பறந்த எறிவட்டுகள் அனைத்தும் கவசவீரர்களின் கழுத்துக்குக் குறிவைக்கப்பட்டன.

பாய்ந்துவந்த வேந்தரின் கவசப்படை இரு பனை தொலைவிலேயே நின்று எறிவட்டுகளைக் கவசங்களால் தடுக்கவேண்டிய நிலை வந்தது. அப்போது மூன்றாவது தடுப்பு நோக்கி இரவாதன் முன்னேறிக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த

பொதியவெற்பன், உலோக வில்லில் தணல் அம்புகளால் இரவாதனை நோக்கிக் கடும்தாக்குதல் நடத்தியபடி ``அவனை நோக்கித் தேரை விரைவுபடுத்து'' என்று கத்தினான்.

மூஞ்சலின் வெளிப்புற அரண் மீண்டும் ஒன்றுக் கொன்று செருகி அடைப்பை உருவாக்கியது. ஆனால், உள்ளே நுழைந்த சூளூர் வீரர்கள் தங்களை நோக்கி மொய்க்கும் வேந்தர்படையைக் கணக்கில்லாமல் கொன்றுகுவித்தனர். கவசங்களின்மேல் வெட்டியிறங்கும் வாளின் ஓசை மூஞ்சலை நடுங்கச்செய்தது, கொற்றவாளும் கணிச்சி எனும் கோடரிவகை ஆயுதமும் சூளூர் வீரர்களின் உடல் உறுப்பைப்போன்றவை. பெருமரத்தையும் கணிச்சிகொண்டு ஒரே வீச்சில் வெட்டிச் சரிக்கும் சூளூர் வீரர்களின் வேகம் கவசங்களைக் கிழித்து இறங்கிக் கொண்டிருந்தது.

இரவாதன் மூன்றாவது தடுப்பை நெருங்கும்போது பொதியவெற்பனின் தேர் விரைந்து அவ்விடம் வந்தது. நிறைந்த பூண்களைக் கொண்ட கொடிஞ்சி வகைத்தேர், கதிரவன் ஒளியில் கண்களைப் பறித்தபடி வீரர்களைப் பிளந்துகொண்டு வந்தது. கவச வீரர்களின் தாக்குதலுக்கிடையே திரும்பி மீளும் கணத்தில் தன்னை நோக்கி வரும் தேரைப் பார்த்தான் இரவாதன். அவனைச் சூழ்ந்திருந்த கவசவீரர்களைத் தாக்கிக் கொண்டிருந்த அதே வேகத்தில் தனது முதுகிலே இருந்த மூவிலை வேலை எடுத்து மின்னலென வீசினான்.

தேரின் இடதுபுறச் சக்கரத்தின் நடு அச்சைப் பிளந்து உள்ளிறங்கியது மூவிலை வேல். என்ன நடந்தது என்பதை வீரர்கள் உணரும்முன் தரையிலே உருண்டுகொண்டிருந்தான் வளவன். அவனைத் தாண்டி வீசப்பட்டான் பொதியவெற்பன். உடைந்த தேரை, கனைப்பொலியோடு வேகம் குறையாமல் இழுத்து முன் சென்றன குதிரைகள். கொடிஞ்சி வகைத் தேரைத் தனியொருவன் உடைக்கவும் முடியும் என்பதை யாராலும் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது.

தேரிலிருந்து சரிந்தவனை நோக்கித் தாக்குதலைத் தொடுத்து உயிர் பறிப்பதற்கெல்லாம் இரவாதனுக்கு நேரமில்லை. அவனது வேகத்துக்குக் குறிக்கீட்டாக எது வந்தாலும் இடியெனத் தாக்கி அழித்தபடி நீலனின் கூடாரம் நோக்கி விரைவது மட்டுமே அவன் வேலை. ஏறக்குறைய அவன் நீலனின் கூடாரத்தை நெருங்கினான். அவ்வளவு நேரமும் அவனது வேகத்தைத் தடுக்க அணியணியாய் வந்து அகப்படை வீரர்கள் போரிட்டனர். ஆனால், மூன்றாவது தடுப்பைப் பிளந்து உள்நுழைந்த வேகத்தில் பொதியவெற்பனின் தேரை ஒரே வேலால் நொறுக்கிக் கவிழ்த்ததைப் பார்த்த யாரும் அதன் பிறகு எதிர்கொண்டு நிற்கவில்லை.

விழுந்து எழுந்த வேகத்தில் தனது காப்புப்படையோடு இரவாதனை நோக்கிப் பாய்ந்தான் பொதியவெற்பன். பாண்டிய

இளவரசனின் தலைசிறந்த பாதுகாப்புப் படையினர் பதினாறு பேர் இரவாதனைச் சுற்றிவளைத்தனர்.

இடதுகையில் நீள்மழுவும் வலதுகையில் ஈர்வாளும்கொண்டு இரவாதன் தாக்கிய வேகம் பதினாறு பேரையும் நடுங்கச்செய்தது. பறம்பின் சிறப்பு உலோகக் கலவையால் நாள்கணக்கில் ஊறவைக்கப்பட்ட வாள் அது. வேறெந்த உலோகத்துடனோ, கரும்பாறையிலோ மோதினால்கூட முனை மழுங்காது, அதே நேரம், எதிர்வீசப்படும் வாளை வெட்டிக்கூறாக்கும் வலுவுள்ள ஈர்வாள் அது. இரவாதனின் வலதுகை வேகம் பாரியே வியக்கக்கூடியது.

அதனால்தான் அவன் செலுத்தும் அம்பு யானையின் கழுத்தில் ஒரு பகுதியில் தைத்து மறுபகுதியில் எட்டிப்பார்க்கிறது. அதுவும் நீலனின் கூடார வாயிலில் நடக்கும் இந்தத் தாக்குதலில் மரக்குச்சிகளை வெட்டித்தள்ளுவதைப்போல பாண்டிய வீரர்களின் வாள்களைச் சீவித்தள்ளினான். இடதுகை மழுவின் முன் விளிம்பில் கைகளும் தலையுமாக மாட்டிய எதிரிகளின் உறுப்புகள் மீன் செதில்களைப்போலச் சீவப்பட்டு எல்லா திசைகளிலும் பறந்துகொண்டிருந்தன. பீறிடும் நீரூற்றுக்கு இடையே குளித்து நகர்பவனைப்போல் குருதி ஊற்றுக்கு இடையே நகர்ந்துகொண்டிருந்தான் இரவாதன்.

அவனை மறிக்கும் ஆற்றல் அங்கு இருக்கும் யாருக்கும் இல்லை. சினம்கொண்ட வேட்டை விலங்கின் எட்டுப்பற்களையும் தனது முகத்தருகே பார்த்ததைப்போல இரு கைகளாலும் ஆயுதங்களைக் கைக் கொள்ளும் இரவாதனைப் பார்த்து மிரண்டு நின்றான் பொதியவெற்பன்.

நீலனின் கூடாரத்துக்குள் நுழைய சில அடிகளே இருந்தபோது பாய்ந்து முன்சென்று தடுக்கலாமா என நினைத்த பொதியவெற்பன், சட்டென, பின்னால் நிற்கும் போர்ப்பணியாளனுக்கு உத்தரவிட்டான். அவன் உடனடியாக அபாயச் சங்கை ஊதினான். குலசேகரபாண்டியனின் அருகில் இருந்த சிறப்புப்படை வீரர்கள் மூஞ்சலை நோக்கி விரையத் தொடங்கினர்.

குளவன்திட்டிலிருந்து போர்க்களம் முழுவதையும் பார்த்த பாரியால் மூஞ்சலுக்குள் என்ன நடக்கிறது என்பதைத் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. மூஞ்சல் தட்டியங்காட்டை விட்டு மிகத்தள்ளி இருப்பதாலும் கூடாரங்கள் மறைத்திருப்பதாலும் உள்ளுக்குள் நடக்கும் தாக்குதலைத் துல்லியமாகப் பார்த்தறிய முடியவில்லை. ஆனால், களத்தில் மூன்றாம்நிலையைக் கடந்து நின்றிருந்த குலசேகரபாண்டியனின் படைகள் மீண்டும் மூஞ்சலை நோக்கி விரைவதைப் பார்த்தான் பாரி. கடைசிக்கணத்தில் மூஞ்சல் தன்னைக் காத்துக் கொள்ள முடியாமல் திணறுவதை உணர்ந்தான்.

இப்போது பறம்புத்தளபதிகளில் யாராவது ஒருவர் மூஞ்சலில் இருக்க வேண்டும் என அவன் மனம் துடித்தது.

கருங்கைவாணன் தலைமையிலான படையை உடனடியாக மூஞ்சலுக்கு வரச்சொல்லி மையூர்கிழாருக்குச் செய்தி வந்தது. மூஞ்சல் பேராபத்தில் சிக்கிக் கொண்டது. தான் சொன்ன நேரத்தில் கருங்கைவாணன் அங்கே போயிருந்தால் இந்த நிலை உருவாகியிருக்காது; தலைமைத் தளபதியாகத் தான் பொறுப்பேற்றதை விரும்பாததால் அவன் தனது கட்டளையை ஏற்க மறுக்கிறான் என்று அவருக்குத் தோன்றியது. மீண்டும் மையூர்கிழார் சொன்னபோது கருகைவாணன் ஏதோ சொல்லவந்தான். ஆனால், அதற்குள் தனது குரலைப் பல மடங்கு உயர்த்தியபடி கத்தினார் மையூர்கிழார்.

அதன் பிறகு கருங்கைவாணன் மறுப்புச் சொல்லவில்லை. `மிக விரிந்த போர்க்களத்தில் வந்துசேரும் செய்திகளை எப்படிக் கையாள்வது என்பது தனித்த கலை; இவனது நாடே இந்தப் போர்க்களத்தைவிடச் சிறியது; இவன் இதை எப்படிப் புரிந்துகொள்ள முடியும்?' என்று எண்ணியபடி தனது தேரைத் திருப்ப உத்தரவிட்டான் கருங்கைவாணன்.

தாக்குதல் உச்சம்கொண்டிருக்கிற இந்த நேரத்தில் கருங்கைவாணன் ஏன் விலகிச்செல்கிறான் என்பது அவனது தேர்ப்படைத் தளபதி வெறுகாளனுக்குப் புரியவில்லை. ஆனால்,

எதிர்த்து நின்று போரிட்டுக் கொண்டிருக்கும் முடியனுக்குப் புரிந்தது. கருங்கைவாணனை இந்த இடம் விட்டு நகரவிடக் கூடாது; அதற்கு ஒரே வழி, அவனது பார்வை அகலும் முன் அவனது தளபதியான வெறுகாளனைக் கொன்று வீழ்த்துவது மட்டுமே என முடிவுசெய்தான்.

அவ்வளவு நேரமும் கருங்கைவாணனின் படைப்பிரிவைத் தாக்கிக் கொண்டிருந்த முடியன், தன் வளவனை நோக்கிச் சொன்னான்... ``நேராக வெறுகாளனை நோக்கித் தேரை நிற்காமல் செலுத்து. எக்காரணத்தாலும் வேகத்தைக் குறைக்காதே.'' சொல்லி முடிக்கும்போது பாய்ந்துகொண்டிருந்தன குதிரைகள். அம்புகளை எடுத்து நாணேற்றி விடுவிக்கும் நேரம்கூட முடியனுக்கு இல்லை. கருங்கைவாணன் தனது தேரை மூஞ்சல் நோக்கித் திருப்பிவிட்டான். அவனது பார்வை மறைவதற்குள் வெறுகாளன் வீழவேண்டும்.

கருங்கைவாணன் இங்கிருந்து புறப்படும்போது எதிரிப்படைத் தளபதி தன்னை நோக்கி முன்னேறிவருகிறான் என்பதை அறிந்த கணமே அச்சம் மேலேறத் தொடங்கியது. அவன் வழக்கத்தைவிட வேகமாகவே அம்பை வில்லில் பூட்டினான். அப்போது உள்ளங்கை அளவு வண்டுகள் சீறிவருவதுபோல அவனை நோக்கி வந்தன. `என்ன அவை?' என்று அவன் பார்க்கும்போது மார்பெலும்பிலும் இடதுதொடையிலும் இரண்டு உள்ளிறங்கின. முன்னுதடு முழுக்கப்

புலிநகங்களாலான வட்டுடைத் தட்டு அது. காற்றை அறுத்தபடி சீவிச்செல்லும்; தேர்ந்த வீரன் கண்ணிமைக்கும் நேரத்தில் பன்னிரண்டு தட்டுகளை எறிவான். பிளிறும் யானை, துதிக்கையைக் கீழிறக்கும் முன் சாய்த்துவிட முடியும். வெறுகாளனால் எப்படி அதை எதிர்கொண்டு நிற்க முடியும்?

தேரைத் திருப்பிய கணத்தில் வெறுகாளன் வீழ்த்தப்பட்டதை அறிந்து. களம் நடுங்கக் கத்தினான் கருங்கைவாணன். மொத்தக் காட்சியையும் பார்த்துக் கொண்டிருந்த மையூர் கிழாருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. முடியன் மீண்டும் தனது தேரைப் பழையநிலைக்குக் கொண்டுவந்தான். வரும்போதே விண்டனை நோக்கிக் குரல்கொடுத்தான் முடியன், ``கணப்பொழுதும் காலம் தாழ்த்தாதே; ஏறித்தாக்கு!''

விண்டன் முன்னிலும் வேகமாக முன்னேறினான். அதைப் பார்த்தபடி கொப்பளிக்கும் ஆவேசத்தோடு தாக்குவதற்காகப் பாய்ந்து வந்தான் கருங்கைவாணன்.

எந்தத் தூண்டிலைப் போட்டால் மூஞ்சலை நோக்கிப் போகவிடாமல் திருப்ப முடியுமோ, அந்தத் தூண்டிலை முடியன் வீசியவுடன் திரும்பினான் கருங்கைவாணன். அவனது தாக்குதல் உத்தி இன்னும் கடுமையாக இருக்கும் என எண்ணும்போது ஆறு பரண்களின் மேலிருந்தும் முரசின் ஓசை மேலெழுந்தது.

யாரும் எதிர்பாராத நிகழ்வாக இருந்தது. அதிர்ந்து பார்த்தனர் பலரும். நினைவு மீண்டவனைப்போல சட்டெனத் திரும்பிய மையூர்கிழார், ``மூஞ்சலை நோக்கித் தேரை விரட்டு'' என்றார்.

அவர் போகத் தொடங்கியதும் அவரைவிட வேகமாக மூஞ்சலை நோக்கி விரைந்தான் கருங்கைவாணன். தட்டியங் காடெங்கும் கடைசி ஐந்து பொழுதுகளில் நினைத்துப்பார்க்க முடியாதபடி தாக்குதல் தொடுத்த வீரர்கள், முரசின் ஓசை கேட்டதும் ஆயுதம் ஏந்திய கைகளைத் தளர்த்தினர். ஆனால், தளபதிகள் முன்னிலும் வேகமாகவும் படபடப்புடனும் மூஞ்சலை நோக்கி விரைந்தனர்.

கருங்கைவாணனின் தேரைத் தொடர்ந்து அதே வேகத்தில் முடியன் வந்துகொண்டிருந்தான். மூன்று நாள்களாகக் குதிரை ஏறாத தேக்கன், முடியனை விஞ்சியபடி குதிரையில் பாய்ந்துகொண்டிருந்தான். விலா எலும்பு உள்குத்தி இறங்குவதெல்லாம் தேக்கனின் நினைவிலேயே இல்லை. அவனைத் தொடர்ந்து உதிரன் வந்துகொண்டிருந்தான்.

மூஞ்சலின் வெளிப்புற அரண் அருகே வந்து நின்றது முடியனின் தேர். அவனுக்கு முன்னால், தன் கண்களையே நம்ப முடியாமல் உறைந்து நின்றான் கருங்கைவாணன். அவர்கள் உயிரெனக் காத்த மூஞ்சல், கண் பார்க்கும் எல்லை வரை

நொறுக்கப்பட்டுக்கிடந்தது. வெட்டுப்பட்ட வீரர்களின் உடல்கள் மலையெனக் குவிந்திருந்தன. தேரையோ குதிரையையோ உள்ளே கொண்டுசெல்ல முடியாத அளவுக்கு எல்லாம் நிலைகுலைந்திருந்தன.

எந்த ஒரு போர்க்களத்திலும் குறுகிய வட்டத்துக்குள் இத்தனை ஆயிரம் பேர் கொன்று குவிக்கப்பட்டிருக்க மாட்டார்கள். கருங்கை வாணன் திகைத்து நின்றபோது முடியனின் கண்கள் துடித்தபடி இருந்தன. மூஞ்சலுக்குள் ஒருசில வீரர்கள் மட்டுமே இங்கும் அங்குமாகத் தென்பட்டனர். கவசப்படையோ, அகப் படையோ, சூளூர்ப்படையோ எந்தப் படையைச் சேர்ந்த வீரர்களும் கண்ணில்படவில்லை. குதிரைகள் கணக்கில்லாமல் குத்திச் சாய்க்கப் பட்டுள்ளன. குவிந்துகிடக்கும் பிணக்குவியலின் மீது மிதித்து நடக்க முடியவில்லை. எல்லோரும் அப்படியே நின்றிருந்தனர்.

தொலைவில் ஒருவன் மட்டும் நடந்துவருவது தெரிந்தது. யாரவன் என்று யாராலும் அடையாளம் காண முடியவில்லை. செந்நிறக் குருதியில் மூழ்கி எழுந்து வந்துகொண்டிருந்தான். கால்களை இழுத்து முன்னகர முடியவில்லை. ஆனாலும் விடாமல் முயன்று வந்தான். உடலில் எங்கெல்லாம் வெட்டுப்பட்டுள்ளது என்பது எதுவும் தெரியவில்லை. குருதி கொட்டியபடி இருந்தது.

அவனது உடலமைப்பைப் பார்த்ததும் அவன் இரவாதன் இல்லை என்பது தெரிந்தது.

கையின் வலதுமூட்டின் ஓரச்சதையில் துளைத்திருந்த சிறுவாள் ஒன்று அப்படியே இருந்தது. அதைப் பிடுங்கக்கூடிய வலிமையின்றி நடந்துவந்தான். சற்று அருகில் வந்ததும் முடியன் அடையாளம் கண்டான், அவன் கரிணி என்று.

கண்டுணர்ந்த நேரத்தில் அவனை நோக்கி ஓடினான் முடியன். ஆனால், முன்னால் இருந்த வேந்தர்படை வீரர்கள் ``மூஞ்சலுக்குள் அனுமதிக்க மாட்டோம் என்று வாளால் மறித்து நிறுத்தினர்.

துடித்துப்போய் நின்றான் முடியன். தேக்கனும் உதிரனும் அவனருகில் பதற்றத்தோடு வந்து நின்றனர்.

கரிணி மூஞ்சலின் எல்லையை வந்தடைவதற்கு வெகுநேரமானது. உயிரை இழக்காமல் நடந்துவந்தவன், முடியனின் அருகில் வந்ததும் தான் கையில் கொண்டு வந்த வாளை, பறம்பின் குடிமுடியனிடம் ஒப்படைத்தபடி அப்படியே மண்ணில் விழுந்தான்.

முடியன் கையில் வாங்கியது இரவாதனின் ஈர்வாள்.

# பாரி - 105

மூஞ்சலிலிருந்து நாகக்கரட்டுக்கு இரவாதனைத் தன் இரு கைகளிலும் ஏந்திவந்தான் தேக்கன். மற்றவர்கள் எத்தனையோ முறை அவனிடமிருந்து வாங்க முயன்றும் அவன் தரவில்லை. பறம்பு ஆசான் மாவீரனுக்குச் செய்யும் மரியாதை இது.



சமதள வேந்தர்கள் படையோடு ஒப்பிட்டால், ஒவ்வொரு பறம்பு வீரனும் மாவீரனே. ஆனால், ஒரு பறம்பு வீரனை மற்ற பறம்பு வீரர்களோடு ஒப்பிட்டால் மாவீரர்கள் என வெகுசிலரே இருப்பர். இரவாதன் அப்படியொரு மாவீரன் என்று எல்லோருக்கும் தெரியும். ஆனால், தட்டியங்காட்டுப் போரின் தொடக்கத்திலிருந்து அவன் நடத்திய ஒவ்வொரு தாக்குதலும் இணைசொல்ல முடியாதது.

முன்திட்டப்படி, இன்றைய போரில் மூஞ்சலின் வெளிப்புற அரணை முழுமுற்றாக அழித்தொழிக்கும் பொறுப்பு முடியனுக்கும் விண்டனுக்கும் உரியது. ஆனால், அவர்களால் மூஞ்சலுக்கு அருகில் போகவே முடியவில்லை. அதே வேளையில் தனக்கான பொறுப்பின்படி கடைசி பத்து நாழிகை இருக்கும்போது, எதிரிகளால் வெளிப்புற அரணை உடைத்துக் கொண்டு உள்நுழையவே முடியாது எனக் கருதப்பட்ட மூஞ்சலை, தனது குதிரையின் வேகத்தைக் குறைக்காமலே உடைத்துக் கொண்டு உள்நுழைந்தான் இரவாதன். அகப்படையையும், பொய்க்கூடாரங்களில் நூற்றுக்கணக்கில் இருந்த கவசப்படையையும் முற்றிலுமாக அழித்தொழித்தான்.

இந்நிலையில்தான் பொதியவெற்பன், உதியஞ்சேரல், சோழவேழன் ஆகிய மூவரும் தங்களின் சிறப்புப் படைகளோடு மூஞ்சலுக்குள் நுழைந்தனர். நன்கு திட்டமிட்டிருந்ததால் கரிணியும் பிடறிமானும் இரு பக்கங்களிலும் இணையற்ற தாக்குதலை நடத்த, மூன்றாம் நிலையைக் கடந்து நீலனின் கூடாரம் நோக்கி முன்னேறினான் இரவாதன். அவனது வேகத்தையும் தாக்குதலையும் யாராலும் எதிர்கொள்ள முடியவில்லை. சூளூர் வீரர்களின் வாள்வீச்சு வேகம் வேந்தர்படைத் தளபதிகளால் தற்காத்துக் கொள்ளவே முடியாததாக இருந்தது. நிலைமை முற்றிலும் கைமீறிவிட்டதை உணர்ந்த நிலையில்தான் பேரரசர்

குலசேகரபாண்டியனின் தனித்த பாதுகாப்புக்கான சிறப்புப் படையை வரவழைத்தான் பொதியவெற்பன்.

தட்டியங்காட்டில் கடுமையாக மோதிக் கொண்டிருந்த இருதரப்புத் தளபதிகளும், போர் முடிவுற்றதுக்கான முரசின் ஓசையைக் கேட்டதும் மூஞ்சலை நோக்கி விரைந்தனர். ஒவ்வொருவருக்குள்ளும் ஒவ்வொரு வகையான பதற்றம் இருந்தது. மையூர்கிழார் தான் தலைமைத் தளபதியாகப் பொறுப்பேற்ற முதல் நாளிலேயே மூஞ்சல் தாக்கப்பட்டுவிட்டதே என்ற பதற்றத்தில் விரைந்தார்.

இறுதியில் அபாயத்தை உணர்த்தும் ஒலியெழுப்பப் பட்டதால் மூஞ்சல் கடுமையாகத் தாக்கப் பட்டிருக்கும் என்பதைக் கருங்கைவாணன் உணர்ந்தான். மூஞ்சலின் வலிமைமிகுந்த அமைப்பு வெளிப்புற மூடரண்தான். அதை உடைத்து உள்நுழையும் ஆற்றல்கொண்ட படையால் உள்ளுக்குள் போய் பேரழிவை உருவாக்க முடியும் எனத் தெரியும். ஆனால், அபாய ஒலி எழுப்பும் அளவுக்கு நிலைமை மாறும் என நினைக்கவில்லை. பறம்புப் படையின் முக்கியமான தளபதிகள் தட்டியங் காட்டில் தங்களுடன்தான் போரிட்டுக் கொண்டிருக்கின்றனர். குதிரைப்படை மட்டுமே அங்கே போயுள்ளது என்பதால் அகப்படை எளிதில் சமாளிக்கும் என்றுதான் எல்லோரும் நினைத்தனர். ஆனால்,

நிலைமை ஏன் கைமீறிப்போனது என்பது வெளியில் இருக்கும் யாருக்கும் புரியவில்லை.

முரசின் ஓசை கேட்டதும் முடியன்தான் முதலில் பாய்ந்து போனான். `கடைசி நாழிகையில், மூஞ்சலில் இருந்து இரவாதனின் படை பின்வாங்கிவிட்டது. இடைநிலையில் நின்றுதான் அவன் போரிட்டுக் கொண்டிருப்பான்' என நினைத்தான் முடியன். ஆனால், `இரவாதன், மூஞ்சலுக்குள் போய்விட்டான்' என தேக்கன் கணித்திருந்தான். எனவே, அவனது சிந்தனை முழுவதும் மூஞ்சலை நோக்கியே இருந்தது.

எல்லோரும் மூஞ்சலின் அருகில் வந்து நின்றபோதுதான் மூஞ்சல் என்னவாக இருக்கிறது என்பதைப் பார்க்க முடிந்தது. அகப்படை, கவசப்படை, வேந்தர்களின் சிறப்புப்படை, பேரரசரின் தனிப்படை அனைத்தையும் கொன்றுகுவித்த சூளூர் வீரர்களின் ஆடுகளம் எப்படி இருந்தது என்பதைப் பார்த்த கணம், மையூர்கிழாருக்கும் கருங்கைவாணனுக்கும் குருதியோட்டம் நின்றது. பிணக்குவியல்கள் கணக்கில்லாமல் இருந்தன. குருதி பொங்க மேலெழும் கதறல் பெருகி தட்டியங்காடு முழுவதும் எதிரொலித்தது. சில இடங்களில் யானை உயரத்துக்குக் கிடந்தன கொன்றழிக்கப்பட்ட வீரர்களின் உடல்கள்; பறம்பு வீரர்களின் குதிரைகள் கணக்கில்லாமல் கொன்றழிக்கப் பட்டுள்ளன.

தட்டியங்காடெங்கும் முழுநாள் போரிலும் கொல்லப்பட்டவர்களை மொத்தமாகக் குவித்ததைப்போல் இருந்தது.

அந்தத் தாக்குதலில் இரவாதனுடன் சென்ற சூளூர் வீரர்கள் யாரும் மிஞ்சவில்லை. ஆனால், ஒவ்வொருவனும் எண்ணற்றோரை வீழ்த்திய பிறகே வீழ்ந்தான். பொய்க்கூடாரங்களை பிடறிமான் தலைமையிலான வீரர்கள் முழுமுற்றாக அழித்து முடிக்கும்போது, தனது கவசப்படையோடு உள்நுழைந்து தாக்கினான் சோழவேழன். இடைவெளியோடு தொலைவில் நின்று போரிடுவதற்கும் நெருங்கி நின்று போரிடுவதற்கும் நிறைய வேறுபாடு உண்டு.

மூவேந்தர்களும் அவரவரின் சிறப்புப் படையோடு உள்நுழைந்தனர். அப்போது வரை மூஞ்சலின் வெளிப்புற அரண் வீரர்களால் முழுமையாகப் பாதுகாக்கப்பட்டிருந்தது. மூவேந்தர்களின் சிறப்புப்படை முழுமையாக உள்ளே வந்ததும் ஏறக்குறைய குவியலாக நின்று போரிடும் சூழல் உருவானது.

ஒருவருக்கொருவர் வாளையும் ஈட்டியையும் இன்னபிற ஆயுதங்களையும் முழுமையாகச் சுழற்றி வீசவும் வாங்கித் தாக்கவுமான இடைவெளி இல்லாத நிலை இருந்தது. தனக்கு முன்னால் நிற்கும் வீரனோடு போரிட்டுக் கொண்டிருந்தால், முதுகுப்புறத்தில் நிற்பவன் நமது படையைச் சேர்ந்தவனா அல்லது எதிரிப்படை வீரனா என்பது தெரியாத நிலை உருவானது. இந்நிலை, வேந்தர்படைக்குப் பெருஞ்சிக்கலை உருவாக்கியது;

ஆனால் சூளூர்ப்படைக்கு சாதகமான தன்மையை ஏற்படுத்தியது. அடர்கானகத்தில் குழுவாக இயங்கினால் மட்டுமே வாழவும் தப்பிப்பிழைக்கவும் முடியும். எனவே, தன்னுடன் வருகிறவன் யார் என்பதைத் திரும்பிப் பார்க்காமலேயே அறிந்துகொள்ள எண்ணற்ற வழிமுறைகளைப் பறம்பு மக்கள் அறிந்தவர்கள். அவர்களால் அடர் இருட்டில்கூட குழுவாகச் செயல்பட்டு, தாக்குதலை முன்னெடுக்க முடியும்.

மூன்று வேந்தர்களின் சிறப்புப் படைகள், மூன்று சேனைவரையர்களின்கீழ் முப்பத்தாறு சேனை முதலிகளால் தலைமை தாங்கப்படுவதாக இருந்தது. அவர்களுடைய உத்தரவின்கீழ் ஐந்தாயிரத்துக்கும் அதிகமான வீரர்கள் தாக்குதலில் இறங்கினர்.

விரிந்து உள்வாங்கும் குந்தமும் பனங்கருக்குப்போல உடலெங்கும் எண்ணிலடங்காத கூரிய முட்களையுடைய கழுமுள் சாட்டையும் சூளூர் வீரர்களின் தனித்த ஆயுதங்கள். வேந்தர்படை வீரர்கள் எண்ணற்றோர் உள்ளே வந்தது சூளூர் வீரர்களுக்கு நல்ல வாய்ப்பாக அமைந்தது. தங்களின் ஒலிக்குறிப்புகள் மூலம் கண நேரத்துக்குள் செய்திகளைப் பரிமாறிக் கொண்டனர். மூன்று வேந்தர்களின் மூன்று வகையான சிறப்புப் படைகளையும் முழுமையாக உள்வாங்கும் வரை வாளால் தாக்குதல் நடத்தினர். நிலைமையைக் கணித்து கூவல்குடி வீரன் ஓசையிட்டதும்

கரிணியின் தலைமையிலான படைவீரர்கள் தங்களின் இடுப்புப் பகுதியில் மெய்யுறைச்சட்டைக்குமேல் சுற்றிவைத்திருந்த கழுமுள் சாட்டையைச் சுழற்றத் தொடங்கினர். சாட்டையின் சிறு நுனி பட்டால் போதும், சதை கொத்தாகப் பிய்த்துக் கொண்டு வெளிவரும். ஒருவன் எதிரியின் காலுக்குக் கீழே சாட்டையைச் சுழற்றினால் மற்றொருவன் கழுத்துக்கு மேலே சாட்டையைச் சுழற்றினான். ஒவ்வொரு சாட்டையும் இரு ஆள் நீளமுடையது.

கேடயங்கள், வாளையும் ஈட்டியையும் எதிர்கொள்ளக் கூடியவை. கழுமுள் சாட்டைக்குத் தடுப்பாயுதம் எதுவுமில்லை. இப்படியோர் ஆயுதம் இருப்பதே சமவெளி மக்களுக்குத் தெரியாது. நினைத்துப்பார்க்க முடியாத பாதிப்பை ஏற்படுத்தும் கழுமுள் சாட்டையை, சூளூர் வீரர்கள் மின்னல் வேகத்தில் வீசத் தொடங்கினர்.

சதை மட்டுமன்று, கால் எலும்புகளையே பிய்த்துக் கொண்டு சென்றன சாட்டைகள். உச்சந்தலை முதல் கால்முட்டி வரை கவசம் அணிந்திருந்த சிறப்புக் கவசப்படையை முதல் தாக்குதலிலேயே அஞ்சிப் பின்வாங்கவைத்தனர். அப்போது பின்னிலையில் நின்ற பிடறிமானின் தலைமையிலான வீரர்கள் குந்தகத்தால் குத்தித் தூக்கத் தொடங்கினர். இருபெரும் பொறிகளில் சிக்கித் சிதையத் தொடங்கியது சிறப்புக் கவசப்படை.

எந்த ஒரு போரிலும் கவசப்படை இவ்வளவு கொடுமையான அழிவுக்கு ஆளானதில்லை. மூஞ்சலுக்குள் தாங்கள் உருவாகிய பொறியில் பறம்பு வீரர்கள் சிக்குவார்கள் என்றுதான் எல்லோரும் எதிர்பார்த்தனர். ஆனால், சூளூர் வீரர்களின் பொறிக்குள் முழுமுற்றாக வேந்தர்படை சிக்கியது. அவசரத்தில் மூவேந்தர்களின் மூன்று சிறப்புப் படைகளும் மொத்தமாக உள்ளிறக்கியதால் அவர்களால் போரிடுவதற்குப் போதுமான களத்தை உருவாக்கிக் கொள்ள முடியவில்லை. இந்நிலையில் தாக்குதலின் அளவு எல்லை கடந்ததாக இருந்ததால் வெளிப்புற அரணைக் காத்துக் கொண்டிருந்த வீரர்களையும் உள்முகத் தாக்குதலுக்குப் பயன்படுத்தவேண்டிய சூழல் உருவானது. இவையெல்லாம் சூளூர் வீரர்களுக்கு வாய்ப்பாகவே அமைந்தன.

சூளூர் வீரர்கள் எல்லோரும் இன்றைய நாளின் முடிவை தெளிவாகத் தெரிந்தவர்களாகவே இருந்தனர். தாங்கள் உயிருடன் திரும்பும் வாய்ப்பு மிகமிகக் குறைவே. ஆனால், நீலன் மீட்கப்பட்டே ஆக வேண்டும். அதற்காக எல்லையில்லாத வீரத்தை வெளிப்படுத்தி வேந்தர்படையை முழுமுற்றாக வீழ்த்த வேண்டும் என்ற குறிக்கோளுடன் போரிட்டனர். தட்டியங்காட்டில் இதுவரை நிகழாத பேரழிவை அவர்கள் நிகழ்த்திக் காட்டினர். எண்ணிக்கையில் இதைவிட அதிகமான வீரர்களை இந்தப் போர்க்களத்தில் பறம்புப்படை கொன்றழித்துள்ளது. ஆனால்,

அவர்களெல்லாம் பொதுவான படைவீரர்கள். இன்று சூளூர் வீரர்கள் அழித்தொழித்துள்ளதோ மூவேந்தர்களின் மிகச்சிறந்த படைவீரர்களின் தொகுப்பை. இந்த வீரர்களின் ஆற்றலை நம்பித்தான் வேந்தர்கள் தங்களின் பாதுகாப்பை உறுதிசெய்வர்.

மூன்று பெருவேந்தர்களின் சிறப்புப் படைகளும் மூன்று வகையான தன்மைகளைக் கொண்டிருந்தன. கவச உடைகளில் தொடங்கி, பயன்படுத்தும் ஆயுதம் வரை நிறைய வேறுபாடுகள் மூன்று படைகளுக்கும் உண்டு. ஆனால், சூளூர் வீரர்களின் தாக்குதலுக்கு முன்னால் எந்தப் படையும் எந்நிலையிலும் தாக்குப்பிடிக்க முடியவில்லை. ஐந்தாயிரத்துக்கும் அதிகமானோரைக் கொண்ட கவசப்படையை சூளூர்ப்படையின் சில நூறு வீரர்கள் முழுமுற்றாக அழித்தொழித்தனர். இந்தத் தாக்குதலுக்கு நிகரான தாக்குதலை இதுவரை யாரும் கேள்விப்பட்டதுகூட இல்லை.

மலையெனக் குவிந்து கிடக்கும் வேந்தர்படை வீரர்களின் பிணங்களுக்குள் சூளூர் வீரர்களின் உடல்களைத் தேடி எடுக்கவேண்டி இருந்தது. போர் முடிவுற்ற ஓசை கேட்டதும் வேந்தர்படை வீரர்கள் அனைவரும் பாசறைக்குத் திரும்பினர். இறந்தவர்களை அப்புறப்படுத்துவது, வீரர்களின் வேலையன்று; போர்ப் பணியாளர்களின் வேலை. மூஞ்சலுக்குள் பறம்பு வீரர்கள் அனுமதிக்கப்படாததால் அவர்கள் வெளியிலேயே காத்திருந்தனர்.

வேந்தர்களின் போர்ப் பணியாளர்கள், சூளூர் வீரர்களின் ஒவ்வோர் உடலாகத் தந்து கொண்டிருந்தனர். அதை வாங்கிய பறம்பு வீரர்கள், நாகக்கரடு நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். அனைத்து உடல்களும் எடுக்கப்படும் வரை முடியன் அந்த இடம் விட்டு அகலவில்லை.

இரவாதனின் உடலைத் தேக்கன் தூக்கிச் சென்றான். அவன் பின்னால் பறம்பின் மொத்தப் படையும் வந்துகொண்டிருந்தன. நாகக்கரட்டுக்கும் இரலிமேட்டுக்கும் நடுவில் இருக்கும் பள்ளத்தாக்குப் பகுதிக்கு அவன் வந்தபோது இருள் முழுமைகொண்டிருந்தது. இரலிமேட்டிலிருந்து தேக்கனை நோக்கி ஓடிவந்தான் பாரி. அவனுக்குப் பின்னால் காலம்பன் உள்ளிட்ட மற்றவர்கள் ஓடோடி வந்தனர். பெருவீரனின் மரணம் மொத்தக் காட்டையும் உறையவைத்திருந்தது. சிறிய ஓசைகூட எழவில்லை. தீப்பந்தத்தோடு சில வீரர்கள் பாரிக்குப் பின்னால் ஓடிவந்துகொண்டிருந்தனர்.

எதிர்வந்த பாரி, தேக்கனுக்கு முன்னால் இரு கை ஏந்தி நின்றான். தேக்கனால் பாரியின் முகத்தைப் பார்க்க முடியவில்லை. தலை குனிந்தபடி கையில் இருக்கும் இரவாதனையே பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால், பாரியின் கைகளுக்கு இரவாதனை மாற்றவில்லை. எதிர்நிலையில் கையேந்தி நிற்கும் பாரி, கைகளைத் தளர்த்தவில்லை. இருவருக்கும் உள்ளோடும் குருதி உறைந்து

நின்றுவிட்டதைப் போல் இருந்தது. முன்னும் பின்னுமாக வீரர்கள் சூழ்ந்தனர். தீப்பந்தங்களின் ஒளி இரவாதனின் மேலே படர்ந்தபடி இருந்தது.

பாரி குனிந்து இரவாதனைப் பார்க்கவேயில்லை; நிமிர்ந்தபடி தேக்கனையே பார்த்துக் கொண்டிருந்தான். தேக்கனோ நிமிர்ந்து பாரியைப் பார்க்கவேயில்லை; குனிந்தபடி இரவாதனையே பார்த்துக் கொண்டிருந்தான். இருவருக்குள்ளும் உணர்வுகள் கொந்தளித்துக் கொண்டிருந்தன.

பாரி குனிந்து இரவாதனின் உடலைப் பார்த்தாலோ, தேக்கன் நிமிர்ந்து பாரியின் முகத்தைப் பார்த்தாலோ உடைந்து நொறுங்கிவிடுவர். வீரர்களின் மரணத்தில் கண்ணீர் சிந்தக் கூடாது. அதுவும் பாரியும் தேக்கனும் கலங்கினால் நிலைமை என்னவாகும்? இருவரும் அதைத் தவிர்க்கவே முயன்று கொண்டிருந்தனர். மனதின் உறுதியை, கனத்த அமைதி நொறுக்கிக் கொண்டிருந்தது. ஆனால், என்ன செய்வதென்று யாருக்கும் விளங்க வில்லை. நின்ற இடத்தை விட்டு இருவரும் நகரவில்லை.

இந்தச் சூழலை எப்படிக் கையாள்வதென்று உடன் இருக்கும் யாருக்கும் தெரியவில்லை. வாரிக்கையனும் கபிலரும் செய்தியைக் கேள்விப்பட்டு இடிந்துபோய் இரலிமேட்டின் குகை அடிவாரத்திலேயே உட்கார்ந்துவிட்டனர். பாரியுடன் வந்து நிற்கும்

காலம்பன் இருவரையும் மாறிமாறிப் பார்த்தான். அவனுக்கு என்ன செய்வதெனப் புரியவில்லை.

ஒவ்வொரு கணமும் கடக்க முடியாத கணமாக உறைந்து நின்றது. தலை நிமிராமலே இருந்த தேக்கன், ஒரு கணத்தில் சட்டென்று இரவாதனைப் பாரியின் கைகளில் ஒப்படைத்து விட்டு அப்படியே அவன் கால் பற்றிக் கதறினான் ``காட்டின் தலைமகனை இழந்து விட்டோமடா பாரி!''



மலை உடைந்து சரிவதைப்போல இருந்தது. வெடித்து மேலெழும்பியது வீரர்களின் ஓலம். ஆசானின் கதறல் காட்டையே உலுக்கியது. காரமலையின் முகட்டை முட்டியது தேக்கனின் விம்மல்.

கைகள் இரவாதனை ஏந்தி நிற்க, கால்களைத் தேக்கன் பற்றி நிற்க, கண்ணீரும் குருதியும் மேலெல்லாம் கொட்டியபடி பாறையென நின்றான் பாரி.

மற்ற வீரர்கள் ஆசானைப் பிடித்துத் தூக்க எண்ணினர். ஆனால், யாரும் அருகில் செல்லவில்லை. பறம்புத் தலைவனின் கால் பற்றிக் கதறும் ஆசானின் உச்சந்தலையில் இரவாதனின் குருதி விழுந்துகொண்டே இருந்தது. போர்க்களத்துக்குப் பொறுப்பு, முடியனும் தேக்கனும்தான். ``நாங்கள் மாவீரனைக் காக்கத் தவறிவிட்டோம். அவன் அனைத்துத் தாக்குதலையும் எங்களிடம் சொல்லிவிட்டுத்தான் செய்தான். ஆனால், நாங்களோ அவனிடம் கூறிய திட்டப்படி செயல்படத் தவறிவிட்டோம். இந்த மரணம் முடியனும் தேக்கனும் கவனம் தவறியதால் நிகழ்ந்தது' ' எனப் புலம்பி அழத் துடித்தது தேக்கனின் மனம். ஆனால், சொல்லவந்த சொற்கள் எதுவும் மேலெழவில்லை. உடைந்து கதறும் ஆற்றாமையிலிருந்து மீள முடியவில்லை. சற்று நேரத்துக்குப் பிறகே பாரியின் கால்களிலிருந்து கைகளை விலக்கினான் தேக்கன். அந்த விலகுதலில் மனம் ஆழமான நிலையொன்றை எய்தியது.

அவரவர்தானே மீண்டுகொள்ள வேண்டும். அடுத்தவருக்கு ஆறுதல் உரைக்க பறம்பு வீரர்கள் யாரிடமும் சொற்கள் இல்லை. தேக்கன் கைகளை விடுவித்துக் கொண்ட பிறகு பாரி நடக்கத் தொடங்கினான். வீரர்களின் பெருங்கூட்டம் அவனைத் தொடர்ந்து கொண்டிருந்தது.

தேக்கன், அந்த இடத்திலிருந்து எழுந்திருக்கவில்லை. எல்லோரும் தன்னைக் கடந்து போகும் வரை அங்கேயே

இருந்தான். அனைவரும் கடந்து சென்றனர். மனம் சற்று நிதானம்கொண்டது.

`ஏன் உடைந்து கதறினோம்? நமது கதறலையும் சேர்த்தல்லவா பாரி சுமந்து செல்கிறான். நாம் கட்டுப்படுத்தியிருந்திருக்க வேண்டும்' என, எண்ணங்கள் தோன்றியபடி இருந்தன. எல்லோரும் போன பிறகு நான்கைந்து வீரர்கள் மட்டும் உடன் இருந்தனர். அவர்களையும் போகச் சொன்னான். ஆனால், வீரர்களோ தேக்கனுக்கு உதவுவதற்காக அங்கேயே நின்றனர். மீண்டும் சத்தம்போட்டு போகச் சொன்னான். அவர்கள் சென்ற பிறகு கைகளை ஊன்றி மெள்ள எழுந்து நின்று பார்த்தான். தொலைவில் இரலிமேட்டின் முதற்குகையின் அடிவாரத்தில் கூட்டம் கூடி நின்றது. மலையெங்கும் இருக்கும் தீப்பந்தங்கள் அந்த இடம் நோக்கிக் குவிந்தபடி இருந்தன. அந்தக் காட்சியைப் பார்க்க முடியாமல் நாகக்கரட்டில் இருக்கும் தனது குடிலை நோக்கி மெள்ள நடக்கத் தொடங்கினான்.

குகை அடிவாரத்தில் வைக்கப்பட்ட இரவாதனின் உடலைப் பார்க்கும் ஆற்றலின்றி பாறை மறைப்பொன்றிலே ஒடுங்கிக்கிடந்தார் கபிலர். நேற்றிரவு பொற்சுவையின் மரணம் அவர் மடியில்தான் நிகழ்ந்தது. இன்றிரவோ இரவாதனின் உடல் கிடத்தப்பட்டிருக்கிறது. ஏது செய்வதென்று தெரியவில்லை. பாரியின் முகத்தைப் பார்க்கவோ, அவனிடம் பேசவோ மனதுக்கு வலுவில்லை.

கையூன்றி உட்காரக்கூட வலுவின்றி, பாறையோடு பாறையாக சாய்ந்தே கிடந்தார். மூஞ்சலிலிருந்து சூளூர் வீரர்களின் உடல்கள் ஒவ்வொன்றாக வந்துகொண்டிருந்தன. துயரத்தின் பேரலை காரமலை முழுவதும் பெருகிக் கொண்டிருந்தது.

அப்போது கூட்டத்துக்குள் யாரோ ஒருவன் வந்து, ``கபிலர் எங்கே?'' என்று விசாரித்தான். வீரன் ஒருவன் பாறையின் அடிவாரத்தில் சாய்ந்து கிடக்கும் கபிலரைக் கைகாட்டிக் குறிப்பு சொன்னான். வந்துள்ளவன், திசைவேழரின் மாணவன். ஏற்கெனவே இருமுறை வந்தவன்தான். ஆனால், ஒவ்வொரு முறையும் ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு நிலையில் கபிலரைக் காண்கிறான்.

இப்போது நிலைகுலைந்து கிடக்கும் கபிலரிடம் வந்து ``திசைவேழர், உங்களை அழைத்துவரச் சொன்னார்' ' என்றான்.

அதைக் காதுகொடுத்துக் கேட்கும் நிலையில் கபிலர் இல்லை.

வந்தவன் மீண்டும் சத்தம் போட்டுச் சொன்னான்.

சற்றே கவனம்கொண்ட கபிலர், அவனை உற்றுப்பார்த்தபடி மறுத்துத் தலையை ஆட்டினார்.

அவனோ மீண்டும் வலியுறுத்தினான்.

பேசுவதற்குச் சொற்கள் மேலெழவில்லை. ஆனாலும் முயன்று சொன்னார் ``நான் வரும் நிலையில் இல்லை என்பதை திசைவேழரிடம் சொல்லிவிடு.''



வந்த மாணவனுக்கு வேறென்ன செய்வதெனத் தெரியவில்லை. பெரும் புலவரிடம் இதற்குமேல் வலியுறுத்த முடியாது எனச் சிந்தித்தபடி எழுந்து நடக்க முற்பட்டான்.

இதைக் கவனித்தபடி இருந்த வாரிக்கையன், வந்தவனைக் கைகாட்டி நிறுத்தியபடி கபிலரிடம் வந்து, ``திசைவேழரிடம் போய் என்னவென்று கேட்டு வாருங்கள்' ' என்றார்.

``நான் எதையும் கேட்கும் நிலையில் இல்லை. என்னால் எதுவும் செய்ய முடியாது' ' என்றார் கபிலர்.

வாரிக்கையன் இங்குமங்குமாகப் பார்த்தார். அவரின் கண்கள் தேக்கனைத் தேடின. அவர் குடிலுக்குப் போய்விட்டதாக வீரன் ஒருவன் சொன்னான். கபிலரை நாம்தான் சமாதானப்படுத்தி

அனுப்ப வேண்டும் என நினைத்துக் கொண்டு மீண்டும் கபிலரிடம் வந்தார்.

அவரோ வாரிக்கையன் சொல்வதைக் கேட்கும் நிலையில் இல்லை. ஆனாலும் வாரிக்கையன் விடவில்லை. ``நீங்கள்தான் பறம்பின் கோல்சொல்லி. எதிரிப்படையின் கோல்கொல்லி அழைக்கும்போது போகவில்லையென்றால், நமது தரப்புக் கருத்து கேட்கப்படாமலேயே போய்விடும் ஆபத்துள்ளது. எனவே, துயரத்தை விழுங்கி, கடமையை ஆற்றுங்கள்’ ’ என்றார்.

கபிலரோ கண்களை உருட்டி, பரிதாபமாகப் பார்த்தார். ``எனது உடலியக்கம் செத்துக்கிடக்கிறது. என்னால் எழுந்திருக்கவே முடியாது. பிறகு எப்படி..?’’ என்று சொல்லியபோதே கண்களில் நீர் கொட்டியது.

வாரிக்கையனால் கபிலரைப் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனால், வேறு வழியேதுமில்லை. அவர் போய்த்தான் ஆகவேண்டும் என எண்ணியபடி சொன்னார், ``யாராலும் இந்தத் துயரத்தைத் தாங்கிக் கொள்ள முடியாது. ஆனாலும் பொழுது விடிந்தால் நம் வீரர்கள் தட்டியங்காட்டில் போரிட்டுத்தானே ஆகவேண்டும்.’’

கபிலர் வாரிக்கையனைக் கவனித்தார்.

``மனம் நொறுங்கிக் கிடந்தாலும் எண்ணம் கைகூடினால் எழுந்து நிற்க முடியும் என்பதை ஒவ்வொரு வீரனும் ஒவ்வொரு நாளும் சொல்லிக் கொண்டுதானே இருக்கிறான். உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லையா கபிலரே?''

``புரிகிறது. ஆனால், நான் அதற்கான ஆள் இல்லையே. என்னால் இதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை' ' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே காற்றில் கேட்ட கதறல் குரலோடு சேர்ந்து வாய்விட்டுக் கதறினார் கபிலர். கைகள் இரண்டையும் கூப்பி, கண்ணீர் பெருக வேண்டினார்.

கபிலரின் நிலை புரிகிறது. ஆனால், அப்படியே விட்டுவிட முடியாது என முடிவுக்கு வந்த வாரிக்கையன் சொன்னார், ``முடியனை நினைத்துப்பார்த்தீர்களா? சூளூர் வீரர்கள் எல்லோரின் உடலும் எடுக்கப்படும் வரை அவன் மூஞ்சல் விட்டு அகலாமல் அங்கேயே இருக்கிறான். பாரியை நினைத்துப்பார்த்தீர்களா? தேக்கனே காலைப் பிடித்து அழுத பிறகும் கலங்காமல் நிற்கிறான். அவர்களெல்லாம் இரவாதனைத் தங்களின் தோளில் போட்டு வளர்த்தவர்கள்.

வீரனின் மரணத்துக்குக் கைம்மாறு உண்டு. அதைச் செய்வதுதான் அவனுக்கு நாம் செலுத்தும் மரியாதை. இப்போது நீங்கள் பாடல் புனையும் புலவன் மட்டுமல்ல, பறம்பின்

கோல்சொல்லி. எழுந்து நடங்கள். இரவாதனின் குருதி, மூக்கில் ஏறி உச்சந்தலையைச் சூடாக்கிக் கொண்டிருக்கிறது. எப்படி உங்களால் உட்கார்ந்துகொண்டு அழ முடிகிறது?'' என்று குரல் உயர்த்தியவர், வந்திருந்த மாணவனைப் பார்த்து, ``அவரை அழைத்துக் கொண்டு போ' ' என்று ஆணையிட்டு விட்டு திரும்பிப் பார்க்காமல் கூட்டத்துக்குள் நுழைந்துவிட்டார்.

எங்கும் இருக்கும் வீரர்கள் வந்து மொய்த்துக் கொண்டிருந்தனர். குகை அடிவாரச் சரிவில் முண்டி உள்ளே போவது மிகவும் சிரமமாக இருந்தது. ஆனாலும் தடுமாறி உள்ளே நுழைந்த வாரிக்கையன் நீண்டநேரம் கழித்துத் திரும்பிப் பார்த்தார் பாறையடிவாரத்தில் கபிலர் இல்லை.

நாகக்கரட்டிலிருந்து தட்டியங்காட்டை நோக்கி இறங்கும்போது அடர் இருள் அப்பிக்கிடந்தது. வீரர்கள் தீப்பந்தம் ஏந்தி முன் நடந்தனர். வழக்கம்போல் போர்க்களத்தின் நடுவில் இருக்கும் பரணில்தான் திசைவேழர் நிற்பார். அங்குதான் இருமுறையும் அழைத்துவரச் சொல்லிப் பேசியுள்ளார். இப்போதும் அங்கிருந்துதான் அழைத்துவரச் சொல்லியுள்ளார் என்று எண்ணியபடி நடந்தார் கபிலர். ஆனால் மாணவனோ, தட்டியங்காட்டின் நடுப்புறம் செல்லாமல் இடதுபுறம் சென்றான்.

``ஏன் இந்தப் பக்கம் செல்கிறாய்?'' எனக் கேட்டார் கபிலர்.

அதற்கு அந்த மாணவன், ``இடதுபுறம் கடைசியாக இருக்கும் பரண்மீதுதான் திழைவேழர் நிற்கிறார். அங்குதான் அழைத்துவரச் சொன்னார்’ ’ என்றான்.

அதற்குமேல் கேட்கும் நிலையில் அவர் இல்லை. அவன் பின்னே நடந்து சென்றார்.

பரணின் அடிவாரத்துக்குக் கபிலர் வந்தபோது, மூவேந்தர்களும் வேந்தர்படைத் தளபதிகளும் நின்றிருந்தனர். திசைவேழர் பரண்மீது நின்றிருந்தார். ஏன் அனைவரையும் வரச் சொன்னார் என்பது யாருக்கும் தெரியவில்லை. வேந்தர்கள் மீண்டும் மீண்டும் கேட்டும் தளபதிகளிடம் விடை இல்லை. குலசேகரபாண்டியன் உள்ளிட்ட மூவேந்தர் குடும்பத்தினர் ஐவரும் வந்து நின்றிருந்தனர். மையூர்கிழார், கருங்கைவாணன் உள்ளிட்ட தளபதிகள் அணிவகுத்திருந்தனர். பறம்பின் தரப்பு கோல்சொல்லி வந்த பிறகே பேச முடியும் என்று திசைவேழர் சொல்லிவிட்டதால், யாரும் எதுவும் பேசாமல் அமைதிகாத்திருந்தனர்.

கபிலர் வந்ததும் அவரை பரண் மீது ஏறி வரச் சொன்னார். கபிலருக்கு, சற்றே ஐயம் உருவானது. பறம்பு வீரர்கள் ஓங்கலத்தைப் பயன்படுத்தித் தாக்குதல் நடத்தியபோது விசாரணைக்கு அழைத்திருந்தார். திசைவேழர், அப்போது பரண்விட்டு கீழேதான் அமர்ந்திருந்தார். மறுநாள் போர்க்களத்தின்

தன்மையைப் பற்றியும் தனக்கு உண்டான மன அழுத்தத்தைப் பற்றியும் விவாதிக்க வரச் சொன்னார். அப்போதும் கீழேதான் இருந்தார். அந்த இரு நிகழ்வுகளின்போதும் வேந்தர்கள் யாரும் இல்லை. ஆனால், இன்று வேந்தர்கள் அனைவரும் வந்து நிற்கின்றனர். திசைவேழரோ பரண் மேலிருந்தபடி தன்னையும் ஏன் மேலேறி வரச் சொல்கிறார் என எண்ணியபடியே பரண்மீது ஏறினார் கபிலர். முன்னும் பின்னுமாக இரு மாணவர்கள் அவர் ஏறிச் செல்ல உதவிசெய்தனர்.

பரணின் மேல்தளத்தில் நான்கு மூலைகளிலும் பந்தங்கள் எரிந்துகொண்டிருந்தன. நடுவில் சிறிய இருக்கை ஒன்றில் அமர்ந்திருந்தார் திசைவேழர். மேலேறிச் சென்ற கபிலர், திசைவேழரை வணங்க முயன்றபோது அவரின் முகத்தைப் பார்த்ததும் சற்றே அதிர்ச்சிக்குள்ளானார்.

முகம், கடுத்து உறைந்துபோய் இருந்தது. கண்கள் ஆற்றாமையால் கனன்றுகொண்டிருந்தன. வந்து நிற்கும் கபிலரை ஏறிட்டுப்பார்த்தார் திசைவேழர். துயரத்தின் பெருவலி கபிலரின் முகத்திலும் நிரம்பியிருந்தது.

கபிலரின் வரவுக்காகவே காத்திருந்த திசைவேழர் மெள்ள எழுந்து பரணின் முன்பகுதிக்கு வந்தார். கீழே எண்ணிலடங்காத பெரும்பந்தங்கள் எரிந்துகொண்டிருக்க, தேர்களின் மீது பேரரசர்கள் அமர்ந்திருந்தனர்.

திசைவேழர் பேச முன்வருவது அறிந்து மாணவன் ஒருவன் முரசின் ஓசையை மெள்ள எழுப்பினான். கீழே இருந்தவர்கள் மேலே பார்த்தபடி கவனம்கொண்டனர். முன்வந்து தடுப்புக்கட்டையைப் பிடித்தபடி திசைவேழர் கூறினார், ``இன்றைய போரில் நமது படை விதிகளை மீறிவிட்டது.''

எல்லோரும் சற்று அதிர்ச்சியானார்கள். `விதியை மீறியவர் யார்?' என்று ஒருவருக் கொருவர் பார்த்துக் கொண்டனர். மையூர்கிழார் கருங்கைவாணனிடம் பார்வையாலே கேள்வியை எழுப்பினார்.

கருங்கைவாணனோ, ``அப்படி யாரும் நமது தரப்பில் விதிகளை மீறவில்லை' ' என்றான்.

தலைமைத்தளபதி என்ற முறையில் மையூர்கிழார்தான் இப்போது பேசவேண்டும். அவரோ கருங்கைவாணனின் மீது சற்றே ஐயம்கொண்டிருந்தார். அவனிடம் நன்றாக விளக்கம் கேட்டறிந்த பிறகுதான் பேசத் தொடங்கினார், ``நிலைமான் கோல்சொல்லியை வணங்குகிறேன். வேந்தர்படையில் யாரும் விதி மீறவில்லையே.''

``போர்விதி மீறப்பட்டதை நானே கண்டேன்.''

``அப்படியென்றால், யார் விதி மீறினார் என்பதைக் கூறுங்கள் திசைவேழரே' ' என்று பணிந்து கேட்டார் மையூர்கிழார்.

எல்லோரும் பரண்மீது உற்றுப்பார்த்தபடி இருந்தனர். திசைவேழர் சொன்னார், ``பொதியவெற்பனும் சோழவேழனும்.''

அதிர்ந்து நின்றனர் அனைவரும்.

திசைவேழரின் குற்றச்சாட்டு, வேந்தர்களின் தரப்பிலிருந்த ஒவ்வொருவரையும் நடுங்கவைத்தது. அவரின் கூற்றுக்கு என்ன பதில் உரைப்பது, யார் பதில் உரைப்பது என்று யாராலும் முடிவுசெய்ய முடியவில்லை. குற்றம்சாட்டுவது எதிரிப்படை கோல்சொல்லி அல்ல; நமது படை கோல்சொல்லி. பக்கத்தில் பறம்புப்படை கோல்சொல்லி கபிலர் நின்று கொண்டிருக்கிறார். எனவே, இதை எந்தச் சொல்கொண்டு மறுப்பது?

சோழவேழன்மீதான குற்றச்சாட்டை மறுக்க, சோழனின் அமைச்சன் வளவன்காரி முன்வர ஆயத்தமானான். ஆனால், செங்கனச் சோழன் கண்களால் குறிப்பு கொடுத்த பிறகு, சற்றே ஒதுங்கி நின்றுகொண்டான். திசைவேழர் பாண்டியப் பேரரசரால் நியமிக்கப்பட்டவர். எனவே, அவர்களே இந்தப் பிரச்னையைத் தீர்க்கட்டும் என நினைத்தான்.

குலசேகரபாண்டியனோ அதிர்ச்சியுற்ற கண்களோடு அண்ணாந்து திசைவேழரையே பார்த்துக் கொண்டிருந்தார். `அவரது கூற்றை மறுத்து வாதாடுதல் எளிதல்ல. அமைச்சர் முசுகுந்தர் இருந்திருந்தால்கூட இந்தப் பிரச்னையை ஓரளவு தெளிவாகக்

கையாள்வார். ஆனால், ஆதிநந்தியை நம்பி எப்படி முன்னெடுப்பது? அமைச்சனை நிறுத்திவிட்டு தளபதிகளைப் பேசவிட்டால் நிலைமை மேலும் சிக்கலாகிவிடும்’ என்று நினைத்தபடி இருந்தார்.

குற்றச்சாட்டைக் கூறிய திசைவேழர், மறுமொழியை எதிர்பார்க்கவில்லை. தட்டியங் காட்டை விரிந்த கண்களோடு பார்த்தபடி சொன்னார், ``விதி மீறிய இருவரும் இக்கணமே இந்தப் போர்க்களம் விட்டு நீங்க வேண்டும். இனி, வாழ்வு முழுவதும் அவர்கள் ஆயுதங்களைக் கைக் கொள்ளக் கூடாது.’’

இடி விழுவதுபோல் இருந்தன திசைவேழரின் சொற்கள். உறைந்து நின்றனர் அனைவரும். குலசேகரபாண்டியனின் கண்கள் துடித்தன. பாண்டியப் பேரரசின் தலைமை அமைச்சன் ஆதிநந்தி உரத்தகுரலில் கத்திச்சொன்னான், ``நீங்கள் அறம் தவறிப் பேசுகிறீர் திசைவேழரே!’’

இடைவெளியின்றிச் சட்டெனச் சொன்னார், ``ஆம். நான் அறம் பிறழ்ந்தே பேசுகிறேன். அரண்மனையின் நம்பிக்கைக்கு உரியமுறையில் நடந்துகொள்வதை முற்றிலுமாக எனது ஆழ்மனம் துறந்துவிடவில்லை. அதனால்தான் எனது சொற்கள் இப்படி வந்துள்ளன. இல்லையெனில், அவர்கள் இருவருக்கும் மரணத்தையே தீர்ப்பாக வழங்கியிருப்பேன்.’’

# பாரி - 106



வேந்தர் தரப்பினர் நடுங்கி நின்றனர். திசைவேழரின் கூற்று யாரும் எதிர்பார்த்திராத ஒன்று. அதை யாராலும் எதிர்கொள்ள முடியவில்லை. ஆனால், எதிர்கொண்டே ஆகவேண்டும். என்ன செய்வதென்று முடிவெடுக்க முடியாமல் திணறினர். அமைச்சன் ஆதிநந்தி பேச முன்வந்தபோது, குலசேகரபாண்டியன் தனது கையசைவில் அதை நிறுத்தினார். அவரது கண் பார்வை மையூர்கிழாரை நோக்கிப் போனது. அவர் எந்த அவையிலும் வலிமையான உரையாடலை முன்வைக்கக்கூடியவர். இப்போது அவர் தளபதியாக இருந்தாலும் திசைவேழரை எதிர்கொள்ள அவரே பொருத்தமானவர் என்று குலசேகரபாண்டியனுக்குத் தோன்றியது.

பேரரசரின் கண்ணசைவில் உத்தரவைப் புரிந்துகொண்டார் மையூர்கிழார். இருக்கும் இடத்திலிருந்து சற்று முன்வந்து பெருங்குரலெடுத்துக் கூறினார், ``திசைவேழரை வணங்குகிறேன். எதன் அடிப்படையில் இந்தக் குற்றச்சாட்டைக் கூறுகிறீர்?''

``போரின் விதி மீறப்பட்டதாக நிலைமான் கோல்சொல்லி கூறிவிட்டால் தண்டனையைத் தாழ்ந்து பெறவேண்டும். அதுதான் விதி.''

``நான் விதியை மீறவில்லை. விளக்கம்தான் கேட்கிறேன்.''

``என்ன விளக்கம் வேண்டும் உனக்கு?''

``அவர்கள் இருவரும் விதியை மீறியதாக நீங்கள் சொல்வதற்கான விளக்கம்?''

``போர் முடிவுறும் முரசின் ஓசை கேட்கும்போது பறம்பின் குதிரைப்படைத் தளபதி இரவாதன் கூடாரத்தினுள் இருந்த நீலனை வெளியில் அழைத்துவந்துவிட்டான். ஆனால், முரசின் ஓசை கேட்டதும் தனது ஆயுதங்களைத் தாழ்த்தி அப்படியே நின்றான். மூஞ்சலை விட்டு வெளியேறாத நிலை என்பதால், நீலனை மீண்டும் கூடாரத்துக்குள் அனுப்பினான். போர் முடிவுற்ற

பிறகு மூஞ்சலை விட்டு வெளியேற்றக் கூடாது என்பதால் அப்படிச் செய்தான்.

நீலன் கூடாரத்துக்குள் நுழைவதைப் பார்த்துக் கொண்டே நின்றிருந்த இரவாதனை, பின்புறமிருந்து பொதியவெற்பனும் சோழவேழனும் சரமாரியாக அம்பெய்தித் தாக்கினர். அவர்களுடன் படையணியினரும் சேர்ந்து தாக்கினர். போர் முடிவுற்ற பிறகு ஆயுதங்களைத் தாழ்த்தி நின்றுகொண்டிருந்தவனை விதிகளை மீறிக் கொலைசெய்தனர் இருவரும்.'' சொல்லி முடிக்கும் முன் சினம்கொண்டு கத்தினான் சோழவேழன், ``நாங்கள் அதற்கு முன்பே அம்பெய்திவிட்டோம்.''

``நாங்கள் அம்பெய்திய பிறகுதான் உங்களின் முரசின் ஓசை கேட்டது" என்று உரக்கக் குரல்கொடுத்தான் பொதியவெற்பன்.

திசைவேழரின் உடல் நடுங்கியது. தனது கூற்றை மறுத்து மேலெழும் சொற்களை அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

இடைவெளியின்றி மையூர்கிழாரின் குரலும் மேலெழுந்து வந்தது, ``அரசப்பெருமக்கள் சொல்லும் விளக்கம் ஏற்புடையதா திசைவேழரே?''

மேலேறிய சினத்தைக் கட்டுப்படுத்தியபடி சொன்னார், ``நிலைமான் கோல்சொல்லி ஒரு பொய்யின் மீது விளக்கம் அளிக்கும் அளவுக்குத் தாழ்ந்துவிடவில்லை.''

மையூர்கிழார் சற்றே அதிர்ச்சியானார். திசைவேழரைக் கைக் கொள்வது எளிதன்று என்பது தெரியும். ஆனாலும் அவரின் குணமறிந்து உரையாடலை வேறு திசைக்குத் திருப்புவதே இப்போதிருக்கும் ஒரே வழி எனத் தோன்றியது. ``நான் பொய்யின் மீது விளக்கம் கேட்கவில்லை திசைவேழரே! அவர்களின் கூற்றுக்குப் பிறகு உங்களின் குற்றச்சாட்டின் மீதான விளக்கத்தைத் தெரிந்துகொள்ளவே கேட்கிறேன்.''

``நான் சொல்வது குற்றச்சாட்டன்று, தீர்ப்பு.''

எந்தச் சொல்லாலும் தான் அதிர்ச்சிக்குள்ளாக வில்லை என்பதைக் காட்டிக் கொள்ள இடைவெளியின்றி மையூர்கிழார் சொன்னார், ``உண்மைதான் திசைவேழரே. நீங்கள் சொல்வது தீர்ப்புதான். நான் கேட்பது அந்தத் தீர்ப்பின் மீதான சிறிய விளக்கம் மட்டுமே.''

``இன்னும் என்ன விளக்கம் தேவை?''

``முரசின் ஓசைக்கு முன்பே அவர்கள் அம்பெய்திவிட்டதாகக் கூறுகின்றனரே?''



``அவர்கள் இருவரும் இரவாதனின் தாக்குதலைக் கண்டு அதிர்ச்சியாகி நின்றிருந்தனர். கடைசி நாழிகையில் நீண்டநேரம் அவர்கள் அம்பெய்யவில்லை. முரசின் ஓசை கேட்ட பிறகு, இரவாதன் ஆயுதங்களைத் தாழ்த்தி உள்நுழையும் நீலனை ஏக்கத்தோடு பார்த்துக் கொண்டிருக்கும் போதுதான் இவர்கள் பின்னாலிருந்து அம்பெய்தனர். அதாவது, போரிட்டுக் கொண்டி ருக்கையில் இரவாதனை ஒன்றும் செய்ய முடியவில்லை. முரசின் ஓசை கேட்டு அவன் ஆயுதங்களைத் தாழ்த்திய பிறகு கோழைகளைப்போல, பின்னாலிருந்து தாக்கினர்.''

``என் தந்தையை `கோழை' என்றா சொல்கிறீர்?'' எனத் துடித்தெழுந்தான் செங்கனச்சோழன். பாண்டிய இளவரசனை இகழ்வதற்கு எதிராகக் கருங்கைவாணனின் குரல் அதைவிட மேலேறிவந்தது.

தாக்குதலைப்போல மற்றவர்களை உரத்துக் குரல்கொடுக்க இடம் தந்துவிட்டு, அதே நேரத்தில் தான் பணிந்து கேட்பதைப் போன்ற குரலில் மையூர்கிழார் கேட்டார், ``எம் தரப்பு நிலைமான் கோல்சொல்லி நீங்கள். உங்களிடமிருந்து நான் தெளிவு பெறவே விரும்புகிறேன். எனவே, தவறாகக் கருதவேண்டாம். நீங்கள் நின்றிருக்கும் இந்தப் பரணிலிருந்து வெகுதொலைவில் இருக்கிறது மூஞ்சல். அங்கு போர் நடந்துகொண்டிருந்தது. அம்பெய்தது முரசின் ஓசைக்கு முன்பா... பின்பா... என்பதை இங்கிருந்து கணிப்பது எளிதல்லவே!''

``இங்கிருந்து மூஞ்சல் எவ்வளவு தொலைவில் இருக்கிறது?''

``இரண்டு காதத் தொலைவில் இருக்கிறது.''

``அதோ அந்த விண்மீன் கூட்டம் எவ்வளவு தொலைவில் இருக்கிறது?''

வானத்தில் ஒளிரும் விண்மீன்களைக் காட்டி திசைவேழர் கேட்டதும் சற்றே அதிர்ந்து நின்றார் மையூர்கிழார். சட்டென விடை சொல்லவில்லை. இதற்கு விடை சொன்னால் திசைவேழர் அடுத்து என்ன சொல்வார் என்பதை உணர முடிந்தது. தலைநிமிர்ந்து விரிந்த கண்களால் வானத்தைப் பார்த்தார் மையூர்கிழார்.

இரலிமேட்டின் குகையடிவாரத்துக்குக் கொண்டுவரப்பட்ட சூளூர் வீரர்களின் உடல்கள், வரிசையாக வைக்கப்பட்டுக் கொண்டிருந்தன. இன்னும் சில வீரர்களின் உடல்களே

வரவேண்டியிருந்தன. அனைவரையும் புதைப்பதற்கான ஏற்பாடுகள் இன்னொரு பக்கம் நடந்துகொண்டிருந்தன.

போர்க்காலத்தில் இறுதிச்சடங்குகளை விரைவில் முடித்தாகவேண்டும். அப்போதுதான் அந்தத் தாக்கத்திலிருந்து மற்ற வீரர்கள் வேகமாக வெளிவருவர். அதன்பிறகு அவர்கள் தூங்கியெழுந்து மறுநாள் போருக்கு ஆயத்தமாக வேண்டும்.

உடல்நிலையும் மனநிலையும் போர்க்களத்துக்கான முழுத் தகுதிகொண்டிருக்க வேண்டும். எனவே, மரணத்தை ஒரு வாள்வீச்சுபோல கணப்பொழுதில் கடந்தாக வேண்டும். அதுதான் போர்க்களத்தின் விதி. வீசிச் சென்ற வாள், காற்றில் தனது தடத்தை விட்டுவைப்பதில்லை. அதேபோல்தான் வீரனின் நினைவுகள் போர்க்களத்தில் தங்கக் கூடாது. எல்லாம் உடனடியாக அகற்றப்பட்டாக வேண்டும்.

ஆனால், அங்கு அடுக்கி வைக்கப்பட்டுள்ளவை மாவீரர்களின் உடல்கள். அதனால்தான் உயிரோடு இருக்கும் ஒவ்வொரு வீரரும் அவர்களின் குருதியை எடுத்து மார்பெங்கும் பூசி வஞ்சினம் உரைத்தனர். அவர்கள் பயன்படுத்திய ஆயுதங்களைத் தனதாக்கத் துடித்தனர். அவர்களின் வீரம் தங்களின் உடலெங்கும் நிலைகொள்ள வேண்டும் என வேண்டினர். சூளூர் வீரர்கள் ஒவ்வொருவரின் பெயரையும் சொல்லி, காடு அதிரக் கத்தினர். ஆவேச உணர்வு எங்கும் பீறிட்டுக் கொண்டிருந்தது. காரமலையெங்கும் குரலின் வழியே சினத்தை நிறுத்தினர்.

தனித்திருக்கும் கரும்பாறைப் படுக்கையில் கிடத்தப்பட்டிருந்தது இரவாதனின் உடல். அவன் தலைக்கு மேல் பெருந்தீப்பந்தம் ஒன்று எரிந்துகொண்டிருந்தது. அந்தப் பந்தச்சுடரின் செந்நிற வெளிச்சம் குருதியைப் பீச்சிக் கொண்டிருந்தது. சுடரும் குருதியின் பேரொளி தனது உடலின் மேல் விழ ஒவ்வொரு வீரனும் முண்டியடித்து உள்நுழைந்து கொண்டிருந்தான். நிலைமை இப்படியே போனால் இரவு முழுமையும் கழிந்துவிடும். தூக்கமே இன்றித்தான் நாளை பறம்பு வீரர்கள் போர்க்களத்தில் நிற்கவேண்டிய நிலை ஏற்படும் என்று சிந்தித்த வாரிக்கையன், தேக்கனை அழைத்துவந்து விரைவாக இறுதி நிகழ்வை முடிக்கவேண்டும் எனத் திட்டமிட்டான்.

தேக்கனை உடனே அழைத்துவரச் சொல்லி அவனது குடில் நோக்கி வீரன் ஒருவனை அனுப்பிவைத்தான்.

பள்ளத்தாக்கில் இரவாதனைப் பாரியிடம் ஒப்படைத்த தேக்கன், தனது குடிலுக்கு வந்துசேர்ந்தான். அவனது எண்ண ஓட்டங்கள் நிலைகொள்ளாமலிருந்தன. எவ்வளவு பெரிய நெருக்கடியிலும் இடரிலும் கலங்காது முடிவெடுக்கும் ஆற்றலைப் பறம்புநாட்டுத் தேக்கன்கள் இழப்பதில்லை. ஆனால், தன்னால் தெளிவாக முடிவெடுக்க முடியவில்லையே என்ற பதற்றம் முதன்முறையாகத் தேக்கனுக்கு ஏற்பட்டது.

போர்க்களத்தை, அதன் போக்கை, வேந்தர்படையின் தாக்குதல் உத்திகளை, பறம்புப்படையின் வலிமையை எல்லாம்

மீண்டும் மீண்டும் நினைத்துப்பார்த்தபடியே இருந்தான். பறம்புநாட்டுத் தேக்கனாக, தான் இந்தக் கணம் எடுக்கவேண்டிய முடிவென்ன என்ற கேள்வியை எழுப்பி வெவ்வேறு விடைகளை அதற்குப் பொருத்திப் பார்த்தான். ஒவ்வொரு விடைக்கும் ஒவ்வொரு விளைவு இருந்தது. எந்த முடிவு என்ன விளைவை உருவாக்கும் என்பதை ஓரளவு தெளிவாக உணர முடிந்தது. ஆனால், போர்க்களத்தில் எல்லாவற்றையும் துல்லியமாக முன்னுணரவும் முன்திட்டமிடவும் முடியாது. எனவே, கேள்விகளை எல்லாவிதமான வாய்ப்புகளின் வழியேயும் மீண்டும் மீண்டும் கேட்டபடியே இருந்தான்.

குடிலின் படல் திறந்து உள்நுழைந்தான். வெளியில் எரிந்துகொண்டிருந்த பந்தத்திலிருந்து விளக்கை ஏற்றிக் குடிலுக்குள் கொண்டுவந்து வைத்தான். வழக்கமாக தேக்கனுக்குப் பணிவிடை செய்ய அங்கு இருக்கும் வீரர்கள் எல்லோரும் இரலிமேட்டுக்குப் போய்விட்டனர். யாரும் அங்கு இல்லை.



தனது இருக்கையில் அமர்ந்தான். `போர்க்களத்தில் போரிடத் தகுதியின்றி பறம்பு ஆசான் நிற்பது எவ்வளவு பெரிய இழப்புகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. நான் முழு ஆற்றலோடு இன்று களத்தில் நின்றிருந்தால் முடியனோ, நானோ மூஞ்சலை

அடைந்திருப்போம். இரவாதனை இழந்திருக்க மாட்டோம். ஆயுதங்களைக் கைக் கொள்ள முடியாத எனது இருப்பு, பறம்பு வீரர்களுக்கான மரண வழித்தடமாக மாறி நிற்கிறது.

நான் இருக்கும் வரை, பாரி பறம்பின் எல்லையை விட்டு வெளிவந்து களமிறங்க முடியாது. பாரி களம் இறங்காதவரை இதுபோன்ற இழப்புகளைத் தவிர்க்க முடியாது. பறம்புநாட்டு மாவீரர்களையும் இணையற்ற போராளிகளையும் இனியும் நாம் போர்க்களத்தில் பலிகொடுக்கக் கூடாது. அதற்கு இருக்கும் ஒரே வழி, பாரி களம் இறங்க நான் வழிவிடுதல் மட்டுமே' - எண்ணங்களை ஒருங்கிணைத்து முடிவுக்கு வந்தான். இதைவிடச் சிறந்த முடிவெதுவும் அவனுக்குப் புலப்படவில்லை. எனவே, முடிவைச் செயல்படுத்தும் பணியைத் தொடங்கினான்.

கடந்த சில நாள்களாகப் பயன்படுத்தாமல் இருந்த அவனது வில், குடிலின் ஓரத்தில் சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. எழுந்து போய் அதை எடுத்து வந்தான். இருக்கையில் உட்கார்ந்தபடியே நாணை இறுக்கிக் கட்டினான். அம்பறாத்தூணியைக் கண்கள் தேடின. மேல்மூங்கிலில் அது தொங்கிக் கொண்டிருந்தது.

மீண்டும் எழுந்து போய் அதை எடுக்கவேண்டியிருந்தது. விலாவெலும்பு குத்தி உள்ளிறங்கிக் கொண்டிருந்தாலும் தனக்குப் பிடித்த அம்பை எடுக்க வழக்கம்போல் அவனது கைகள் விரைந்து சென்றன.

போரின் போக்கறிந்து, கடைசி ஐந்து நாழிகை இருக்கும்போது திசைவேழர் இடதுபுறம் இருக்கும் மூன்றாம் பரணுக்கு வந்துசேர்ந்திருந்தார். நடந்தது அனைத்தையும் உன்னிப்பாகக் கவனித்து அறிந்திருந்தார். அவர் சொல்லும் சான்றுகளை மையூர்கிழாரால் மறுக்க முடியவில்லை. சொற்களால் அவருடைய எண்ணங்களைத் திசைதிருப்ப முடியுமா என்று செய்துபார்த்த முயற்சிகளால் எந்தவிதமான பலனும் ஏற்படவில்லை. உரையாடலை இதற்கு மேலும் நீட்டிக்க முடியாத நிலை உருவானது.

அடுத்து என்ன செய்யலாம் என மையூர்கிழார் யோசித்தபடி நின்றிருந்தபோது பாண்டியநாட்டு அமைச்சன் ஆதிநந்தி சொன்னான், ``திசைவேழரை மீண்டும் வணங்குகிறேன். நீங்கள் சொல்லியபடி அவர்கள் முரசின் ஓசை கேட்ட பிறகே அம்பெய்தனர் என வைத்துக் கொள்வோம். போரின் விதிகள் தட்டியங்காட்டுக்குத்தானே பொருந்தும். மூஞ்சல், தட்டியங்காட்டை விட்டு வெளியில்தானே இருக்கிறது.''

திசைவேழரின் சினம் உச்சத்தைத் தொட்டது. கண்களை இறுக மூடி நஞ்சை விழுங்குவதைப்போலக் கேள்வியை விழுங்கினார். ஆனாலும் தனது கடமையிலிருந்து நழுவக் கூடாது என எண்ணியபடி சொன்னார், ``பறம்பு வீரர்கள் நள்ளிரவில் வந்து மூஞ்சலைத் தாக்கியிருந்தால், அவர்கள் போர்விதிகளை மீறிவிட்டார்கள் என்று நீங்கள் சொல்ல மாட்டீர்களா? போர்விதிகள்

என்பவை, போரிடும் காலம் முழுவதும் போரிடுபவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள். அவை இடத்தோடும் பொழுதோடும் தொடர்புடையவை அல்ல. அந்த நெறிகளைக் கடைப்பிடிக்கும் மனநிலையை நீங்கள் இழந்துவிட்டீர்கள். ஏனென்றால், உங்கள் வீரத்தின் மீது உங்களுக்கு இருந்த நம்பிக்கை பொய்த்துவிட்டது.''

சொல்லின் தாக்குதலால் நிலைகுலைந்து நின்றனர் வேந்தர்கள். திசைவேழர் அதே குரலில் தொடர்ந்தார், ``எனது தண்டனையை ஏற்பதற்கான கடைசி வாய்ப்பை வழங்குகிறேன். பொதியவெற்பனும் சோழவேழனும் இக்கணமே ஆயுதங்களைத் துறந்து போர்க்களம் விட்டு வெளியேறுங்கள்.''

அமைதி அப்படியே நீடித்தது. வேந்தர்களின் முகங்கள் இறுக்கம்கொண்டன. ``கிழவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது'' என்றான் பொதியவெற்பன். உதியஞ்சேரல் ஏதோ சொல்லவந்தான். அப்போது திசைவேழரின் குரல் முன்னிலும் உரத்து வெளிப்பட்டது.

``போர் விதிமுறைகளை ஏற்று முரசின் ஓசை கேட்டதும் ஆயுதங்களைத் தாழ்த்திய இரவாதனே! உன்னிடம் மன்னிப்பு கோருகிறேன். விதிமுறைகளை மதிக்கத் தெரியாத வேந்தர்படைக்கு நிலைமான் கோல்சொல்லியாக இருந்த நான் இந்தத் தவற்றுக்குப் பொறுப்பேற்று எனக்கு தண்டனை வழங்கிக் கொள்கிறேன்.



இதோ, எனது கண்களுக்கு முன்னால் ஒளிவீசும் விண்மீன்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனாலும் மனதுக்குள் போரொளியாகச் சுடர்விடுவது மூஞ்சலுக்குள் நீ வெளிப்படுத்திய வீரமே. உன்னைப்போன்ற நெறி பிறழாத மாவீரர்கள் என்றென்றும் போற்றப்படுவீர்கள். நீ இரவாப்புகழுடன் வாழ்வாய்! இரவாதன் மரணமற்றவன் என்பதைக் காலம் உணர்த்தும். தட்டியங்காட்டுப் போரின் நினைவிருக்கும் வரை உனது புகழ் இருக்கும்!”

சொல்லியபடி பரணின் முன்புறமிருந்த கம்பங்களை விட்டு, பின்புறமாக வந்து தனது சிற்றிருக்கையில் அமர்ந்தார். உடலெங்கும் இருந்த நடுக்கம் வடிந்து அமைதிகொண்டது.

`என்ன செய்யப்போகிறார் திசைவேழர்?’ என்று பதற்றம்கொண்டார் கபிலர்.

திசைவேழரோ, இருக்கையில் அமர்ந்ததும் தனக்கு எதிரே நாழிகை வட்டிலில் இருந்த நாழிகைக்கோல் இரண்டையும் தன் இரு கைகளிலும் எடுத்து மேலேந்தினார்.

கால்விரல்களால் நாணை அழுத்திக் கொண்டு வலதுகையால் வில்லை இழுத்து மேலே தூக்கினான் தேக்கன். கால்விரல்கள் இரண்டும் அம்பைக் கவ்விப்பிடித்திருந்தன. அம்பின் முனை நடுவயிற்றின் விலாவெலும்புக் குழியில் இருந்தது. கால்விரல்களை அழுத்திக் கொண்டு வலதுகையால் வில்லை மேல்நோக்கி நன்றாக இழுத்து விசையைக் கூட்டினான்.

அண்ணாந்து மேலே பார்த்தார் திசைவேழர். வானில் உள்ள அனைத்து விண்மீன்களும் அவருடைய கண்களையே பார்த்துக் கொண்டி ருந்தன. கருவிழிகள் முழுச் சுற்றுச் சுற்றி வட்டமடித்தன. இரு கைகளிலும் ஏந்திய கூர்முனைகொண்ட நாழிகைக்கோல்களை, தனது குரல்வளையை நோக்கி இறுக உட்செலுத்தினார்.

கால்விரல்கள் விடுவித்த கணத்தில் விசைகொண்ட அம்பின் முனை, விலாவெலும்புக் குழிக்குள் புகுந்து பின்புறமாக எகிறியது.

இரு கைகளாலும் இழுத்துக் குத்தப்பட்ட நாழிகைக்கோல்கள் நெஞ்சுக்குழிக்குள் கீழிறங்கின. குருதி கொப்பளித்து மேல்வர, தேக்கனும் திசைவேழரும் மெள்ள சாய்ந்தனர். கண்களின் ஒளி

எளிதில் மங்கிவிடுவதில்லை. நினைவுகள் கடைசியாகச் சுழன்றடித்து மேலேறின.

எவ்வியூர் நாகப்பச்சை வேலியின் மணமே தேக்கனின் நினைவெங்கும் படர்ந்தது. பகரியை வேட்டையாடி, அதன் ஈரலைத் தின்றுவந்த அந்த நாள் நினைவில் மேலெழுந்தது. கொற்றவையின் கூத்துக்களம் நினைவுக்கு வந்தது. அலவனின் கண்களில் நீல வளையம் பூத்து அடங்கியது. திரையர்களை விரட்டிக் கொண்டு இரவு பகலாக ஓடிய ஓட்டம் அறுந்து அறுந்து மேலெழுந்தது. இறுதியில் காலம்பனின் கதை கேட்டு, பாரி கதறி அழுததும், பாரியை அறிந்தவுடன் காலம்பன் கதறி அழுததும் தோன்றிய கணத்தில் கீதானியின் முகம் தோன்றி மறைந்தது.

மலைவேம்பின் ஆறாம் இலை காடெங்கும் நிரம்பியிருக்க, எங்கும் குலநாகினிகளின் குரவையொலி கேட்டபடி இருந்தது. கருவிழிகள் துடித்தபடி இருக்க, இமைகள் மெள்ள கவியத் தொடங்கின.

பொதிகைமலையின் உச்சிப்பாறையில் நின்று அடர்சிவப்பு நிறம்கொண்ட செவ்வாய்க்கோளைப் பார்த்துக் கொண்டிருந்தார் திசைவேழர். தனது நாடியை மேல்நோக்கி நிமிர்த்தி, வானின் ஒளியைக் கைநீட்டிச் சொல்லிக் கொண்டிருந்தார் அவர் தந்தை. குதிரைத்தலைபோல் இருக்கும் ஆறு புரவிகளும் பொற்கால் கட்டில்போல் இருக்கும் கணையும் மனக்கண்ணில் ஒளிவீசியபடி

இருந்தன. சிறுபுலியின் கண்போல் அறுவை இருமீன்கள் அவரை உற்றுநோக்கின.

இமைக்கும் தன்மைகொண்ட விண்மீன்களைப் பார்த்துக் கொண்டே இருப்பது வாழ்வின் பேரானந்தம். மனம், இக்கணத்தில் விண்மீன்களை எண்ணிப்பார்க்க நினைத்தது. ஆனால், சட்டென முடத்திருக்கண்ணனின் முகம் நினைவுக்கு வந்தது. தவறிழைத்தவன் தண்டனையின் வழியே காட்டிக் கொடுத்த நிலம் என்று அவர் சொன்ன சொல், அவரை நோக்கித் திரும்பியது. பக்கத்தில் அந்துவன் இருந்து அதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

காடறிய அழைத்துச் செல்வதன் குறியீடான சாமப்பூவின் மணத்தை மோந்தபடி தேக்கனின் நினைவு அறுந்தது.

கார்த்திகையின் ஆறாம் ஒளியைச் சுற்றி இளநீல வட்டம் இருப்பதைப் பார்த்தபடியே கண்ணொளி மங்கி அணைந்தது திசைவேழருக்கு.

தேக்கனைப் பார்த்துவர அனுப்பப்பட்ட வீரன், குடிலுக்குள் நுழையும்போது தேக்கன் குருதிவெள்ளத்தில் கிடந்தான். உயிர் பிரிந்துவிட்டதை அறிந்த வீரன் தனது இரு கைகளிலும் பறம்பு ஆசானைத் தூக்கிக் கொண்டு இரலிமேடு நோக்கி ஓடத் தொடங்கினான்.

அவன் கூவல்குடிக்காரன். தேக்கனைத் தூக்கிக் கொண்டு புறப்படும்போதே கூவலாய்க் கதறத் தொடங்கினான். அவனது கூவல்குரல் மலையெங்கும் எதிரொலிக்கக்கூடியது. கண்ணீரைக் காரமலையெங்கும் தூவினான். பறம்பு ஆசானின் மரணம் பச்சைமலையின் ஒவ்வோர் உயிருக்கும் சொல்லப்படவேண்டியது. கூவல்குடி வீரன் அத்தனை ஒலிகளிலும் தேக்கனின் மரணத்தைக் கூவினான்.

ஒவ்வோர் ஒலிக்குறிப்பும் ஒவ்வோர் உயிரினத்தினுடையது. குரலின் தன்மையைக் கொண்டு பறவைகளைப் பத்து இனங்களாகப் பிரித்திருந்தது கூவல்குடி. பத்து இனங்களின் குரல்களுக்கு ஏற்ப தேக்கனின் துயர்மிகு மரணத்தைக் கூவினான். மணி ஒலிக்கும் குறிப்பில் சொன்னான். அது மண்ணுக்குள்ளிருக்கும் உயிரினங்களுக்கு உரியது. உணவைக் கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல் என ஐவகையிலும் உண்ணும் விலங்குகள் நிலத்துக்கு அடியில் உண்டு. அனைத்து விலங்குகளின் செவிகளிலும் மணியோசை ஒலிக்குறிப்பே சென்று சேரும். மிகநீண்ட நேரம் தேக்கனின் மரணத்தை மணியோசைக் குறிப்பின் மூலம் சொன்னான். எலி வலையின் அடியாழத்தில் இருக்கக்கூடியது கருங்கற்தலையன். அதன் செவியிலும் விழுந்தது தேக்கனின் மரணம்.

பிறகு குழலொலியில் சொன்னான். மேகத்தின் ஒலியில் சொல்லத் தொடங்கியபோது எங்கும் பாறை உருள்வதுபோல் இருந்தது. பெருவிலங்குகளுக்கான ஓசை அது. தும்பிகளுக்கான ஒலியில் சொல்லியபோது துயரத்தின் பேரலை இருளெங்கும் படர்ந்தது. தூக்கி வந்தவன் கண்ணீரின் வலுத்தாங்காமல் மண்டியிட்டு அமர்ந்தான்.

ஆனால், எதிரில் இருந்த காரமலை, ``என் மகனை என்னிடம் தா" என்று கைநீட்டி அழைத்தது. மீண்டும் எழுந்து ஓடத் தொடங்கினான். நாகக்கரட்டிலிருந்து பள்ளத்தாக்கில் இறங்கியபோது பேராந்தையின் குரலெடுத்துக் கூவினான். காட்டையே நடுங்கச்செய்யும் குரல் அது. கண்ணீர் தாரைதாரையாக வழிந்தோட, விலங்குகளுக்கும், மரம் செடி கொடிகளுக்கும், எண்ணிலடங்காத உயிரினங்களுக்கும் சொல்லிக் கொண்டே ஓடினான்.

அவனது நாக்கு பாம்பைப்போன்று சுழன்று சுழன்று வளைந்து ஒலி எழுப்பியது. உதடுகள் விதவிதமாய்க் குவிந்து விரிந்து கூர்மைகொண்டு கூவின. ஒருகட்டத்தில் அவனது குரல் கேட்டு எங்கெங்கும் இருக்கும் கூவல்குடியினர் ஒன்றுசேர்ந்து ஓசை எழுப்பத் தொடங்கினர். நாகக்கரடு, இரலிமேடு, காரமலை என இருளெங்கும் நிறைந்தது தேக்கனின் மரணம்.

மூஞ்சலில் சூளூர் வீரர்களின் உடல்கள் அனைத்தும் எடுக்கப்பட்ட பிறகு அங்கிருந்து முடியன் புறப்படும்போது மூன்றாம் பரணின் அடிவாரத்தில் பெருங்கூட்டம் இருப்பதையும், எண்ணற்ற பந்தங்கள் எரிந்துகொண்டி ருப்பதையும் பார்த்தான். அந்த இடம் நோக்கி அவன் போனபோது எல்லாம் முடிந்திருந்தன.

பரண் மீதிருந்து தடுமாறிக் கீழிறங்கிய கபிலரை, தொலைவில் கும்மிருட்டுக்குள் இருந்தபடியே பார்த்துக் கொண்டு நின்றான் முடியன். கபிலர் எப்போது அங்கு வந்தார், அங்கு என்ன நடந்தது என அவனுக்குப் புரியவில்லை. ஆனால், எல்லாவிதத்திலும் தளர்ந்துபோய் இருக்கும் அவரைப் பாதுகாப்பாக அழைத்துச்செல்ல வேண்டும் என எண்ணியபடி நின்றுகொண்டே இருந்தான்.

பரண்விட்டு இறங்கிய கபிலரின் அருகில் சென்ற மையூர்கிழார் கை குவித்தபடி எதையோ கூறினார். ஆனால், குவித்த அவன் கைகளைத் தட்டிவிட்டபடி அந்த இடம்விட்டு வேகமாக அகல முயன்றார் கபிலர். இதைப் பார்த்த முடியன், தன்னுடன் இருந்த வீரர்களை உடனடியாகக் கபிலரிடம் அனுப்பினான்.

பத்துக்கும் மேற்பட்ட குதிரைவீரர்கள் கண்ணிமைக்கும் நேரத்தில் பாய்ந்துவந்து நின்றனர். பறம்பு வீரர்கள் வந்ததறிந்த கபிலர், உடனடியாக ஒரு குதிரையின் மீது ஏறினார். பரண் அடிவாரத்தில் இருந்த வேந்தர்படைக் கூட்டத்தினர் யாரும் இதை

எதிர்பார்க்கவில்லை. பார்த்துக் கொண்டிருக்கும்போதே அத்தனை குதிரைகளும் இருளுக்குள் மறைந்தன.

குருதி படிந்திருந்த திசைவேழரின் மேல்துணியைக் கைகளில் எடுத்துவந்தார் கபிலர். அது என்னவென்று யாருக்கும் தெரியாது. முடியன், கபிலர் எல்லோரும் நாகக்கரட்டை நெருங்கியபோது கூவல்குடியினரின் ஓசை மலையெங்கும் எதிரொலிப்பதைக் கேட்டனர். நள்ளிரவில் மலையெங்கும் இப்படி ஓசை எழுப்பவேண்டிய தேவை என்ன என்று கபிலருக்கு விளங்கவில்லை. உடன் இருந்த கூவல்குடி வீரன், கண்ணீரோடு ஆசானின் மரணத்தைச் சொன்னான்.

குதிரைகள், இரலிமேட்டுக்கு வந்து சேர்ந்தன. வீரர்களை விலக்கியபடி முடியனும் கபிலரும் மற்ற வீரர்களும் மேலேறி வந்தனர்.

தேக்கனின் உடலருகே வாரிக்கையன் உட்கார்ந்திருந்தார்.

முடியன் நேராக தேக்கனின் உடலருகே வந்து அவரது கால்களைத் தொட்டுத் தூக்கி, தனது நெஞ்சிலே வைத்து இறுகப் பற்றிக் கொண்டான். நெஞ்சம் முழுவதும் அடங்காத சினம் உருத்திரண்டு நின்றது. ஆசான் தேக்கனையும் மகன் இரவாதனையும் ஒருசேர இழந்தாலும் பறம்புநாட்டு முடியனாய் கலங்கிடாது எதிர்கொண்டான்.

முடியன் இதைச் செய்துகொண்டிருக்கும்போது கபிலர், இரவாதனின் அருகில் போய் நின்றார். அவன்மீது திசைவேழரின் குருதி படிந்த மேலாடையைப் போர்த்தினார். பரண் மீதிருந்து எடுத்துவரப்பட்ட மேலாடையை ஏன் இரவாதனின் மீது போர்த்துகிறார் என யாருக்கும் புரியவில்லை.

இரவாதனின் காலருகே வந்து உட்கார்ந்து அவனுடைய பாத அடிகளை எடுத்துத் தனது மடிமீது வைத்துக் கொண்டு அந்த மாவீரனின் இறுதிக்கணத்தைப் பற்றிச் சொல்லத் தொடங்கினார் கபிலர். திசைவேழரின் குருதி இரவாதனின் காலுக்கு அடியில் தேங்கியது.

வேந்தர்கள், அடுத்து செய்யவேண்டியது என்ன என்ற ஆலோசனையில் ஈடுபட்டனர். மூஞ்சலில் இருந்து வீரர்களின் உடல்கள் இன்னும் அகற்றி முடிந்தபாடில்லை. எனவே, அங்கு அமர்ந்து பேசும் சூழல் இல்லை. பரணை விட்டு அகன்று போர்க்களத்தின் தனித்ததோர் இடத்தில் பந்தங்கள் ஏற்றப்பட, அங்கு அமர்ந்து பேசத் தொடங்கினர்.

மூஞ்சல், முற்றிலும் சிதைக்கப்பட்டுவிட்டது. பேரரசர் குலசேகரபாண்டியனின் கூடாரத்தையும் நீலன் இருக்கும் கூடாரத்தையும் தவிர மற்ற கூடாரங்கள் அனைத்தும் முற்றிலும் அழிக்கப்பட்டுவிட்டன. இந்நிலையில் தமது போர்

நடவடிக்கைகளை எப்படி அமைத்துக் கொள்வது என்பதைப் பற்றிய பேச்சு நீண்டது.

யாராலும் முழுக்கவனத்தோடு கருத்துகளை முன்வைக்க முடியவில்லை. ஏனெனில், அழிந்தது மூஞ்சல் மட்டுமல்ல; மூவேந்தர்களின் சிறப்புப்படைகளில் பெரும்பகுதி. இப்போதும் மூவேந்தர்களின் படையில் பெரும் எண்ணிக்கையிலான வீரர்கள் இருக்கிறார்கள். ஆனால், அவர்களெல்லாம் படைத்தொகுப்பில் இடம்பெறக்கூடிய வீரர்கள்தாம். நிலைப்படை வீரர்கள் எண்ணிக்கை மிகக்குறைவே. அதுமட்டுமல்ல, திசைவேழரின் மரணம் என்னென்ன விளைவுகளை ஏற்படுத்தும் என்பது பெருங்கேள்வியாக இருந்தது.

தளபதிகளின் கருத்துகள் முதலில் கேட்கப்பட்டன. அவர்களோ இன்றைய போரில் பறம்பின் குதிரைப்படைத் தளபதி இரவாதன் கொல்லப்பட்டதையும், பறம்பின் குதிரைகள் பெருமளவு கொல்லப்பட்டதையும் வியந்து ஓதினர். தமது படையில் வலிமையான எண்ணிக்கையில் வீரர்கள் இருக்கிறார்கள். எனவே, வழக்கம்போல் முழுத்திறனோடு மறுநாளைய போரை எதிர்கொள்வோம் என்றனர்.

அமைதியாக நின்றிருந்த கருங்கைவாணனைப் பார்த்தார் குலசேகரபாண்டியன். சற்றுத் தயக்கத்துக்குப் பிறகு அவன் கூறினான், ``மூஞ்சல் அழிக்கப்பட்டதைவிட மிகவும்

கவலைக்குரியது, நாம் பாதுகாத்து வைத்திருந்த நஞ்சுகளும் அவை இருந்த கூடாரமும் முழுமையாக அழிந்ததுதான். இந்தப் போரில் இணையற்ற ஆயுதத்தை இன்று நாம் இழந்துவிட்டோம். அதற்கு நிகரானது எதுவுமில்லை" என்றான்.

கருங்கைவாணன் சொல்லியபோதுதான் உதியஞ்சேரலும் செங்கனச்சோழனும் நிலைமையைக் கவனம்கொள்ளத் தொடங்கினர். மூவேந்தர்களுக்கும் நேற்றிரவு பாரியைக் கொல்ல நடத்தப்பட்ட திட்டங்களின் முடிவு முழுமையாக வந்து சேரவில்லை. அந்தக் குழப்பத்திலேயே இன்றைய நாளின் பெரும்பகுதி களத்தில் நின்றனர்.

களத்தின் கடைசி ஐந்து நாழிகையில் ஏற்பட்ட கடும் தாக்குதலுக்குப் பிறகுதான் மூஞ்சலைக் காக்கப் பெருமுயற்சி செய்தனர். அந்த முயற்சியின் இறுதியில் இரவாதனைக் கொல்ல முடிந்ததே தவிர, மூஞ்சலின் அழிவைத் தடுக்க முடியவில்லை. அதன் தொடர்ச்சியாக திசைவேழரின் குற்றச்சாட்டும் மரணமும் எல்லோரையும் நிலைகுலைய வைத்துள்ளன. போர்க்களத்தில் எந்தக் கணத்திலும் தனது இயலாமை வெளிப்பட்டுவிடக் கூடாது எனக் கருதிய குலசேகரபாண்டியன், நாள்தோறும் நிகழும் எண்ணற்ற மரணத்தைப்போலவே திசைவேழரின் மரணத்தையும் கையாண்டார்.

கருங்கைவாணன் தனது பேச்சைத் தொடர இருந்தான். அதற்கு அடுத்தபடியாக மையூர்கிழார் புதிய திட்டங்களைப் பற்றிக் கூற ஆயத்தமாக இருந்தார். இந்நிலையில் சேரநாட்டின் அமைச்சன் வளவன்காரி எழுந்து சொன்னான், ``பெரும் தளபதிகள் பேசும்முன் அமைச்சனாகிய நான் எனது கருத்தைக் கூற, வேந்தர்களின் அவை இடம் தருமா?''

திடீரென சேர அமைச்சன் ஏன் பேச நினைக்கிறான் என்று யாருக்கும் விளங்கவில்லை. குலசேகரபாண்டியன் சரியெனக் கையசைத்தார்.

அவன் சொன்னான், ``இப்போரில் நமக்கான பெரும்பாதுகாப்பு அரண், திசைவேழரும் அவரால் காக்கப்பட்ட போர்விதிகளும்தான். அவற்றை நாம் இழந்துவிட்டோம். நடந்தது அனைத்தையும் கபிலர், பாரியிடம் தெரிவிப்பார். இனி பறம்பின் தாக்குதல் போர்விதிகளுக்கு உட்பட்டு இருக்காது. அவர்களின் இயல்புமுறைகளின்படி தாக்குதலைத் தொடுத்தால் நம்மால் எதிர்கொள்ள முடியாது.''

சொல்லி முடிக்கும்முன் ``ஏன் முடியாது?'' என மேலேறி வந்தது மையூர்கிழாரின் குரல். ``திசைவேழரின் மரணம் மிகச்சிறந்த வாய்ப்பை உருவாக்கியுள்ளது. அதைச் சரியாகப் பயன்படுத்துவதே அறிவுடைமை.''

``என்ன செய்ய வேண்டும்?'' எனக் கேட்டார் குலசேகரபாண்டியன்.

சொல்ல முன்வந்தார் மையூர்கிழார்.

போர்நெறிகளைக் காக்க திசைவேழர் உயிர்துறந்தது, தேக்கன் உயிரை ஈந்து சொல்லிச்சென்ற செய்தி அனைத்தும் இரலிமேடெங்கும் நிரம்பின. பொழுது நள்ளிரவைத் தொட்டது. இனியும் இந்நிலை நீடிக்கக் கூடாது என நினைத்த வாரிக்கையன், ``சரி, அடக்கத்துக்கான பணியைத் தொடங்குவோம்'' என்றான்.

இறுதி வேலைகளைச் செய்ய, பெரியவர்கள் எழுந்தபோது, ``எதுவொன்றும் செய்ய வேண்டாம்'' என்றது பாரியின் குரல்.

குரல் கேட்ட திசை நோக்கி எல்லோரும் திரும்பினர். கருந்திட்டுப் பாறையிலிருந்து எழுந்து வந்த பாரி, அடுக்கிவைக்கப்பட்டுள்ள வீரர்களின் முன் நின்றபடி சொன்னான், ``தட்டியங்காடெங்கும் குவிந்து கிடக்கும் எதிரிகளை வென்று, நீலனை மீட்டுவந்த பிறகு இறுதிச்சடங்கை நடத்துவோம். அதுவே இந்த மாவீரர்களுக்குச் செய்யும் மரியாதை.''

## சு.வெங்கடேசன்

# பாரி - 107



இரவின் பத்தாம் நாழிகை தொடங்கியது. மையூர்கிழார், தனது திட்டத்தை முழுமையாக விளக்கினார். ``கிழக்குப் பக்கம் காட்டாற்றைக் கடந்தால் செவ்வரிமேடு உண்டு. அங்கு புதிய மூஞ்சலை அமைக்க, தளபதிகளுக்கு உடனடியாக உத்தரவிடுங்கள். செவ்வரிமேட்டை விட்டு இன்னும் பின்னால் சில காதத் தொலைவில் எங்களது பழைய கோட்டை ஒன்று உள்ளது. அளவில் மிகச் சிறியது. அந்தக் கோட்டைக்குள் நீலனைச் சிறைவைத்துவிடுவோம்.''

மையூர்கிழார் கூறுகின்ற நிலப்பகுதிகளைத் தளபதிகளும் அறிவர். எனவே, அவர் சொல்வதை உற்றுக்கவனித்தனர். மையூர்கிழார் தொடர்ந்தார்.

``உறுமன்கொடியின் தலைமையிலான படை இப்போதிருக்கும் மூஞ்சல் பகுதியில் தடுப்பரணை ஏற்படுத்தி நிற்கட்டும். இவற்றிலிருந்து ஒரு காதத் தொலைவில் துடும்பனின் தலைமையிலான படை நிலைகொள்ளட்டும். அதற்கடுத்து காட்டாற்றைக் கடந்து செவ்வரிமேடு இருக்கிறது. மேட்டில் கருங்கைவாணனும் நானும் நமது படையின் வலிமைகொண்ட பகுதியில் நிற்கிறோம். பறம்புப்படை இங்கிருந்து தாக்குதலைத் தொடங்கும்போது, நமது முன்களத் தளபதிகள் சரியான நேரத்தில் பின்வாங்கி, காட்டாற்றை நோக்கி அவர்களை இழுத்துவர வேண்டும்.

அவர்கள் நீலனை மீட்க, நமது திசை நோக்கி வந்துதான் ஆகவேண்டும். மிகவும் பள்ளமான நிலப்பகுதியில் ஓடும் காட்டாற்றைக் கடந்து அவர்கள் மேலேறும்போது, நாம் மேட்டு நிலத்திலிருந்து அவர்களின் மீது வலிமையான தாக்குதலை நடத்தி அழித்தொழிக்கலாம்.''

பொதியவெற்பன் உற்சாகமடைந்து கூறினான், ``நாம் முன்னரே திட்டமிட்டபடி மலையை விட்டு நன்கு தள்ளிக் களம் அமைத்துக் கொண்டால், நாகக்கரட்டின் மேலிருந்து வழிகாட்ட முடியாது.

அவர்கள் பெருமளவுக்குக் குதிரைகளை இழந்துவிட்டனர். இனி, அவர்களின் தொடர்புகள் முற்றிலும் அறுந்துவிடும். இன்றைய போரில் பெரும் எண்ணிக்கையில் வீரர்களை இழந்துள்ள அவர்களை முழுமையாகக் கொன்றழிக்க இது நல்ல திட்டம்.''

மையூர்கிழார் சொல்லத் தொடங்கும்போதே காரமலையின் உச்சியில் ஒரு சிறு புள்ளியின் அளவுக்கு நெருப்பின் சுடர் தெரிந்தது. பந்தங்களை ஏந்தி ஓரிருவர் நடமாடுகின்றனர் என எண்ணினார். சிறிது நேரத்தில் இங்கொன்றும் அங்கொன்றுமாக மின்னல் வெட்டத் தொடங்கியது. ``மழை வரும் அறிகுறியாதலால் பேசி முடித்து, செயலில் வேகமாக இறங்க வேண்டும்'' என்றார் சோழவேழன்.

தளபதி உறுமன்கொடி கேட்டான், ``நீலனைச் சிறை வைக்கப்போகும் பழைய கோட்டைக்கான பாதுகாப்பு என்ன?''

``அந்தக் கோட்டை மிகவும் வலிமையானது. அங்கு, எமது வெங்கல்நாட்டின் தேர்ந்த போர்வீரர்கள் இருக்கிறார்கள். அதற்குமேல் வேறெதுவும் தேவையில்லை'' என்றார்.

இதைச் சொல்லியபோது அவரின் கண்களுக்கு, காரமலையில் வேறு சில திசைகளிலிருந்து சுடர்விடும் நெருப்புப் பந்தங்கள் சிறு புள்ளிகளாய்க் கீழிறங்கி வருவது தெரிந்தது. `என்ன இது?' என்று இப்போது சற்றுக் கூர்மையுடன் கவனித்தார்.

அதுவரை பேசாமல் இருந்த கருங்கைவாணன் சொன்னான், ``நீங்கள் சொல்லும் திட்டத்தில் காட்டாற்றுப் பகுதி தாக்குதலே மிக முக்கியமானது. அவர்களைக் கீழ்நிலையில் நிறுத்தி நாம் மேல்நிலையில் நின்று தாக்குதல் தொடுக்க ஏதுவான இடம். மிகப் பொருத்தமான ஆலோசனை'' என்று சொன்னவன், சற்று சிந்தித்தபடி தொடர்ந்தான், ``காட்டெருமை களின் தாக்குதலின்போது நமது யானைப்படையின் பின்புறத்தில் நின்றிருந்த ஒரு பகுதி யானைகள், பாதுகாப்பாய்த் திரும்பியுள்ளன. அந்த யானைகள் அனைத்தையும் நீலனைச் சிறைவைக்கும் கோட்டையைச் சுற்றி நிறுத்தலாம்'' என்றான்.

குலசேகரபாண்டியன் அதை ஏற்றுக் கொண்டார். அப்போது சோழவேழன் சொன்னார், ``படைவீரர்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டால் இப்போது அதிகம் இருப்பது சோழப்படையில்தான். ஏழு சேனைவரையன்களும், நாற்பதுக்கும் மேற்பட்ட சேனைமுதலிகளும், சுமார் பத்தாயிரம் வீரர்களுக்குமேல் எமது பாசறையில் இரவுணவு அருந்தியுள்ளனர்.''

இதைச் சொல்லும்போது செருக்கின் ஒலி இயல்பாய் மேலெழுந்தது. இந்த எண்ணிக்கையைச் சொல்வதற்குக் காரணமில்லாமலில்லை. ஆனால், காரணத்தை வெளிப்படையாகச் சொல்லவில்லை. சோழவேழன் தொடர்ந்தார், ``நீங்கள் சொன்னபடி உறுமன்கொடியின் தலைமையில் பாண்டியப்படையின் ஒரு பகுதி

மூஞ்சலில் நிற்கட்டும். துடும்பனின் தலைமையில் சேரர்படையின் ஒரு பகுதி இரண்டாம் நிலையில் தடுப்பரணை ஏற்படுத்தி நிற்கட்டும். எமது முழுப்படையையும் செவ்வரிமேட்டின் மேற்பகுதியில் ஏற்றி நிறுத்துகிறேன். இதுபோக, மற்ற இரு படைகளின் பகுதிகளும் செவ்வரிமேட்டில் நிற்கட்டும்'' என்றார்.

``இதுவரை விற்படை, வாட்படை, தேர்ப்படை என்று படைத் தொகுப்புகளுக்குள் மூவேந்தர்களின் வீரர்களும் இணைந்திருந்து தாக்குதல் நடத்தினர். ஆனால், முதன்முறையாக மூவேந்தர்களின் படைகளும் தனித்தனியாக அணிவகுத்து நிற்போம்'' என வலிமையான குரலில் சொன்னார் சோழவேழன். அதற்குக் காரணம், இன்று மூஞ்சலின் மீது நடந்த தாக்குதலில் ஒருங்கிணைப்பு இல்லாததால் ஏற்பட்ட பேரிழப்புதான். குறிப்பாக, பொதியவெற்பனின் உத்தரவுகள் மற்ற படையணிகளுக்குக் குழப்பத்தையே உருவாக்கின. எனவே, அதிக எண்ணிக்கையைக் கொண்ட வீரர்களின் படையணியான தனது அணியை, தேவையில்லாமல் இழப்புக்கு உள்ளாக்கிவிடக் கூடாது என்ற சிந்தனையோடு சோழவேழன் இதைச் சொன்னார்.

இதை வெளிப்படையாக விவாதிக்க முடியாது. இதே காரணம் ஏற்கெனவே குலசேகர பாண்டியனுக்கும் சொல்லப்பட்டுவிட்டது. மூஞ்சலுக்குள் மூன்று சிறப்புப் படைகளையும் ஒரே நேரத்தில் உள்ளே நுழைய ஆணையிட்டதால், தாக்குதலில் ஒருங்கிணைப்பு

துளியும் இல்லாமற்போனதை அவர் அறிவார். எனவே, இதை மறுத்து உரையாட அவரோ, மற்ற யாருமோ ஆயத்தமாக இல்லை.

எல்லோரும் திட்டத்தை ஏற்றுக் கொண்டனர். மழை சடசடவென இறங்கத் தொடங்கியது. இடியோசை காரமலையெங்கும் எதிரொலித்தது. வேந்தர்களின் தேர்கள் விரைந்து மூஞ்சலை நோக்கிச் சென்றன. இறந்த வீரர்களின் உடல்களை அப்புறப்படுத்தும் வேலை முடிந்தபாடில்லை. ஆனால், மழை பெய்யத் தொடங்கிவிட்டதால் தங்குவதற்கு அருகில் வேறு இடம் எதுவும் இல்லை. எனவே, பாதிப்படையாமல் இருக்கும் குலசேகரபாண்டியனின் கூடாரத்தில் ஐவரும் நுழைந்தனர். தளபதிகளோ பேசப்பட்ட திட்டத்தின் அடிப்படையில் உடனடியாக வேலையைத் தொடங்கினர்.

இரும்புச் சட்டகத்தால் ஆன கூட்டுவண்டியில் நீலனை ஏற்றினர். வாள்படைத் தளபதி மாகனகனின் தலைமையிலான படை அவனை செவ்வரிமேட்டுக்கு அப்பால் இருக்கும் பழைய கோட்டைக்குக் கொண்டுசென்றது. தொடங்கும்போதே மழையின் வேகம் யாவரையும் மிரட்டியது. காரமலையில் மின்னலும் இடியும் விடாது இறங்கின. நீலனை வெளியேற்றிய பிறகு அவன் இருந்த கூடாரத்துக்குள் தளபதிகள் அனைவரும் வந்து நுழைந்தனர். அவர்களைத் தொடர்ந்து அமைச்சர்களும் உள்ளே நுழைந்தனர். காற்றின் வேகம் அதிகமாக இருந்ததால் கூடாரங்களின் ஆட்டமும்

அதிகமாக இருந்தது. உள்ளே நுழைந்த சிறிது நேரத்தில் கருங்கைவாணன் கேட்டான். ``நீலன் இந்தக் கூடாரத்தில்தான் இருந்தான் என்பதை இரவாதனின் படையினர் எப்படிக் கண்டறிந்தனர்?''

யாரிடமும் பதில் இல்லை. மையூர்கிழார், கூடாரத்தின் வாசல்வழியே வெளியில் எதையோ பார்த்துக் கொண்டிருந்தார். தான் கேட்பது, மழையின் ஓசையால் அவரின் காதில் விழவில்லையோ என எண்ணிய கருங்கைவாணன், அவரின் தோள் தொட்டு மீண்டும் கேட்க முற்பட்டபோது மையூர்கிழார் கையை வெளியில் நீட்டி எதையோ காட்டினார்.

எதைக் காட்டுகிறார் என, தலையை நீட்டி எட்டிப்பார்த்தான் கருங்கைவாணன். அவனுக்கு எதுவும் தெரியவில்லை. ``எதைக் காட்டுகிறீர்கள்?'' எனக் கேட்டான்.

``அங்கே பாருங்கள். தீப்பந்தங்களை எடுத்துக் கொண்டு சிலர் மலையை விட்டுக் கீழிறங்கி வந்துகொண்டிருக்கின்றனர்.''

``கொட்டும் மழையில் தீப்பந்தங்களை எப்படி ஏந்தி வர முடியும்?'' எனக் கேட்டான்.

``எனக்கும் விளங்கவில்லை. ஆனால், பந்தங்கள் முன்னோக்கி நகர்ந்து வந்துகொண்டிருக்கின்றன'' என்று சொன்னவர், ``வாருங்கள், பரண்மீது ஏறி நின்று பார்ப்போம்'' என்று கூறி உடனடியாக கூடாரத்தை விட்டு வெளியில் வந்தார். அவரைத் தொடர்ந்து கருங்கைவாணனும் வெளியேறினான். இருவரும் குதிரைகளில் ஏறிப் பாய்ந்து சென்றனர். மற்ற தளபதிகளுக்குத் தலைமைத் தளபதிகளைத் தொடர்வதா அல்லது கூடாரத்துக்குள்ளே இருப்பதா எனத் தெரியவில்லை. `சரி, நாமும் போவோம்' என உறுமன்கொடியும் துடும்பனும் அவர்களைத் தொடர்ந்தனர். அமைச்சர்கள் மட்டும் கூடாரத்திலேயே இருந்தனர்.

பாண்டிய அமைச்சன் ஆதிநந்திக்கு, கருங்கைவாணன் எழுப்பியது மிக முக்கியமான கேள்வி என்றும், அதைக் கண்டறியவில்லை என்றால் நீலன் இருக்கப்போகும் செவ்வரிமேட்டின் பழைய கோட்டையையும் பறம்பினர் கண்டறிந்துவிடுவர் என்றும் தோன்றியது. ஆனால், இதைப் பற்றி உரையாடத் தளபதிகள் யாரும் இல்லை. எல்லோரும் வெளியில் போய்விட்டனர்.

தளபதிகள், பரண் அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தனர். காற்றோடு மழை பெய்வதால் பரண் ஆடியபடி இருந்தது. மேலே ஏறுவது பாதுகாப்பானதா என ஒரு கணம் சிந்தித்தார். மூன்று நாள்களுக்கு முன்பு வீசிய பேய்க்காற்றையே தாங்கிய பரண்,

இந்தக் காற்றுக்கு ஒன்றுமாகிவிடாது எனச் சிந்தித்தபடியே வேகவேகமாக மேலேறினார். அவரைத் தொடர்ந்து கருங்கைவாணன் மேலேறினான். மற்ற இரு தளபதிகளையும் கீழேயே நிற்கச் சொன்னார் மையூர்கிழார்.

பரண்மேல் நாழிகைவட்டில் கவிழ்ந்து கிடந்தது. திசைவேழரின் குருதி முழுவதையும் மாமழை கழுவித் தீர்த்தது. தளபதிகள் மேலேறியபோது அவர்களின் கால்களில் மிதிபட குருதியின் உலர்ந்த தடம்கூட பரண்கட்டைகளில் இல்லை. மேலேறிய இருவரும் மேற்குப் பக்கமாகத் திரும்பிப் பார்த்தபடி நின்றனர்.

கருங்கைவாணனின் கண்களுக்கு முதலில் எதுவும் தெரியவில்லை. மழை உரத்துப் பெய்தது. மையூர்கிழார் கை நீட்டிக் கத்திச் சொன்னார். ஆனாலும் அவனுக்குப் புலப்படவில்லை.

இடதுபுறமிருந்து வாள் வீசுவதுபோல மின்னல் ஒன்று நாகக்கரட்டை வெட்டி இறங்கியது. வெளிச்சத்தில் தட்டியங்காடு முழுக்க ஒளியால் பளிச்சிட்டு மறைந்தது. அந்தக் கணத்தில்தான் கருங்கைவாணன் பார்த்தான், நாகக்கரட்டின் மேலிருந்து குதிரைப்படை ஒன்று தட்டியங்காட்டின் வலதுபுறம் நோக்கிக் கீழிறங்கிக் கொண்டிருந்தது.

பரண், இதுவரை இல்லாத அளவுக்கு ஆடியது. கீழே நின்றிருந்த உறுமன்கொடியும் துடும்பனும் வீரர்களை அழைத்து பரணின் கால்களை இறுகப் பற்றிக் கொள்ளச் சொன்னார்கள். ஆனால், மேலே நின்றிருந்த இருவரும் பரண் ஆடுவதையோ, இடியோசையோடு மழை முன்னிலும் அதிகமாகப் பொழிவதையோ கவனம்கொள்ளவில்லை. அவர்களின் கவனமெல்லாம் கொட்டும் பேய்மழையில் தீப்பந்தம் எப்படி எரிந்துகொண்டிருக்கிறது என்பதுதான். `

வருவது மிகச்சிறிய படைதான். அதனால் பெரிய தாக்குதலை நடத்திவிட முடியாது. ஆனால், ஏன் அவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள்? எல்லோர் கைகளிலும் பந்தம் இருக்கிறது. எதை எரியூட்ட வருகிறார்கள்?' எனச் சிந்தித்தபடி நின்றனர்.



நள்ளிரவு பதினைந்தாம் நாழிகை முடிவுறும் நேரம். எதிரிகளின் செயல்களை உற்றுப்பார்த்தபடி நீண்டநேரம் நின்றுகொண்டிருந்தனர். மனத்துக்குள் பெருங்குழப்பம் நிலவிக் கொண்டிருந்தது. சோழப்படையின் பாசறைதான் அந்தத் திசையில் முதலாவதாக இருக்கிறது. நாகக்கரட்டிலிருந்து கீழிறங்கிய வீரர்கள் நேராக அந்தப் பாசறைகளை நோக்கிப் போகின்றனர். இவ்வளவு சிறிய படையினர், பத்தாயிரம் வீரர்கள் இருக்கும் சோழர்களின் பாசறையைத் தாக்கப்போகிறார்களா? கேள்வியை எழுப்பியபடி நிலைமையை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தனர்.

கருங்கைவாணனோ மலைமேலிருந்து கீழிறங்கியுள்ள அந்தச் சிறிய படையைத் தாக்கி அழிக்க உத்தரவிடவேண்டும் எனத் துடித்தான். ``சற்றுப் பொறுப்போம். என்ன நடக்கிறது எனத் தெரிந்துகொள்வோம்'' என்றார் மையூர்கிழார்.

அவருக்குச் சுலுந்துக்கம்பின் நினைவு வந்தது. கருங்கைவாணனிடம் சொன்னார், ``காட்டுக்குள் அரியவகையான சுலுந்துக்கம்பு இருக்கிறது. அதைக் கூராக வெட்டித் தீப்பற்றவைத்தால், அது கொழுந்துவிட்டு எரியும். காற்றாலும் மழையாலும் அதை அணைக்க முடியாது. குச்சியைக் கீழே போட்டு மண் அள்ளி அதன் மேல் கொட்டினால் மட்டுமே அணைக்க முடியும்'' என்றார்.

கீழிறங்கிய பறம்புநாட்டுக் குதிரைவீரர்கள், பாசறையை நெருங்கிவிட்டனர் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவர்கள் இரு பிரிவுகளாகப் பிரிந்து பாசறையின் இரு பக்கங்களிலும் சுற்றுவதை பந்தச்சுடர்கள் நகரும் வழிகளிலிருந்து புரிந்துகொள்ள முடிந்தது.

சோழப்படையின் பெரும்பாசறை அதுதான். அங்கு காவல்வீரர்கள் இருப்பர். ஆனாலும் மழை கொட்டும் இந்த நள்ளிரவில் விழிப்போடு இருப்பார்களா என்பது ஐயமே, ``நாம் முரசொலி எழுப்பிக் கவனப்படுத்துவோமா?'' எனக் கேட்டான் கருங்கைவாணன்.

``இந்த மழையில் முரசினோசையோ கொம்போசையோ அவ்வளவு தொலைவுக்குக் கேட்காது'' என்றார் மையூர்கிழார்.

காற்றின் வேகத்தால் பரண் கடுமையாக ஆடியது. ``கவனமாக இறுகப்பிடித்து நில்லுங்கள்'' என்று சொன்ன கருங்கைவாணன், இடதுபுறமாக இருக்கும் கம்பத்தை நன்றாகப் பிடித்து நின்றான். அப்போது வடகோடியில் மின்னல் வெட்டி இறங்கியது. அதை உற்றுப்பார்த்தபடி அப்படியே நின்றான். சிறிது நேரம் இருவரிடமும் பேச்சு ஏதும் இல்லை. பிறகு மையூர்கிழார் கேட்டார், ``அந்தத் தீப்பந்தங்கள் அசையாமல் நின்ற இடத்திலேயே நிற்கின்றன. கவனித்தீர்களா?''

கருங்கைவாணன் இடதுபுறம் இருக்கும் கம்பத்தைப் பிடித்துக் கொண்டு அந்தப் பக்கமாகப் பார்த்துக் கொண்டிருந்ததால் அவர் கேட்பது காதில் விழவில்லை. மையூர்கிழார் மீண்டும் உரத்துக் குரல்கொடுத்தபோதுதான் கருங்கைவாணன் திரும்பினான்.

``என்ன?''

``அவர்கள் ஈட்டியின் மேல்முனையில் பந்தங்களைக் கட்டிக் கொண்டு வந்துள்ளனர். அவற்றை வீசியெறிந்துள்ளனர். ஈட்டி குத்தி நிற்கும் இடமெல்லாம் பந்தங்கள் நின்று எரிகின்றன'' என்றார்.

``வந்தவர்கள் எங்கே?''

``அவர்கள் நாகக்கரட்டுக்குத் திரும்புகின்றனர். மின்னல் ஒளியில் பார்த்தேன்.''

``நானும் பார்த்தேன், நாகக்கரட்டிலிருந்து பலர் கீழிறங்குகின்றனர்'' என்றான் கருங்கைவாணன்.

``எந்தப் பக்கம்?'' எனக் கேட்டார் மையூர்கிழார்.

இடதுபுறமாகக் கை நீட்டிக் காட்டினான் கருங்கைவாணன்.

இருவருக்கும் எதுவும் புரிபடவில்லை. வலதுபுறக் கடைசியில் தீப்பந்தங்களை எறிந்து நட்டுவைத்துவிட்டு ஏன் மலையேற வேண்டும்? இடதுபுறம் தட்டியங்காட்டுப் பக்கமாக மலையை

விட்டு ஏன் கீழிறங்கி வரவேண்டும் என்று சிந்தித்தபடி நின்றுகொண்டிருந்தனர். மழையின் சீற்றம் மேலும் கூடியது.

மையூர்கிழார் ஏதேதோ எண்ணியபடி இருந்தார். முதன்முதலில் காரமலையின் உச்சியில் தீப்பந்தம் எந்த இடத்தில் தெரியத் தொடங்கியது என நினைவுகூர்ந்தார். மனதில் ஐயம் ஒன்று மேலெழும்பியது. அதன் பிறகு அவரிடமிருந்து பேச்சேதும் வெளிவரவில்லை.

`ஏன் எதுவும் சொல்லாமல் நிற்கிறார்?' எனக் கருங்கைவாணனுக்குப் புரியவில்லை.

உள்ளுக்குள் பரவிய நடுக்கம் அவரை எளிதில் பேச அனுமதிக்கவில்லை. சற்று நேரம் கழித்துச் சொன்னார், ``அவர்கள் அணலி இருக்கும் குகைகளில் இருந்து நெருப்பை ஏந்தி வந்திருப்பார்களோ என அஞ்சுகிறேன்.''

``அணலி என்றால்?'' கேட்டான் கருங்கைவாணன்.

``நெருப்புப்பூச்சி. உச்சிமலையின் அடர்குகைக்குள் இருக்கும். நெருப்பைப் பார்த்தால் அதைத் தொடர்ந்து அப்படியே வந்துவிடும். அதன் ரீங்கார ஓசை, பல்வேறு நச்சுப்பூச்சிகளைக் கவர்ந்திழுக்கக்கூடியது. அந்த அணலிகள் இருக்கும் குகையில் இருந்து எடுத்துவரப்பட்ட தீப்பந்தங்கள் அவை. அந்தப் பந்தங்களின் தொடர்ச்சியாகப் பல்லாயிரம் பூச்சிகள் இந்நேரம்

அங்கே வந்திருக்கக்கூடும். எல்லாம் பந்தத்தைச் சுற்றி இருளுக்குள் பறந்துகொண்டிருக்கும். அந்த இடத்தில் உயிரினங்களின் நடமாட்டம் இருப்பதை அவை அறிந்தால், கொடுந்தாக்குதலை நடத்தும். நம் வீரர்கள் பாசறையிலிருந்து வெளிவரத் தொடங்கியதும் அங்கு நடக்கப்போவதை என்னால் கற்பனைசெய்துகூடப் பார்க்க முடியவில்லை.''

``ஏன்... அவ்வளவு மோசமான விளைவுகள் ஏற்படும் என்று அஞ்சுகிறீர்களா?''

``அநேகமாக சோழர் பாசறையிலிருந்து பத்தில் ஒரு வீரன்கூடத் தப்ப முடியாது. அணலிப் பூச்சி கடிக்கவேண்டாம்; மேலே பட்டாலே போதும். மொத்த உடலும் தீப்பிடித்து எரிவதைப்போலத் துடிக்கத் தொடங்கும்'' இதை அவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே வெங்கல்நாட்டு திசையிலிருந்து குதிரையில் இருவர் வேகமாக வந்து சேர்ந்தனர். கொட்டும் மழையின் வேகத்தால் வந்திருப்பது யாரெனத் தெரியவில்லை.

பரணின் கீழே இருந்த தளபதி உறுமன்கொடி பரண் மேலே பார்த்தபடி ``மையூர்கிழாரைத் தேடி வந்துள்ளனர்'' என்று உரத்தகுரலில் கத்தினான்.

``அவர்களில் ஒருவனை மேலே அனுப்பு'' என்றார் மையூர்கிழார்.



ஒருவன் மட்டும் மேலேறி வந்தான். அவன் போரில் ஈடுபடாத ஆறு ஊர் ஒற்றர்களில் முக்கியமானவன். மையூர்கிழாரால் அந்தப் பணிக்கு நியமிக்கப்பட்டவன். மேலேறிய வேகத்தில் சொன்னான், ``அவர்கள் அணலியை இறக்கிவிட்டார்கள்.''

``அப்படித்தான் இருக்குமெனக் கணித்தேன்.''

``அனைவரும் உடனடியாக இந்த நிலத்தை விட்டு வெளியேறுவது நல்லது'' என்று சொன்னவன், ``அதுமட்டுமல்ல, பாண்டியர் படையின் பாசறையைச் சுற்றி எண்ணற்ற ஈட்டிகளை எறிந்துள்ளனர்.''

பாண்டிய வீரர்களின் பாசறை சோழப்படைக்குக் கீழ்ப்புறமாக இருப்பதால், இங்கிருந்து பார்ப்பது கடினம். எனவே, பரண் மேல் இருந்தவர்களுக்கு அது பற்றித் தெரியவில்லை.

``பந்தத்துடனா?'' எனப் பதற்றத்துடன் கேட்டார் மையூர்கிழார்.

``இல்லை. பந்தம் இல்லாமல்தான் ஈட்டிகள் மண்ணில் குத்தி நிற்கின்றன.''

``வெறும் ஈட்டியை ஏன் எறிந்துள்ளனர்?''

``அதை அருகில் சென்று பார்த்தால்தான் தெரியும். ஆனால், அருகில் சென்று பார்க்க நம் வீரர்கள் மிகவும் அஞ்சுகின்றனர். ஆனால், என்னவாக இருக்குமென்று வீரன் ஒருவன் சொன்னான்.''

``என்ன சொன்னான்?''

``இருள்வேல மரத்தின் அடியிலிருந்து உருவாகும் சிவப்புநிறப் பிசின் ஈட்டி முழுவதும் தடவப்பட்டிருக்கலாம். அது மழைக்குக் கரையாது'' என்று சொல்லி நிறுத்திக் கொண்டான்.

மையூர்கிழார் உறைந்தார்.

``அந்தப் பிசினால் என்ன ஆபத்து?'' எனக் கேட்டான் கருங்கைவாணன்.

இரவில் ஆபத்தேதுமில்லை. ஆனால், பொழுது விடியத் தொடங்கியதும் காரமலை முழுவதிலும் இருக்கும் பறக்கும் அட்டைகளும் கொம்புதூக்கி வண்டுகளும் பிசின் வாடைக்கு அங்கு வந்துவிடும். எதிர்ப்படும் மனிதர்கள் யாரும் தப்புவது எளிதல்ல. கொம்புதூக்கி வண்டின் உடலெல்லாம்

முள்ளம்பன்றிபோல சின்னஞ்சிறிய கொம்புகள் பல்லாயிரம் உண்டு. ஒரு கொம்பு மனிதனின் மீது பட்டால்போதும் விரல்கள் ஒவ்வொன்றும் கையளவு பருத்துவிடும். ஒரு மாதமானாலும் அவனால் எதுவும் செய்ய முடியாது'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே பரணின் கீழே ஏதோ சத்தம் கேட்டது. என்னவென்று எட்டிப்பார்த்தான் மையூர்கிழார். வெங்கல்நாட்டு அரண்மனையின் தலைமை ஒற்றன் மேலே அனுமதிக்கச் சொல்லி சத்தம் கொடுத்துக் கொண்டிருந்தான்.

``அவனை மேலே அனுப்பு'' எனக் கத்தினார் மையூர்கிழார். அவரின் ஓசை எதுவும் கீழே கேட்கவில்லை. கை அசைவை வைத்துப் புரிந்துகொண்ட உறுமன்கொடி, அவனை மேலே அனுப்பினான். `காற்றும் மழையும் இவ்வளவு அதிகமாக இருக்கும்போது, ஏன் இவரையும் மேலே அனுப்பச் சொல்கிறார்?' எனக் கோபப்பட்டான் உறுமன்கொடி.

அவன் ஏறும் வேகமே பரணை எதிர் திசையில் ஆட்டுவதைப்போல் இருந்தது. பதற்றத்தின் உச்சத்தை அவனது உடலின் வேகம் சொல்லியது. படியில் ஏறும்போதே சத்தமாகச் சொன்னான், ``பறம்பின் பன்னிரு குடிகளும் கீழிறங்கிவிட்டன.''

``என்ன சொல்கிறாய்?'' எனக் கேட்டார் மையூர்கிழார்

``ஆம், நான்கு குடிகளைத் தவிர பறம்பில் அடைக்கலமான பன்னிரு குடிகளும் இறங்கித் தாக்க பாரி அனுமதியளித்துவிட்டான். தலைமுறை தலைமுறையாக மூவேந்தர்களின் மீதிருக்கும் பகைதீர்க்க எல்லோரும் மலையை விட்டுக் கீழிறங்கிவிட்டனர்.''

அப்போது பேரோசையோடு வெட்டி இறங்கிய மின்னல் ஒளியில் மையூர்கிழாரின் முகத்தைப் பார்த்தான் கருங்கைவாணன். அதன் பிறகு அவன் வாய் திறக்கவே இல்லை.

வந்தவன் சொன்னான், `` `வெங்கல் நாட்டினர் எல்லோரும் வெளியேறிவிடுங்கள்' என ஆறு ஊர்க்காரர்களிடமிருந்து செய்தி வந்துள்ளது. `இனி இந்த மண்ணில் மிஞ்சப்போவது யாரும் இல்லை. உயிர்பிழைத்துக் கொள்ளுங்கள்' என்று பறம்பின் செய்தி பரவிக் கொண்டிருக்கிறது.''

காற்றின் வேகத்தால்தான் நாம் ஆடுகிறோமா அல்லது உடலின் நடுக்கமா என்ற ஐயம் எழத் தொடங்கியது. ``முடிவை, காலம் தாழ்த்தாமல் எடுங்கள்'' என்று கத்தினான் இரண்டாவதாக வந்தவன்.

காற்றின் வேகத்தை எதிர்கொள்ள முடியாமல் பின்புறமாகத் திரும்பி, அந்தப் பக்கம் இருக்கும் கம்பத்தை இறுகப் பற்றினார். எதிரில் வெகுதொலைவில் மூஞ்சல் தெரிந்தது.

குலசேகரபாண்டியனின் கூடாரத்தின் முன் கண்ணாடிக்கூடு களால் ஆன பெருவிளக்குகள் ஒளி சிந்திக் கொண்டிருந்தன.

பார்த்த கணத்தில் ஆபத்து புரியத் தொடங்கியது. பெருங்குரலில், ``விளக்கை அணையுங்கள்'' என்று கத்தினார். மழையின் ஓசையில் பக்கத்தில் இருப்பவர்களுக்குக்கூட அது கேட்கவில்லை. கடைசியாக மேலேறியவனைவிட இரு மடங்கு வேகத்தில் கீழே இறங்கினார் மையூர்கிழார். அவரைத் தொடர்ந்து அனைவரும் இறங்கினர்.

இறங்கிய வேகத்தில் குதிரையின் மேலேறி மூஞ்சலை நோக்கி விரைந்தார். மற்றவர்களும் அவரின் பின்னால் குதிரையை விரட்டிக் கொண்டு வந்தனர். விளக் கொளியின் அபாயத்தால் துடித்தது மையூர்கிழாரின் உடல். குதிரையை விடாது அடித்து விரட்டினார்.

மூஞ்சலை நெருங்கியபோதே பெருங்குரலில் கத்தினார், ``விளக்கை அணையுங்கள்... விளக்கை அணையுங்கள்!''

மூஞ்சலில் குலசேகரபாண்டியனின் கூடாரத்தைச் சுற்றி மூவேந்தர்களின் மெய்க்காவல்படை வீரர்கள் நின்றிருந்தனர். மையூர்கிழாரின் ஓசை கேட்டதும் ஏதோ ஆபத்தென்று புரிந்துகொண்டு விளக்கின் ஒளியைக் குறைத்தனர்.

``முழுமையாக அணையுங்கள்!'' என்று கத்தியபடி குதிரையை விட்டுத் தவ்வி இறங்கினார்.

மெய்க்காவல் வீரன் ஏதோ சொல்லவந்தான். ஆனால், அதைக் கேட்கும் நிலையில் மையூர்கிழார் இல்லை. இறங்கிய வேகத்தில் அருகில் இருந்த ஈட்டியை எடுத்து விளக்குகளின் கண்ணாடிகளை அடித்து நொறுக்கினார். விளக் கொளி முழுமுற்றாக விழுந்து அணைந்தது. கணநேரத்தில் என்ன நடக்கிறது எனப் புரிந்துகொள்வதற்குள் எங்கும் இருள் சூழ்ந்தது. மெய்க்காவல் தளபதி ஏதோ தவறு நடக்கப்போகிறது என மையூர்கிழாரை நோக்கிக் குரல் உயர்த்தி நெருங்கிவரும்போது கருங்கைவாணன் கத்திக் கொண்டே வந்து சேர்ந்தான். அவனது குரல் கேட்டுத்தான் வீரர்கள் அமைதியாயினர்.

கூடாரத்துக்குள் நுழைய அனுமதி கேட்பதற்கெல்லாம் நேரமில்லை. திரையை விலக்கி, சட்டென உள்ளே நுழைந்தார் மையூர்கிழார். அவரைத் தொடர்ந்து கருங்கைவாணனும் உள்ளே நுழைந்தான். அனுமதி ஏதுமின்றி மேலெல்லாம் கொட்டும் மழைநீரோடு அப்படியே உள்ளே நுழைந்துள்ள இருவரையும் பார்த்த கணத்தில் வேந்தர்களின் முகங்கள் இறுகின.

``பேரரசே, உடனடியாக விளக்கை அணைக்க உத்தரவிடுங்கள்'' என்றார் மையூர்கிழார்.

``கூடாரத்துக்குள் இருக்கும் விளக்கை ஏன் அணைக்க வேண்டும்?'' எனக் கேட்டார் சோழவேழன்.

``விளக்கத்தைப் பிறகு சொல்கிறேன். ஒரு கணம் காலம் தாழ்த்தினால்கூட நாம் பேராபத்தில் சிக்கிக் கொள்வோம்'' என்று கத்தினார்.

ஆபத்தை உணர்ந்த குலசேகரபாண்டியன், ``விளக்கை அணையுங்கள்'' என்றார்.

உள்ளே வேந்தர் குடும்பத்தைச் சார்ந்த ஐவர் மட்டுமே இருந்தனர். மையூர்கிழாரும் கருங்கைவாணனும் உள்ளே நுழைந்துள்ளனர். இருவரும் பாண்டியநாட்டைச் சேர்ந்தவர்கள். இந்நிலையில் விளக்கை முற்றிலுமாக அணைக்கச் சொல்வதில் பாண்டியனின் சதியேதும் இருக்குமோ என்ற ஐயத்தில், ``தளபதி உசந்தனை உள்ளே வரச்சொல்'' எனக் கத்தினார் சோழவேழன்.

தேர்ப்படைக்குத் தலைமைதாங்கிய சோழர் தளபதி வெறுகாளன் கொல்லப்பட்ட பிறகு, உசந்தனிடம் அந்தப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது. சோழவேழனின் உரத்த குரல் வெளியில் நிற்கும் உசந்தனுக்கும் கேட்டது. விளக்கை அணைக்கும் கணத்தில் அவன் உள்ளே நுழைந்தான்.

``துடும்பன் எங்கே?'' எனக் கத்தினான் உதியஞ்சேரல்.

``உள்ளே வந்துவிட்டேன் பேரரசே'' எனக் கூறியபடி உள்ளே நுழைந்தான். ஆனால், யார் எங்கு இருக்கிறார் என்று எதுவும்

தெரியவில்லை. மழையின் பேரோசையும், நம்பிக்கையின்மை உருவாக்கிய அச்சமும் கூடாரம் முழுக்க நிரம்பியிருந்தன.

போரின் நெருக்கடி உருவாக்கியுள்ள நம்பகமின்மையைச் சேரனும் சோழனும் கணநேரத்தில் வெளிப்படுத்தினர். குலசேகர பாண்டியனின் அதிர்ந்த முகத்தைப் பார்க்க, துளியளவும் வெளிச்சமுமில்லை. மூவேந்தர்களும் முழுமையான இருளுக்குள் முகமற்று இருந்தனர்.

எதை நோக்கிக் கேள்வி எழுப்புவது எனத் தயங்கியபடியே கேட்டார் குலசேகரபாண்டியன், ``விளக்கை அணைத்துவிட்டுப் பேசுமளவுக்கு அப்படி என்ன ஆபத்து வந்துவிட்டது?''

``எதிரிகள், அணலிப்பூச்சிகளை மலை உச்சிக் குகைக்குள்ளிருந்து தரைக்குக் கொண்டு வந்துவிட்டார்கள் பேரரசே.''

சொல்லி முடிக்கும் முன் உதியஞ்சேரலின் குரல் வெடித்து வந்தது. பதற்றத்தின் உச்சத்தில் அவன் கேட்ட கேள்வியும் அதற்கு மையூர்கிழார் சொன்ன பதிலும் அவையை நடுங்கச்செய்தன. அணலியைப் பற்றி நன்கு அறிந்தவன் சேரன். எனவே, அந்தப் பெயர் கேட்டவுடன் துடித்துப்போனான். இறுதியாகக் கேட்டான், ``எந்தத் திசையில் கீழிறக்கியிருக்கிறார்கள்?''

``சோழர் படையின் பாசறையைச் சுற்றி'' சொல்லும் வரை இந்த அவையில் அது உருவாக்கப்போகும் விபரீதத்தை மையூர்கிழார் சிந்திக்கவில்லை.

உதியஞ்சேரலும் மையூர்கிழாரும் வெளிப்படுத்திய பதற்றம் இப்போது செங்கனச்சோழனுக்கும் சோழவேழனுக்கும் பரவியது. ``எம் போர்வீரர்களின் பாசறை, ஆபத்தில் மாட்டிக் கொண்டதா?''

செங்கனச்சோழனின் கேள்விக்கு யாரும் பதில் சொல்லவில்லை.

``எங்கு நிற்கிறீர்கள் மையூர்கிழாரே, பதில் சொல்லுங்கள்?'' என இருட்டுக்குள் கத்தினான் செங்கனச்சோழன்.

``பதற்றமடைய வேண்டாம் பேரரசே! இரவில் வீரர்கள் யாரும் வெளிவராமல் கூடாரத்துக்குள்ளே இருக்க வேண்டும். பொழுது நன்றாக விடிந்து கதிரவன் ஒளி காய்ந்து இறங்கும் வரை அணலி ஆற்றலோடு இருக்கும். உச்சிவெயில் ஏறிய பிறகு அதன் வேகம் குறையும். ஆனால், அதுவரை வீரர்கள் யாரும் கூடாரத்தை விட்டு வெளிவரக் கூடாது'' என்றான்.

``இரவின் இறுதி ஐந்து நாழிகையிலே பாசறையில் வேலைகள் முழுமையாகத் தொடங்கிவிடுமே, பொழுது விடியத்

தொடங்கும்போதே எல்லா வீரர்களும் கூடாரம் விட்டு வெளியில் வந்துவிடுவார்களே!''

``ஆம். அதைத் தடுப்பது எப்படி என்று உடனடியாகச் சிந்திக்க வேண்டும்'' என்று சொல்லிய வேகத்தில் மையூர்கிழார் சொன்னார், ``பேரரசே! இதே போன்றதோர் ஆபத்து, பாண்டிப்படையின் பாசறைக்கும் நிகழ்ந்துள்ளது.''

``என்ன சொல்கிறாய் நீ?'' என்று அடிக்குரலில் இருந்து வெளிவந்தன குலசேகரபாண்டியனின் சொற்கள்.

``ஆம் பேரரசே! இருள்வேல மரத்தின் சிவப்புநிறப் பிசின் தடவிய ஈட்டியை நம் வீரர்கள் தங்கியுள்ள பாசறையைச் சுற்றி எறிந்துள்ளனர். பொழுது விடிந்தால் காரமலை முழுவதிலும் இருக்கும் பறக்கும் அட்டைகளும் கொம்புதூக்கி வண்டுகளும் பிசின் வாடைக்குக் கீழிறங்கிவிடும். அதன் பிறகு எதிர்ப்படும் மனிதர்கள் கடுந்தாக்குதலில் மாட்டிக் கொள்வார்கள்.''

பதற்றத்தின் உச்சிக்குப்போனான் பொதியவெற்பன். ``என்ன சொல்கிறீர் மையூர்கிழாரே... நம் வீரர்களைக் காக்க என்ன வழி?''

``விடிவதற்குள் வீரர்கள் அனைவரையும் பாசறைக்குள்ளிருந்து வெளியேற்ற வேண்டும்'' சொல்லிக் கொண்டே இருக்கும்போதுதான் பேசப்படும் சொற்கள் எவ்வளவு பெரிய

சிக்கலை உருவாக்கப்போகின்றன என்பதை மையூர்கிழாரால் சிந்திக்க முடிந்தது.

சோழர்களின் பாசறையும் பாண்டியர்களின் பாசறையும் ஒருகாத இடைவெளியில்தான் இருக்கின்றன. இங்கு இரவோடு இரவாக வீரர்கள் வெளியேறினால் அது ஏற்படுத்தும் ஓசை சோழர்களின் பாசறைக்கு நன்கு கேட்கும். அரவங்கேட்டு ஒரு வீரன் பார்த்தால் போதும், `ஏதோ ஆபத்து. அதனால்தான் பாண்டிய வீரர்கள் பாசறையை விட்டு வெளியேறுகிறார்கள்' என நினைத்து, கணநேரத்தில் மொத்த வீரர்களும் வெளியேறுவார்கள். அந்நிலை ஏற்பட்டால் அணலிப் பூச்சிகளுக்கு மிஞ்சப்போவது யாரும் இல்லை.

பேரரசரின் கூடாரத்தை விட்டு வெளியில் நின்றிருந்தான் உறுமன்கொடி. அவன் அருகில் அடுத்தநிலை தளபதிகளும் மெய்க்காப்பாளர்களும் நின்றிருந்தனர். கொட்டும் மழையின் ஓசையை விஞ்சி வெளியில் கேட்டது கூடாரத்துக்குள் வேந்தர்கள் பேசிக் கொள்ளும் ஓசை.

வெளியில் நிற்கும் மெய்க்காவல்படைத் தளபதிகளுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. விளக்குகள் முற்றிலும் அணைக்கப்பட்ட இருளுக்குள் வேந்தர்கள் மிகுந்த சினத்தோடு உரையாடிக் கொண்டிருக்கின்றனர். அது ஆபத்தை ஏற்படுத்திவிடும்

என அஞ்சினர். ஆனால், அரச உத்தரவின்றி உள்ளே போக முடியாது, குழப்பத்தில் செய்வதறியாது நின்றனர்.

அப்போது பாண்டியநாட்டு ஆபத்துதவிகளின் தலைவன் சொன்னான், ``மூன்று பேரரசுகளின் தலைமை மெய்க்காவலர்களும் ஒன்றாக உள்ளே செல்வோமா?''

சோழப் பேரரசின் மெய்க்காவல்படையான வேளக்காரப்படையின் தலைவன் ``சரி' ' யென்று சொன்னான். ஆனால், சேரமன்னனின் மெய்க்காவல்படையான காக்குவீரர்களின் படைத்தலைவனிடமிருந்து மட்டும் பதில் வரவில்லை.

காலம் கடந்துகொண்டிருந்தது.

அப்போது பாண்டியநாட்டு ஆபத்துதவிகளின் தலைவன் மீண்டும் கேட்டான் ``ஏன் நீங்கள் மட்டும் பேசாமல் இருக்கிறீர்கள்?''

தட்டியங்காட்டைப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்த காக்குவீரர்களின் படைத்தலைவன் சொன்னான், ``தட்டியங்காட்டை நோக்கி உற்றுப்பாருங்கள்.''

அவன் சொன்னதும் அந்தத் திசை நோக்கி அனைவரும் உற்றுப்பார்த்தனர். கொட்டும் மழையில் இரவின் இருளுக்குள் இருந்து எதுவும் புலப்படவில்லை.

``ஒன்றுமில்லையே'' என்று சொல்லியபடி இடதுபுறமாகத் திரும்பும்போது நீளமாய்ப் பிளந்து இறங்கிய அடர்மஞ்சள் மின்னல் ஒளியில் தட்டியங்காடு முழுவதும் ஒளிர்ந்தது. அவ்வளவு நேரமும் தங்கள் தளபதிகள் நின்றிருந்த பரணின்மேல் வீரர்கள் சிலர் ஈட்டி ஏந்தி நின்றிருந்தனர். அதன் அடிவாரத்திலிருந்து ஆவேசமிக்க பறம்புவீரர்கள் பாய்ந்து வந்துகொண்டிருந்தனர்.

``எதிரிகள் வந்துகொண்டிருக்கிறார்கள்'' என்று
மெய்க்காப்பாளர்கள் பேரோசை எழுப்பிய போதுதான்
கூடாரத்துக்குள் இருந்தவர்களுக்கு ஆபத்து புரியத் தொடங்கியது.

# பாரி – 108

இரவின் இறுதிப் பத்து நாழிகையில் வெங்கல் நாடெங்கும் சிந்தப்பட்ட குருதியைக் கழுவ, மழைநீர் போதவில்லை. ஏற்றப்பட்ட தீப்பந்த வெளிச்சத்தில் மழைநீர் அடர்செந்நிறத்தில் ஓடியது. இருளுக்குள் ஓடும்போதும் அதே நிறத்தில் புரண்டோடியது. நீரின் வேகத்தில் மூழ்கி எழுவது கட்டைகளா… மனித உடல்களா என நின்று பார்க்க யாரும் இல்லை. மழையின் பேய்க்கூச்சலுக்கிடையே மனிதக்கதறல்கள் முழுமுற்றாக அமுங்கிப்போயின. பறம்பில் வாழும் பன்னிரு குடிகளும் மலைவிட்டு இறங்கி, காணும் இடமெல்லாம் கணக்கில்லாமல்

வெட்டியெறிந்த வேகத்தில் மிஞ்சியது யாரென அறிந்தவர் யாரும் இல்லை.



மழையின் வேகத்தால் இரவு கூடுதலாக இருள்கொண்டது. பாசறைக் கூடாரத்தில் படுத்திருந்த வீரர்கள் மழையின் பேரோசையைக் கேட்டபடி ஒடுங்கிப் படுத்தனர். ``போர் நாளில் தூக்கம் வருமா?'' என்று மற்றவர்கள் கேட்கும்போதெல்லாம் போர் வீரர்கள் சொல்லும் பதில் இதுதான். ``தூக்கம் வராது. ஆனால், மரணம் வரும்.'' அன்றைய நாளில் களத்தில் எத்தனை முறை மரணத்தின் வாயிலின் அருகே தப்பித்திருப்போம் என்பதை நினைத்துகூடப் பார்க்க முடியாது. ஏனெனில், உடலும் மனமும் ஆற்றலை முற்றிலும் இழந்திருக்கும். போர்க்களத்தில் தேரையே தனித்துத் தூக்க முற்படும் வீரன்கூட, இரவினில் தன்னுடலைத் தூக்கி நகரும் வலுவை இழந்து கிடப்பான். போரற்ற நாளில் படுக்கும்போது வரும் உறக்கமன்று போர் நாளின் உறக்கம்.

துளிகூட நினைவின் தடமின்றி தன்னை மறந்தால் மட்டுமே உறங்க முடியும். ஏறக்குறைய மரணத்துக்கு மிக அருகில்தான் அது நிகழும். பகலில் மரணத்தோடு ஒட்டியே பயணம் செய்வதுபோல, இரவிலும் மரணத்தோடு ஒட்டிய பயணம்தான். உறக்கம், விழிப்பு, ஆயுதம் ஏந்தல், போரிடுதல் எல்லாமே போர்க்களத்தில் மரணத்தின் மறுசெயல்பாடுகள்தாம்.

பகலில் போர்க்களம்விட்டுத் திரும்பியவுடன் தங்களின் பாசறைக்கு வந்து ஆயுதங்களையும் கவசங்களையும் கழட்டிவிட்டு, உடலை நீர்கொண்டு கழுவி, நேராக உணவுச்சாலைக்குச் செல்வர். வேட்டை விலங்குகள் ஒன்றுகூடிக் கடித்து இழுப்பதைப்போலத்தான் அங்கு நடக்கும் செயல்பாடுகள். உணவை முடித்துவிட்டு ஆயுதப் பொறுப்பாளனிடம் சொல்லவேண்டிய குறிப்புகளைச் சொல்லி முடித்து, தேவைப்பட்டால் மருத்துவனைப் பார்த்துவிட்டு பாசறைக் கூடாரத்துக்கு வரும்போது, ஏறக்குறைய தலை அறுபட்டு விழும் உடல்போலத்தான் உணர்வேதுமின்றி விழுவர். நேற்றிரவும் அப்படித்தான் நடந்தது.

நள்ளிரவு கடக்கும்போது பெருமழை தொடங்கியது. மழையின் பேரோசையும் காற்றிலேறிய குளிரும் வீரர்களை ஒடுங்கிப் படுக்க வைத்தன. பாசறைக் காவலர்கள் கூட, போரின் தொடக்கக் காலத்தில் இருப்பதைப்போல தொடர்ந்து விழிப்போடு இருப்பதில்லை. போர் தொடங்கி ஆறாம் நாள் இரவுதான் இது.

ஆனால், படைகள் இங்கு பாசறை அமைத்து ஒரு மாதம் கடந்துவிட்டது. தொடக்கத்தில் இரவிலும் பகலிலும் ஓரிரு நாள் மழை பெய்தது. ஆனால், போர் தொடங்கிய பிறகு நேற்றிரவு தான் முதன்முறையாக மழை பெய்துள்ளது. பாசறைக் காவலர்களும் மிகவும் அயர்வுற்று இருந்தனர். காற்றோடு சேர்ந்த பெருமழையாதலால், பறம்பு வீரர்கள் பந்தங்களோடு ஈட்டியைக் கொண்டுவந்து எறிந்துவிட்டுப் போனதைக்கூட யாரும் கவனிக்கவில்லை.

பேய்மழைக்குள் குறிப்பறிந்து செயல்படுதல் எளிதன்று. மூஞ்சலில் வேந்தர்களுக்குள் எழுந்த முரண் இருட்டு என்பதால் அடுத்த கட்டத்தை அடையவில்லை. அதுவே விளக் கொளியில் முகம் பார்த்து சினம்கொண்டு பேசியிருந்தால் நிலைமை விபரீதமாகியிருக்கும். மட்டுமல்ல, இருளில் யார் ஆயுதத்தைக் கைக் கொள்வார்கள் என யாராலும் கணிக்க முடியாது. யாரேனும் ஒருவர் எல்லை மீறிய சொல்லைப் பயன்படுத்தினாலும் நிலைமை பேரிழப்பை ஏற்படுத்துவதாக மாறிவிடும்.

இருளுக்குள் உருவாகும் நம்பகமின்மை, கணநேரத்தில் தாக்குதலைக் கட்டவிழ்த்துவிடும். நேற்றிரவு குலசேகர பாண்டியனின் கூடாரம் எல்லாமுமாக மாற இருந்தது. மிகச்சிறந்த கூர்மதியாளராக குலசேகரபாண்டியன் இருந்ததால் அந்த இக்கட்டிலிருந்து வேந்தர் குலத்தினர் ஐவரும் தப்பினர்.

பாண்டியப் பாசறையில் முரசோசை எழுப்பி வீரர்களை இரவோடு இரவாக வெளியேற்ற வேண்டும் என்ற திட்டத்தை சோழவேழன் எதிர்த்தார். அவ்வாறு செய்தால் அந்த ஓசையைக் கேட்டு சோழப்படையினரும் எழுந்து வெளியேற நினைப்பார்கள். அப்போது அணலிப்பூச்சி தாக்கி பேரழிவு ஏற்படும் என வாதிட்டார். அவ்வாறு செய்யவில்லை என்றால், பாண்டியப்படை அழியும் என்று கருங்கைவாணன் வாதிட்டான். இந்த நிலையில்தான் கூடாரத்துக்கு வெளியில் இருந்த மெய்க்காவலர்கள் ``எதிரிகள் தாக்குவதற்காக வருகின்றனர்' ' என்று கத்தினர்.

துடித்தெழுந்த கருங்கைவாணன், அவர்களை எதிர் கொள்வதற்கான உத்தியைச் சொல்லத் தொடங்கும் முன் அதற்கு வாய்ப்பே அளிக்காமல் குலசேகரபாண்டியன், ``இக்கணம் நாம் பாதுகாப்பாக இந்த இடம்விட்டு வெளியேறும் முடிவை எடுக்கவில்லை என்றால், அடுத்து எக்கணமும் ஒன்றாய் முடிவெடுக்கும் சூழல் வராது. எனவே, உடனே வெளியேறுவோம்' ' என்றார்.

சோழவேழன் எழுப்பிய கேள்வி, எழுந்துள்ள புதிய ஆபத்தால் தானாகவே காணாமல்போனது. படையைக் காக்கும்முன் தன்னைக் காத்துக் கொள்ளவேண்டிய சூழல் எல்லோருக்கும் உருவானது. அந்த நிலையிலும் மதிநுட்பத்தோடு செயல்பட்டான் குலசேகரபாண்டியன். கூடாரம்விட்டு வெளியேறும்போது

மையூர்கிழாரின் காதோடு காதாகச் சொன்னான், ``பாண்டியப் பாசறையில் அபாய ஒலி எழுப்பி, விடியும்முன் வீரர்கள் அனைவரையும் வெளியேற்று.''

கொட்டும் மழையில் மூஞ்சலின் கூடாரம்விட்டு வெளியேறிய வேந்தர்கள், தங்களின் குதிரைகளை நோக்கி விரைந்து சென்றனர். நூற்றுக்கணக்கில் இருந்த கவசப்படை வீரர்களும் தனிப்படை வீரர்களும் வேந்தர்களைச் சுற்றி அணிவகுத்து நின்றனர். மூவேந்தர்களின் தனித்த முரசங்கள், வேந்தர்கள் உள்ளே வரும்போதும் வெளியே செல்லும்போதும் இசைக்கப்படவேண்டும். ஆனால், சிறிய ஓசைகூட வெளியில் கேட்காத அளவுக்குப் பதுங்கிய நிலையில் மூஞ்சலைவிட்டு இரவின் இருப்பத்தி இரண்டாம் நாழிகையில் வேந்தர்கள் வெளியேறினர்.

வெளியேறி, சிறிது தொலைவு போன பிறகுதான் கருங்கைவாணன் சொன்னான், ``நாம் புறப்படும் அவசரத்தில் செய்தி அனுப்ப மறந்துவிட்டோம். அமைச்சர்கள் மூவரும் நீலனின் கூடாரத்துக்குள் இருக்கிறார்கள்.''

``அப்படியா!'' என்று சற்று அதிர்ச்சியோடு குலசேகரபாண்டியன் கேட்டு முடிக்கும் முன் சோழவேழன் சொன்னார், ``உறுமன்கொடியை உடனே அனுப்பி மூன்று அமைச்சர்களையும் பாதுகாப்பாக அழைத்துவரச் சொல்லுங்கள்.''

குதிரைகள் போய்க் கொண்டிருக்கும்போது சோழவேழன் முந்திக் கொண்டு சொன்னதற்குக் காரணமிருந்தது. ஒரு கணம் காலம் தாழ்த்தினால்கூட, `தளபதி உசந்தனை அனுப்பி, அமைச்சர்களை அழைத்துவரச் சொல்' என்று குலசேகரபாண்டியன் சொல்லிவிடுவார் என நினைத்தார் சோழவேழன். சோழப்படையின் வலிமை மிகுந்த தளபதி என்றால், இப்போது உசந்தனை மட்டும்தான் சொல்ல முடியும். அவனையும் ஆபத்துக்குள் எளிதாகச் சிக்கவைத்துவிடுவார் குலசேகரபாண்டியன். அவர் சொன்ன பிறகு மாற்றிச் சொல்வது கோழைத்தனமாகத் தெரியும். நீலனை பழைய கோட்டைக்குக் கொண்டுசெல்லும் பணிக்கு, பாண்டியத் தளபதி மாகனகனை அனுப்பவேண்டிய தேவையே இல்லை. பாதுகாப்பு வீரர்களே அதைச் சிறப்பாகச் செய்வர். ஆனால், தன் தளபதிகளை பாதுகாப்பான இடத்தில் சேமித்து வைத்துக் கொள்ள வேண்டும் என்பதில் குலசேகரபாண்டியன் முதலில் இருந்தே கவனத்தோடு இருப்பதாக சோழவேழன் கருதியதால்தான் உறுமன்கொடியின் பெயரை முந்திக் கொண்டு சொன்னார். அதன் பிறகு குலசேகரபாண்டியனால் மாற்றிச் சொல்ல முடியவில்லை. அவ்வாறே உத்தரவிட்டார்.



உறுமன்கொடி, பன்னிரு குதிரைவீரர்களோடு மூஞ்சலை நோக்கிப் பாய்ந்து போனான். குலசேகரபாண்டியனின் கூடாரத்திலிருந்து மிகத் தள்ளி நீலனின் கூடாரம் இருந்ததாலும், மழையின் பேரோசையினாலும் வேந்தர்கள் புறப்பட்டதை அமைச்சர்களால் அறிய முடியவில்லை. உறுமன்கொடி, குதிரையைத் தாற்றுக்கோலால் மாறி மாறி அடித்து வேகத்தைக் கூட்டினான்.

பறம்புவீரர்கள் அதற்குள் மூஞ்சலுக்கு வர வாய்ப்பில்லை என்பதை மனதுக்குள் உறுதிப்படுத்தியபடியும் நீலனின் கூடாரத்தை நோக்கி ஓசையெழுப்பியபடியும் விரைந்தான். ஆனால், எதிரோசை எதுவும் வரவில்லை. கூடாரத்தின் அருகே வந்ததும் அமைச்சர்களின் பெயரைச் சொல்லிக் கத்தினான். கொட்டும் மழையில் தனக்கே கேட்கவில்லை என்று நினைத்தபடி வீரன் ஒருவனை, ``உள்ளே போய்ப் பார்' ' என்றான்.

அவன் சொல்லி முடிக்கும்போது, அவனுக்குப் பின்னால் எந்த வீரனும் உயிருடன் இல்லை. மழை ஓசையை மீறிக்கேட்டது ஒரு குரல்.

அது எதிரியின் குரல் என அறிந்த கணத்தில், வாளை உருவினான். அப்போது கூடாரத்துக்குள் இருந்து வெளிவந்த

முடியனின் ஈட்டி உறுமன் கொடியின் கீழ்நாடியில் குத்தி பின்மண்டையில் வெளியேறியது.

குலசேகரபாண்டியன் காதோடு காதாக இட்ட உத்தரவுப்படி பாண்டியப் பாசறையில் நள்ளிரவு முரசின் ஓசை எழுப்பப்பட்டது. நன்றாக உறங்கிக் கொண்டிருந்த வீரர்கள் திடுக்கிட்டு எழுந்தனர். ``உடனடியாக ஆயுதங்களை எடுத்துக் கொண்டு பாசறையை விட்டு வெளியேறுங்கள்’ ’ என்று உத்தரவிட்டான் பாசறைத் தளபதி. மழை ஓசையால் அவனது குரல் பெரிதாகக் கேட்கவில்லை. எனவே, வீரர்கள் கூடாரம்தோறும் சென்று சொன்னார்கள். முதல் ஐந்தாறு கூடாரங்கள் கலையத் தொடங்கிய பிறகு செய்தி தனதுபோக்கில் பரவத் தொடங்கியது. பேராபத்து வருவதாகக் கருதிய வீரர்கள் பதறியடித்து ஓடத் தொடங்கினர். பெருங்கூச்சல் மேலேறிவந்தது.

மழையின் வேகம் சற்றே குறையத் தொடங்கியபோது, பாண்டியப் பாசறையிலிருந்து பேரோசை மேலேறி வருவது சோழர்களின் பாசறைக்கும் எதிரொலிக்கத் தொடங்கியது. அந்தக் கணம் முதலே பேரழிவு தொடங்கியது. சோழப்படை வீரர்கள் அஞ்சி வெளியேறிய கணத்தில் அணலிகளின் தாக்குதல்கள் தொடங்கின.

கண்ணுக்குத் தெரியாமல் இருளுக்குள்ளிருந்து பெரும்படை வருகிறது என எண்ணிய வீரர்கள், சிறு பூச்சிகளை ஒரு

பொருட்டாகவே நினைக்கவில்லை. கையில் சிக்கிய ஆயுதங்களை எடுத்துக் கொண்டு வீரர்கள் ஓடத் தொடங்கினர். நாகக்கரடு இருக்கும் மேற்குத்திசைதான் எதிரிகள் இருக்கும் ஆபத்தான திசை என்பதால் கிழக்குத்திசை நோக்கி ஓடத் தொடங்கினர். பாண்டியப் பாசறை, ஒரு காதத்தொலைவில் வடகிழக்குத் திசையில் இருந்தது. அங்கிருந்து மேலேறிவந்த ஓசையும் இங்கிருந்து மேலேறிய ஓசையும் வெகுவிரைவாக இணைந்தன.

அணலிகள் தாக்கத் தொடங்கிய சிறுகணத்திலேயே வீரர்கள் எழுப்பும் ஓசையின் தன்மை மாறத் தொடங்கியது. சோழப்படையின் எண்ணிக்கை மிகப்பெரியது என்பதால், கதறலின் பேரோசை இருளை நடுங்கச் செய்தது. தப்பித்து ஓடத் தொடங்கிய சோழப்படை வீரர்கள், பாண்டிய வீரர்களோடு இணைவதற்கு ஆகும் நேரம்கூட அணலிகள் எடுத்துக் கொள்ளவில்லை. அதற்கு முன்பே பாண்டியப் படையின் பந்த வெளிச்சத்தை நோக்கி அணலிகள் வந்து சேர்ந்தன.

அந்தத் திசையில் பறம்புவீரர்கள் யாரும் இல்லை. அணலிகள் பற்றியும் மற்ற நஞ்சுப்பூச்சிகள் பற்றியும் பறம்பினர் நன்கு அறிவர். அதுவும் இந்தப் பேய்மழையை யாரும் எதிர்பார்க்கவில்லை. மழை முடிந்த கணத்தில் காட்டுக்குள்ளிருந்து கிளம்பப்போகும் பூச்சி வகைகளை யாராலும் கற்பனைசெய்துகூடப் பார்க்க முடியாது. பள்ளம் நோக்கிப் பாயும் நீர்போல, அணலியின் வாசம் நோக்கிப்

பறக்கும் நஞ்சுயிர்கள் அனைத்தும் வந்துசேரும். இரவின் பூச்சிகளை அணலியும், பகலின் பூச்சிகளை கொம்புதூக்கி வண்டின் ரீங்காரமும் கொண்டுவந்து சேர்த்துவிடும். இப்போது மழையும் இணைந்துகொண்டதால் நிலைமை பன்மடங்கு மோசமாய்விட்டது. எனவே, `பறம்புவீரர்கள் யாரும் அந்தத் திசைப் பக்கமே போகவேண்டாம்' என்று பாரி கூறியிருந்தான்.

அவனது திட்டம் முழுவதும், வெங்கல்நாட்டின் நடுப்பகுதியில் நிலைகொண்டு தாக்க வேண்டும் என்பதுதான். அங்குதான் சேரப்படையின் பாசறை இருக்கிறது. இந்தப் போரில் மிகக் கவனமாக இருப்பவன் சேரன்தான். அவன் பாசறை அமைக்கும்போதே பாதுகாப்புமிக்க இடத்தைத் தேர்வுசெய்திருந்தான்.

அவனுடைய வீரர்களைத் தாக்கி அழிப்பதும், மூஞ்சலில் இருந்து தப்பி வெளியேறுபவர்களைத் தாக்கி அழிப்பதும், வேந்தர்களின் சிறப்புப் படையைத் தாக்குவதும், நீலனை கவனத்துடன் மீட்பதுமாக... பல்வேறு முறையில் தாக்குதல் உத்தியை வகுத்திருந்தான் பாரி.

இரவின் பிடி உதிரும்போது வேந்தர்படையின் ஆற்றல் முற்றிலும் உதிர்ந்திருக்க வேண்டும் என்பதுதான் பாரியின் திட்டம். மூன்று பாசறைகளையும் தனித்தனியாக அழித்தொழிக்கும் நடவடிக்கைகள் நடந்துகொண்டிருக்கும் போதே வேந்தர்களின்

சிறப்புப் படைகளின் மீது இடியெனத் தாக்கும் போர் உத்தியை வகுத்திருந்தான் பாரி. குலங்கள்வாரியாகத் திட்டங்கள் வகுக்கப்பட்டு எல்லைகள் பிரிக்கப்பட்டன. சோழர் பாசறையிலும் பாண்டியர் பாசறையிலும் இருந்து உயிர்பிழைத்து வருகிறவர்களை எதிர்கொள்ள, வெங்கல்நாட்டின் நடுப்பகுதியில் ஆயத்தமாக நின்றுகொண்டிருந்தது விண்டனின் தலைமையிலான படை.

போர்க்களத்தில் வேந்தர்படை வீரர்கள் கவசப் பாதுகாப்போடு அனைத்துவிதமான ஆயுதங்களையும் கைக் கொண்டு போரிடும்போதே, பறம்பு வீரர்களையும் எதிர்கொள்வது மிகக்கடினம். ஆனால் இப்போதோ, இரவில் பேரச்சத்தோடு கைகளில் ஓரிரு ஆயுதத்தை மட்டுமே எடுத்துக் கொண்டு ஓடிவருகிறவர்கள், விண்டன் தலைமையிலான பறம்புப்படையை எப்படி எதிர்கொள்ள முடியும்?

பின்னால் துரத்தும் பேராபத்திலிருந்து தப்பிப்பிழைக்கவே வீரர்களின் பெருங்கூட்டம் ஓடிவந்தது. அவர்களாக வந்து ஈட்டிகளில் பாய்ந்து மாய்வதைப் போலத்தான் கணக்கே இல்லாமல் மாய்ந்துகொண்டிருந்தனர். எதிர்நிலையில் நின்ற விண்டன் தாக்கவேயில்லை. ஆனால், அழிக்க மட்டும் செய்தான். அழிவு கணக்கேயில்லாமல் நடந்துகொண்டிருந்தது.

பல்லாயிரம் மணிகள் கோக்கப்பட்ட மாலை ஓர் இடத்தில் அறுந்தவுடன் மொத்தமும் மண்ணில் உருள்வதைப் போலத்தான்

படையின் கட்டுக்கோப்பு அறுந்த கணத்தில் பல்லாயிரம் தலைகள் மண்ணில் உருண்டுகொண்டிருந்தன.

விண்டனின் தலைமையில் வந்தவர்கள், ஆறு இடங்களில் தனித்தனியாக நின்றிருந்தனர். வர வர வெட்டிச்சரிக்கும் வெறியோடு நின்றவர்களை நோக்கி அணலிகளால் விரட்டப்பட்டவர்கள் இடைவிடாது வந்துகொண்டிருந்தனர். அச்சத்தோடு பாய்ந்து வருபவர்களுக்கு முன்னால் தனது கூரிய ஆயுதங்களை ஏந்தி நின்றான். பட்டுப்போன இலையை கழுமர முனையால் குத்துவதுபோலத்தான் அந்தப் பேரழிவு நடந்தது. துளியளவு ஆற்றல்கூட இல்லாமல் அஞ்சி ஓடிவரும் கூட்டம் அவன் உருவாக்கியிருந்த பொறிக்குள் கணக்கேயில்லாமல் விடியும் வரை விழுந்துகொண்டேயிருந்தது.

இதே நேரத்தில் சேரனின் பாசறையைத் தாக்க உதிரனின் படைக்கு உத்தரவிட்டிருந்தான் பாரி. சுமார் எட்டாயிரம் வீரர்கள் இருந்த பாசறையை நள்ளிரவு உதிரனின் தலைமையிலான படை சுற்றிவளைத்தது. மழை கொட்டிக் கொண்டிருந்த போதும் கொம்பூதி முழக்கமிடச் சொன்னான் உதிரன். தூங்கிக் கொண்டிருப்பவர்களைத் தாக்கக் கூடாது. எனவே, தக்குதலுக்கு ஆயத்தமாகச்சொல்லி அழைத்தான்.

அந்த நேரத்தில் மூஞ்சலிலிருந்து கிழக்குத்திசை நோக்கி விரைந்து வந்துகொண்டிருந்தனர் வேந்தர்கள். மெய்க்காவல் படையினர் மிகுந்த கவனத்தோடு முன்னும் பின்னுமாக அணிவகுத்துச் சென்றனர். பந்த ஒளி இல்லாததால் அடர் இருட்டில் பயணப்படவேண்டியிருந்தது. மழையும் விடாது பொழிந்துகொண்டிருந்தது. சரியான திசை வழியில் வேந்தர்களை அழைத்துச் செல்லவேண்டும் என்பதால், மையூர்கிழார் முன்னால் போய்க் கொண்டிருந்தார்.



ஒவ்வொருவரின் எண்ண ஓட்டமும் ஒவ்வொருவிதமாக இருந்தது. குலசேகரபாண்டியன் தனது பாசறை வீரர்கள் பாதுகாப்போடு வெளியேறியிருப்பார்காளா என்ற சிந்தனையிலே இருந்தான். செங்கனச்சோழன் தங்கள் படைவீரர்களைக் காப்பாற்ற வழி என்ன என்ற சிந்தனையில் இருந்தான். பறம்பின் தாக்குதல் எப்படி இருக்கும் என்பதை எழுவனாற்றில் அறிந்தவன் அவன். அவனது உடல் நடுக்கத்தை உள்ளுணரச்செய்துகொண்டிருந்தது. ஆனால், சோழவேழனும் பொதியவெற்பனும் எந்த நிலையிலும் பாரியைக் கொன்றழிக்காமல்

இந்த நிலம்விட்டு அகன்றுவிடக் கூடாது என எண்ணியபடி இருந்தனர்.

கருங்கைவாணனின் சிந்தனை முழுவதும் உறுமன்கொடியைப் பற்றியதாக இருந்தது. `இவ்வளவு நேரத்தில் அவன் அமைச்சர்களை அழைத்து வந்திருக்க வேண்டுமே. ஏன் இன்னும் வரவில்லை' என்று நினைத்தபடியே குதிரையை விரைவுபடுத்தினான். யாரையாவது அனுப்பி நிலைமையை அறிந்துவரச் சொல்லலாமா எனத் தோன்றியது. குதிரையை விரைந்து செலுத்தி முன்னால் போய்க் கொண்டிருந்த மையூர்கிழாரிடம் வந்து கேட்டான், ``உறுமன்கொடி இன்னும் வந்துசேரவில்லை. அமைச்சர்கள் என்ன ஆனார்கள் எனத் தெரியவில்லையே!''

``இதில் தெரிந்துகொள்ள என்ன இருக்கிறது? அனைவரும் கொல்லப்பட்டிருப்பார்கள்.''

கருங்கைவாணன் சற்றே அதிர்ச்சிக்குள்ளானான், ``உறுமன்கொடி பெருவீரன். அவனை எளிதில் வீழ்த்திவிட முடியாது.''

``தளபதிகள் வீரத்தோடு இருந்து என்ன பயன்? வேந்தர்கள் கூர்மதியோடு இருக்க வேண்டுமல்லவா!''

``ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

``நாம் மூஞ்சலைக் கடந்து ஒரு காதத்தொலைவு வந்த பிறகு அமைச்சர்களை மீட்கும் முயற்சியில் ஈடுபடலாமா? இத்தனை நாள் போருக்குப் பிறகும் எதிரியின் வேகத்தையும் வலிமையையும் இவர்கள் என்னதான் புரிந்துகொண்டார்கள்?''

``அதற்காக, அமைச்சர்கள் மூவரையும் அப்படியே விட்டுவிட முடியுமா?''

``ஏன் முடியாது? மறதியும் கவனக்குறைவும் தவிர்க்க முடியாதவை. அதன் விலை அமைச்சர்களாக இருந்தாலும் கலங்காது முடிவெடுக்க வேண்டும். ஒருவரின் தளபதியை இன்னொருவர் சிக்கவைத்துவிடுவார் என்ற பதற்றத்தில் மூவரும் மாறி மாறி மற்றவர்களைச் சிக்கவைத்துக் கொண்டிருக்கிறார்கள். அமைச்சர்களோடு நின்றிருக்க வேண்டிய இழப்பில் உறுமன் கொடியையும் சேர்த்து விட்டார்கள். இதே நிலை நீடித்தால் நிலைமை படுமோசமாகி விடும்.''

``ஏன் நம்பிக்கையிழந்து பேசுகிறாய்?'' மழையையும் மீறி கேட்டது கருங்கைவாணனின் குரல்.

``போர்க்களத்தில் இரண்டே இரண்டு செயல்கள்தான் உண்டு. ஒன்று, தாக்கி அழிப்பது. இல்லையெனில், தப்பிப் பிழைப்பது. நாம் முதல்கட்டத்தின் இறுதிநிலைக்கு வந்துவிட்டோம். எனவே, இரண்டாம் கட்டம் பற்றிய சிந்தனை தானாகவே மேலெழுகிறது''

என்று கூறிய மையூர்கிழார் தொடர்ந்து சொன்னார், ``உறுமன்கொடி கொல்லப்பட்டிருந்தால் அடுத்து ஒரு பொழுதுக்குள் நாம் தாக்கப்படுவோம்.''

``அப்படியா சொல்கிறாய்? எந்தத் திசையிலிருந்து தாக்குதல் வர வாய்ப்பிருக்கிறது?''

``அதுதான் தெரியவில்லை. எனது கணிப்புப்படி இந்நேரம் சோழப்படையும் பாண்டியப் படையும் பேரழிவைக் கண்டிருக்க வேண்டும். உதியஞ்சேரல் தன் தளபதி துடும்பனை அனுப்பி, அவனது பாசறையில் இருக்கும் வீரர்களை வெளியேற்றும்படி கூறியுள்ளான்.''

``இல்லையே. துடும்பன் நம்முடன்தானே இருந்தான்.''

``மூஞ்சலிலிருந்து புறப்படும் போது நம்முடன் இருந்தான். இடையில் அவனைப் பாசறைக்கு சேர வேந்தர் அனுப்பிவைத்து விட்டார்.''

சொல்லும்போது இடியோசை யால் நிலம் நடுங்கியது. மிக அருகில் விழுந்திருக்க வேண்டும். குதிரைகள் மிரண்டு கனைத்தன.

``நாம் இப்போது எந்தத் திசையில் எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம்? எது பாதுகாப்பானது?'' எனக் கேட்டான் கருங்கைவாணன்.

குதிரையை மழையின் தன்மைக்கு ஏற்ப எவ்வளவு முடியுமோ அவ்வளவு விரைவு படுத்தியபடியே மையூர்கிழார் சொன்னார், ``உண்மையைச் சொல்வதாக இருந்தால் எனக்கு எதுவும் புரிபடவில்லை. பறம்பில் வாழும் பதினான்கு குடிகளும் கீழிறங்கிவிட்டன என்ற பிறகு, நாம் எந்தத் திசையில் பயணப்படுவது என்றே விளங்கவில்லை.''

``பாரி எந்தப் பக்கம் இறங்கியிருப்பான் என்பதை சிறிதும் முன்னுணர முடியவில்லையா?''

``முடியவில்லை. இருளின் எல்லாத் திசைகளிலும் பறம்புவீரர்கள் இருக்க வாய்ப்புண்டு. அதேபோல பறம்பின் படையணி எல்லாவற்றுக்குள்ளும் பாரி இருப்பதற்கான வாய்ப்பு உண்டு என்றே கருதுகிறேன்'' சொல்லும்போது உடல் உள்ளுக்குள் நடுங்கி மீண்டது. இருளெங்கும் பாரியால் நிரம்பியிருந்தது.

``அப்படியென்றால், நாம் இப்போது என்ன செய்யவேண்டும்?''

``இப்போது இடியோடு இறங்கிய மின்னல் ஒளியில் எதிரிகள் நமது கூட்டத்தைத் தெளிவாகப் பார்த்திருப்பார்கள். எனவே, நம்மை நோக்கி அவர்கள் விரைந்து வர வாய்ப்புண்டு.''

``நாம் ஏதாவது ஒரு மறைவிடத்தில் தங்க முடியாதா? இன்று இரவை மட்டும் கழித்து விட்டால் போதும், காலையில் நிலைமையை வேறுவிதத்தில் எதிர்கொண்டுவிடலாம்.''

``நானும் அதைத்தான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். மறைவிடம் என்று ஏதுமில்லை. எனது அரண்மனைக்குப் போவதாக இருந்தால் நாமே ஆபத்தில் போய்ச் சிக்கிக் கொள்கிறோம் என்று பொருள். ஏனெனில், வடதிசையில் காரமலைக்கு மிக அருகில் உள்ளது எனது அரண்மனை. இந்நேரம் பறம்புவீரர்கள் அங்கு இறங்கியிருப்பார்கள்'' என்று சொன்னவர், குதிரையை விரைவுபடுத்தியபடி, ``எனக்குத் தெரிந்த ஒரே வாய்ப்பு மிக விரைவாகப் பயணப்பட்டு காட்டாற்றைக் கடப்பதுதான்'' என்றார்.

``அங்கு என்ன வகையான பாதுகாப்பு ஏற்பாடு இருக்கிறது?''

``இந்த மழைக்கு, காட்டாற்றில் நீர் பெருக்கெடுத்து ஓடும். மேடான பகுதியின் வழியே நான் ஆற்றைக் கடந்து அக்கரைக்கு அழைத்துச் சென்றுவிடுவேன். அக்கரையில் செவ்வரிமேட்டின் பக்கம் போய்விட்டால் போதும், நாம் இரவில் எந்தவித ஆபத்து குறித்தும் அச்சப்படத் தேவையில்லை.''

``ஏன்... எதிரிகள் அங்கு வர மாட்டார்களா?''

``மலைமக்கள் அச்சப்படுகிற ஒரே பொருள் நீர் மட்டும்தான். மலைமக்களின் பெரும்பான்மையோருக்கு நீச்சல் தெரியாது. அடர்கானகத்தின் இருள் கண்டு சமவெளி மக்கள் எப்படி பயம்கொள்கிறார்களோ, அதேபோல்தான் நீரைக் கண்டால் சற்று தள்ளியே நிற்பது மலைமக்களின் இயல்பு. எனவே, இரவில் காட்டாற்றுக்குள் இறங்க மாட்டார்கள்'' என்றான்.

சொல்லி முடிக்கும்போது வேந்தர்படையின் குதிரைகள், இதுவரை இல்லாத வேகத்தில் ஆற்றின் திசைவழி நோக்கிப் பாயத் தொடங்கின.

அதே காலத்தில் சேரனின் பாசறையின் மீது உதிரனின் தாக்குதல் தொடங்கியது. கொம்போசை ஊதி வீரர்களுக்கு தாங்கள் வந்துள்ளதைத் தெரியப்படுத்தியதும் பாசறைத் தளபதி உடனே எதிர் தாக்குதலுக்கு ஆயத்தமானான். அப்போதுதான் சேரர் படைத் தலைமைத் தளபதி துடும்பன் வந்து சேர்ந்தான். உதியஞ்சேரலின் கட்டளைபடி பாசறையைவிட்டு உடனடியாக வெளியேறும்படி உத்தரவிட்டான்.

``எதிரிகள் கொம்போசை எழுப்பியுள்ளனர். இந்த நிலையில் பாசறையைவிட்டு வெளியேற உத்தரவிட்டால் நிலைமை விபரீதமாக மாறும். ஒரு பக்கம் எதிரிகளைத் தடுக்க எதிர் தாக்குதல் நடத்திக் கொண்டிருப்போம். இன்னொரு பக்கம் வெளியேறிக் கொண்டிருப்போம். மழை பெய்து கொண்டிருப்பதால்

தெளிவான உத்தரவை எல்லோருக்கும் வழங்கிவிட முடியாது. நள்ளிரவில் கூடாரத்துக்குள் தூங்கிக் கொண்டிருக்கிற பலருக்கும் நிலைமையை விளக்குவது எளிதல்ல. எனவே, இரண்டு செயல்களால் பெருங்குழப்பம் உருவாகும். பறம்புவீரர்களை எதிர்த்து முழுக்கவனத்தோடு தாக்குதல் தொடுப்போம். பொழுது விடிந்த பிறகு நாம் பாசறையைவிட்டு வெளியேறுவோம்'' என்றான் பாசறைத் தளபதி.

அதிக அளவு வீரர்கள் கூடாரங்களைவிட்டு வெளியேறத் தொடங்கியதும் பறம்புவீரர்கள் தாக்குதலைத் தொடங்கினர். பின்னிரவு நேரத்திலும் மழையின் வேகம் குறையவில்லை.

இரவு நேரத்தில் பாசறையின் மீதான எதிரிகளின் தாக்குதலைச் சரியாகக் கையாள வில்லை என்றால் பேரழிவுக்கு இட்டுச்செல்லும் என்பதை தளபதி நன்கு அறிவார். எனவே தனது நிலையை வலியுறுத்தினார்.

பாசறைத் தளபதிக்கு, இந்தப் பாசறையில் ஏற்பட்டுள்ள சிக்கல் மட்டுமே தெரியும். ஆனால், துடும்பனுக்கு மொத்தச் சிக்கலும் தெரியும். வேந்தர்கள், மூஞ்சலைவிட்டு வெளியேறிவி ட்டனர்; பாதுகாப்பான இடத்துக்கு விரைந்துகொண்டிருக்கின்றனர். பாண்டியப் படையும் சோழப்படையும் பேரழிவுக்குள்ளாகின. அந்த நிலையில் சேரர்படை மட்டும் பாசறையில் இருந்தால் அது பேராபத்தாகும். எனவே, ஒரு பகுதி வீரர்களை இழந்தாலும் நாம்

இந்த இடத்தைவிட்டு அகல்வதே பாதுகாப்பானது. இதை பாசறைத் தளபதிக்கு விளக்கிக் கொண்டிருக்க முடியாது. எனவே, துடும்பன் வேந்தரின் கட்டளை என்று மறுசொல்லுக்கு வழியில்லாதபடி உத்தரவைப் பிறப்பித்தான்.

பாசறைத் தளபதியால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. தொடர்ந்து வாதிட்டான். ஆனால், நிலைமை கைமீறிக் கொண்டிருந்தது. இறுதியில் பாசறைத் தளபதி சொன்னான், ``சரி, நான் மேற்குப் பகுதியில் நின்று எதிரிகளைத் தாக்கும் படைக்குத் தலைமை ஏற்கிறேன். நீங்கள் வெளியேறும் படையை கவனத்தோடு கொண்டுசெல்லுங்கள்'' என்றான். தன் பாசறை வீரர்களைக் காக்க அவன் இறுதி வரை எடுத்துக் கொள்ளும் முயற்சியைக் கண்டு மறுப்பேதும் சொல்லாமல் ஏற்றான் துடும்பன்.

மேற்குத் திசையில் பறம்பின் தாக்குதல் வலிமையானதாக இருந்தது. பாசறைத் தளபதியின் தலைமையில் சேரப்படையினர் எதிர்த்தாக்குதலில் ஈடுபட்டனர். ஆனால், அவர்களால் எதிரிகளை பின்னுக்கு நகர்த்த முடியவில்லை. அதற்குக் காரணம், பறம்புவீரர்கள் இருளுக்குள் எந்த இடத்தில் நின்று அம்பெய்துகின்றனர் என்பதை, சேர வீரர்களால் மதிப்பிட முடியாததே. இருளின் எல்லா திசைகளில் இருந்தும் அவர்களின் அம்புகள் பாய்ந்துவந்தன.

வேந்தர்களின் படைவீரர்கள், பெரும்பாலும் தங்களின் வில்லுக்கு, பட்டுநூல் நாணினைத்தான் பயன்படுத்தினர். அது மழைநீரில் ஈரமானால் போதுமான இழுவை விசையை உருவாக்காது. ஆனால், பறம்பின் வீரர்கள் பயன்படுத்துவதெல்லாம் மான் முடியும் எருமை முடியும் கொண்டு திரிக்கப்பட்ட நாண். எனவே, அது மழைநீரால் எந்தவிதப் பாதிப்புக்கும் உள்ளாகாது. பறம்புவீரர்கள் பாசறையின் மீது அலையலையாய் அம்புகளை விடுத்துக் கொண்டிருந்தனர்.

மழைப் பொழிவுக்கு இடையிலும் அம்புகள் கூடாரத்தைத் தொடர்ந்து தாக்கின. பாசறைக்குள், உத்தரவில் ஏற்பட்ட குழப்பத்தால் பெரும் பாலானோர் தாக்குதலை எதிர்கொள்ளாமல் கிழக்குத்திசையில் வெளியேறத் தொடங்கினர்.

உதிரனின் தாக்குதல் திட்டத்தின் கூர்முனைப் பகுதி மேற்குத்திசை அன்று. அதாவது மேற்குத்திசையில் நள்ளிரவில் பேரோசையை எழுப்பியபடி தாக்குதல் தொடுத்தால் அச்சப் பட்டு வெளியேறும் படை கிழக்குத் திசையில்தான் பாய்ந்து செல்லும். எனவே, கிழக்குத் திசையில் பொருத்தமான மூன்று இடங்களில் தங்களின் மூன்று குடிகளை நிறுத்தியிருந்தான் உதிரன். காய்ந்த புளியமரங்கள், வாகைமரங்களின் கொப்புகள் முண்டுகள் எல்லாவற்றின் மீதும் பறம்புக் குடிகள் ஆயத்தநிலையில் காத்திருந்தனர்.

சேரர்படை வீரர்கள் வரத் தொடங்கிய பிறகு, கிழக்குத்திசை மரங்களிலும் மறைவுகளிலும் இருந்து தாக்குதல் தொடங்கியது. வாளும் ஈட்டியும் சவளக்குந்தமும் பெருங்குந்தமும் இடைவிடாது குத்தித் தீர்த்தன. சகதியில் மிதித்துகொண்டே இருப்பதுபோல குத்துவாள்கள் இறங்கிக் கொண்டே இருந்தன. வல்லயக் கம்புகளின் சிறு மணியோசை திரும்பும் திசையெல்லாம் கேட்டது. பேய்மழையில் நனைந்து நடுங்கிக் கொண்டிருந்த ஆந்தைகள், பீறிடும் மனிதக்கதறல் கேட்டு பொடவுக்குள் பதுங்கின.

சேரனால் அழித்தொழிக்கப்பட்ட மூன்று குடிகளின் தாக்குதலால் இப்போது சேரர்படை, பேரழிவைச் சந்தித்துக் கொண்டிருந்தது. பாண்டியப்படையும் சோழப்படையும் அணலி தாக்குதலுக்கு அஞ்சி ஓடிவந்ததைப்போல சேரர்படை ஓடிவரவில்லை. எதிரிகள் தாக்குகின்றனர். பாதுகாப்பாக வெளியேற வேண்டும் என்ற உணர்வோடு ஆயுதங்களை கைக் கொண்டபடிதான் ஓடிவந்தனர். ஆனால், மழையும் இருட்டும் அவர்களை எதிர்த்து நிற்கும் பறம்புவீரர்களை சரியாகக் கண்டுணர முடியாமல் செய்துவிட்டன.

முன்புறம் தனது படை நினைத்துப்பார்க்க முடியாத அழிவை அடைந்துகொண்டிருக்கிற செய்தி துடும்பனுக்கு எட்டியது. `எதிரிகளின் பொறியில் மாட்டிவிட்டோமோ!' எனத் துடித்துப்போனான் துடும்பன். `பாசறைத் தளபதி சொன்ன

எச்சரிக்கை சரியாகிவிட்டதே!’ எனக் கருதி, தாக்குதல் நடக்கும் கிழக்கு முனைக்கு விரைந்தான்.

அவன் வரும்போது அழிவுற்ற அவன் படைவீரர்கள் மலையெனக் குவிந்து கிடந்தனர். இருட்டில் அவனுக்குக் காட்சிகள் எவையும் புலப்படவில்லை. ஆனால் வீழ்த்தப்பட்டவர்களின் மூச்சிரைப்பு, பேய்க்காற்றுபோல மழையையும் விஞ்சி கேட்டது. என்ன இது என்று மிரண்டு நிற்கையில், வெட்டி இறங்கியது ஒரு மின்னல்.

அந்த ஒளியில் தொலைவில் நின்றிருந்த உதிரன், துடும்பனை அறிந்தான். தடியங்காட்டுப் போர் தொடங்கியதிலிருந்து வேந்தர்களின் விற்படைக்குத் தலைமை தாங்குபவன் துடும்பன். எனவே, அவனது முகம் மனதில் ஆழப் பதிந்திருந்தது. வந்து நிற்பது அவன்தான் என அறிந்ததும், உருவிய வாளோடு பாய்ந்தான் உதிரன்.

வீசிய வாளோடு உதிரன் வருவது அறிந்து வாளோடு அவன் மீது பாய்ந்தான் துடும்பன். இரண்டு வாள்களும் முழுத்திறனோடு குறுக்கிட்டு வெட்டின. வெட்டிய கணத்தில் மின்னல் ஒளி முற்றாக மறைந்து இருள் நிலைகொண்டது. வேந்தர்படையினர் பயன்படுத்தும் வாளின் பிடி யானைத் தந்தத்தால் ஆனது. காயத்துக்குள் கங்குபட்ட கணத்தில் உச்சந்தலைக்கு ஏறும்

அதிர்சூடுபோல வாளின் கைப்பிடி அதிர்வை உள்ளுக்குள் கடத்தியது.

பறம்பினர் பயன்படுத்தும் வாளின் பிடி எருமைக் கொம்பால் ஆனது. அது வாளின் அதிர்வைக் கடத்தாது. உதிரனின் வாள் மோதிய கணத்தில் ஏற்பட்ட அதிர்வை துடும்பனின் கை உச்சந்தலையில் உணர்ந்தது. அப்போது கை தளர்ந்து, பிறகு மீண்டும் இறுகியது. அப்படி இறுகும்போது அவனது தலையைச் சீவிக் கடந்துகொண்டிருந்தது உதிரனின் வாள்.

# பாரி – 109



பொழுது விடிந்தது. கதிரவனின் ஒளிக்கீற்று எங்கும் பரவியது. இரலிமேட்டின் பெரும்பாறையின் மீது அடுக்கிவைக்கப்பட்டிருந்த வீரர்களின் உடல்கள் மீது மழைநீர் படாமலிருக்க, கிடுகுகளால் ஆன படல்களைக் கொண்டு மேல்மறைப்புகளை

உருவாக்கியிருந்தனர். உடல்களின் தலைமாட்டில் வாரிகையன் உட்கார்ந்திருந்தார். வலதுபக்கக் கீழ்த்திசையில் முறியன் ஆசான் இருந்தார். இடதுகோடியில் ஆயுதப் பொறுப்பாளனான முதுவேலன் இருந்தான். இவர்கள் மூவரைத் தவிர மற்ற எல்லோரும் மலையை விட்டுக் கீழிறங்கிவிட்டார்கள். வயதானவர்கள், இதுநாள் வரை போருக்குத் தேவையான பணிகளை மட்டுமே செய்துகொண்டு இரலிமேட்டிலும் நாகக்கரட்டிலும் இருந்தனர். நேற்று மாலையோடு போர் முடிந்துவிட்டது. அதன் பிறகு நடக்கத் தொடங்கியது அழித்தொழிப்புதான். அறம்பிறழ்ந்தவர்களை அழித்தொழிக்கும் அறச்சீற்றம்தான். அதில் யாவரும் பங்கெடுக்கலாம் என்பதால் வயதானவர்களும் கீழிறங்கினர்.

நேற்று தாக்குதலுக்கான சொற்களைப் பாரி அறிவித்த கணத்திலிருந்து பன்மடங்கு பணியாற்றினர் முதுவேலனும் முறியன் ஆசானும். பறம்பில் உள்ள அத்தனை பேரும் ஒரே நேரத்தில் கீழிறங்கித் தாக்கவேண்டுமென்றால், அனைவரிடமும் போதுமான அளவுக்கு ஆயுதங்கள் இருக்க வேண்டும். யார் யார் எந்தப் பக்கம் போகப்போகிறார்கள்; அவர்கள் தாக்கவேண்டிய எதிரிகளின் படை அமைப்பு எப்படி என்று பேசி முடிவெடுத்து ஆயுதங்களைக் கொடுத்தனுப்பவெல்லாம் நேரமும் சூழலுமில்லை. பரப்பப்பட்டுக் கிடந்த சூளூர் வீரர்களின் குருதியை உடலில் பூசியபடி எழுந்து வந்த பறம்பு வீரர்கள், கைகளில் சிக்கியவற்றை எடுத்துக் கொண்டு

புறப்பட்டனர். முதுவேலனால் ஒருகட்டத்துக்குமேல் வழிமுறை செய்ய முடியவில்லை. குகைகளின் கடைசி எல்லை வரை அடுக்கிவைக்கப்பட்டிருந்த ஆயுதங்கள் அனைத்தும் ஒன்றுவிடாமல் கொடுக்கப்பட்டுவிட்டன. ஒற்றை அம்புகூட மிச்சம் இல்லாமல் அனைத்தும் பயன்பாட்டுக்குப் போய்விட்டன. ஆனாலும் அவன் மனதில் கவலை இருக்கத்தான் செய்தது.

இறங்கித் தாக்கி எதிரிகளைக் கூண்டோடு அழிக்கும் முடிவைப் பாரி சொன்னவுடன் தயங்கி நின்றவன் முதுவேலன்தான். அழித்தொழிப்புப் போருக்காக மலையை விட்டுக் கீழே இறங்கிவிட்டால் வேலை முடிந்த பிறகுதான் திரும்பி வர முடியும். வேந்தர்களின் படையில் இப்போதைய நிலைமையில் நாற்பதாயிரம் பேர் இருக்கக்கூடும். அவர்களை முழுமையாக அழித்தொழிக்கும் அளவுக்கு நம் வீரர்களின் கையில் போதுமான ஆயுதங்கள் இருக்க வேண்டும். ஆனால், நம்மிடம் வில் - அம்பு மட்டுமே தேவையான அளவு இருக்கின்றன. இதுபோன்ற தாக்குதலில் அதிகம் பயன்படுபவை அருகில் இருந்து தாக்கும் ஆயுதங்கள்தான். குறிப்பாக வாள் வகைகள்.

அனைத்து வீரர்களும் ஒன்றுக்கும்மேற்பட்ட வகை ஆயுதங்களை வைத்துக் கொண்டு இறங்குவதுதான் சரியான நடவடிக்கையாகும். ஆனால், ``அவ்வளவு ஆயுதங்கள் கைவசம் இல்லை'' என்று முதுவேலன் சொன்னான். ஆயுதங்கள் போதுமான

அளவு இல்லை என்பதால் எதிரிகளை அழிக்காமல் விடமுடியாது. `மாற்று என்ன?' எனச் சிந்தித்தபோதுதான் வாரிக்கையன் அணலியை இறக்கும் ஆலோசனையைச் சொன்னார். அவர் அதைச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே முறியன் ஆசான் இருள்வேலமரத்தின் சிவப்புப் பிசினை எடுத்துவர தன் மாணவர்களை அனுப்பிவிட்டார். எதிரிகளின் இரண்டு பாசறைகளில் இருக்கும் எண்ணற்ற வீரர்களின் மீது முதல்கட்டத் தாக்குதலை இந்தப் பூச்சி இனங்கள் நடத்தட்டும். அதிலிருந்து தப்பி வருகிறவர்களை மட்டும் ஆயுதங்களால் தாக்கினால் போதும் என்று முடிவெடுக்கப்பட்டது.

அதன்படி பாண்டிய, சோழப் பாசறைகளிலிருந்து தப்பி வருகிறவர்களைத் தாக்கப்போகும் விண்டன் தலைமையிலான வீரர்களுக்கு மிகக் குறைவான ஆயுதங்களே கொடுக்கப்பட்டன. இரண்டு பாசறைகளிலும் சுமார் இருபதாயிரம் வீரர்கள் இருப்பார்கள். அவர்கள் பூச்சியினங்களின் தாக்குதலுக்குத் தப்பிப்பிழைத்து இருளுக்குள் ஓடிவருகிறபோது வாளையும் ஈட்டியையும் அவர்களை நோக்கி மடக்கிப் பிடிப்பதே போதுமானது. அதற்கு ஏற்பவே ஆயுதங்கள் கொடுத்தனுப்பப்பட்டன.

அதேபோல சேரனின் படையை நோக்கி உதிரன் தலைமையிலான வீரர்கள் அனுப்பப்பட்டனர். பின்னிரவில் மேற்குத்

திசையிலிருந்து தாக்குதல் தொடுத்து அவர்களை வெளியேற்றும் நிலையை உருவாக்கினால் கிழக்குத்திசையில் அழித்தொழிப்பு வேலையைச் செய்ய முடியும் எனக் கணித்து அதற்கு ஏற்ப ஆயுதங்கள் கொடுக்கப்பட்டன.

நடுவில் மூஞ்சல் நோக்கிச் சென்ற முடியன் தலைமையிலான குழுவுக்குத்தான் அனைத்து வகையான ஆயுதங்களும் தேவைப்பட்டன. மூவேந்தர்களைச் சுற்றி நிற்கும் சிறப்புப் படைகளையும் நீலனைச் சிறைப்பிடித்து நிற்கும் கவசப்படையையும் எதிர்கொள்வதற்கான முழுமையான அளவு ஆயுதங்கள் அவர்களுக்குத் தேவைப்பட்டன. ஆனாலும் அவ்வளவு ஆயுதங்கள் இல்லை. இரவாதனின் வீரமரணம், அந்த இரவில் ஆயுதங்களே இல்லாமல்கூட போரிடும் வலிமையை ஒவ்வொரு பறம்புவீரனுக்கும் வழங்கியிருந்தது. எனவே, முதுவேலன் என்ன கொடுக்கிறானோ அதை வாங்கிக் கொண்டு வீரர்கள் புறப்பட்டனர்.

எதிரிகள் மூஞ்சலில் சேகரித்துவைத்திருந்த நஞ்சின் வகைகளைப் பற்றி அலவன் மூலம் அறிந்திருந்த முறியன் ஆசான், அதற்கான மாற்றை உருவாக்கியிருந்தார். இறுதிக்கட்டத் தாக்குதலில் எதிரிகள் அதைப் பயன்படுத்தக்கூடும் எனக் கருதிய அவர், மூஞ்சலைத் தாக்கப்போகும் முடியனின் படைக்கு மட்டும் அவற்றைக் கொடுத்தார். ஒரு கடலைச்செடியில் எண்ணற்ற கடலைகள் இருப்பதுபோல் கொத்துக் கொத்தாக அந்தக் கிழங்குகள்

இருந்தன. ``போகும்போதே அந்தச் சிறுகிழங்கை ஆளுக்கு ஒன்றெடுத்து வாயில் போட்டுக் கொள்ளுங்கள்'' என்றார்.

இதில் முதுவேலனையே வியக்கவைத்தவர்கள் திரையர்கள்தாம். ``இறங்கித் தாக்க பாரி அனுமதி அளித்ததே போதும்; எங்களுக்கு எந்த ஆயுதமும் தேவையில்லை'' என்று சொல்லிப் புறப்பட்டான் காலம்பன். ஆனால், முதுவேலன், அவர்களை மறித்து ஒவ்வொரு வீரனுக்கும் கேடயம் ஒன்றும் நடுவகை வாள் ஒன்றும் கொடுத்தனுப்பினான்.

இவை தவிர ஆறுகுடியினர் தட்டியங்காட்டுப் பக்கமும் வெங்கல்நாட்டின் பக்கமும் மலையை விட்டுக் கீழிறங்கினர். வேந்தர்படையின் வீரர்கள் நிலப்பகுதியில் எங்கு குறுக்கிட்டாலும் வெட்டி வீழ்த்தப் புறப்பட்ட படை இது. அவர்கள், காட்டில் கிடைக்கும் அனைத்தையும் ஆயுதமாகப் பயன்படுத்தக்கூடியவர்கள்.

இவை நடந்துகொண்டிருக்கும்போதே செய்தி கேள்விப்பட்டு காரமலையின் உச்சியில் இருந்த அரிமான்கள் இரலிமேட்டுக்கு வந்தனர். இதுவரை அவர்களை இரலிமேட்டுக்கே வரக் கூடாது என்று சொல்லியிருந்தான் பாரி. ஆனால், அவசரம் கருதி கூவல்குடியினர் மூலம் உச்சிமலையில் இருந்த அணலிகளைக் கொண்டு வரச் சொல்லி உத்தரவிட்டான் முடியன். அவர்களைத்

தவிர வேறு யாராலும் இவ்வளவு விரைவாக அடர்குகைக்குள் இருக்கும் அணலிகளைப் பிடித்துக் கீழிறங்க முடியாது.

அந்த உத்தரவு மூலமே பேராபத்து உருவாகியுள்ளதை அரிமான்கள் உணர்ந்தனர். உடனடியாக அந்தக் குலத்தலைவனுக்குச் செய்தி சொல்லப்பட்டு, அவன் இரலிமேட்டுக்கு வந்துசேர்ந்தான்.

பறம்புவீரர்கள் எல்லோரும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு கீழிறங்கிய பிறகு அரிமான்குலத் தலைவன் வந்தான். கிடத்தப்பட்ட வீரர்களின் உடல்களைப் பார்த்துக் கொதிப்பேறிய நிலையில் ``எங்களைப் போர்க்களத்துக்கு அனுமதி'' என்று பாரியின் கைகளைப் பிடித்து மன்றாடினான்.

``எந்நிலையிலும் நீங்கள் போர்க்களம் புகுவதை ஏற்க முடியாது'' என்று உறுதியாக மறுத்தான் பாரி.

அரிமான்களோடு சேர்த்து பறம்பில் தஞ்சமடைந்த நான்கு குடிகளுக்கு, பாரி இறுதிவரை அனுமதியளிக்கவில்லை. மிகக் குறைந்த மனிதர்கள் மட்டுமே வாழும் அந்த அரிய குடிகள் இயற்கையின் ஆதிரகசியங்களைக் காத்துவருகிறார்கள். இந்தப் போர், மனிதர்களுக்கு இடையே நடக்கிறது. இதில் நிகழும் எந்தவொரு மரணமும் இயற்கைக்கு பாதிப்பை உருவாக்கிடாது. ஆனால், இந்த நான்கு குடிகளில் இருக்கும் ஒவ்வொரு மனிதனும்

பச்சைமலைத் தொடருக்கும் அதில் உள்ள உயிரினங்களுக்கும் மிக முக்கியப் பங்களிப்பைச் செய்கிறவர்கள். எனவே, பாரி இறுதி வரை அனுமதி கொடுக்கவில்லை.

``அப்படியென்றால், இந்தப் போரில் எங்களுக்கு எந்தப் பங்கும் இல்லையா?'' எனக் கேட்டான் அரிமான்குலத் தலைவன்.



``நீங்கள் எடுத்துவந்த அணலிகள்தான் இந்தப் போரில் முக்கியப் பங்காற்றப்போகின்றன. அவற்றை நீங்களே எதிரிகளின் பாசறையைச் சுற்றிக் கீழிறக்கிவிட்டு வாருங்கள். அதுமட்டுமல்ல, இன்னொரு முக்கியமான பணியையும் உங்களுக்குக் கொடுக்கப்போகிறேன்'' என்றான்.

``என்ன?'' என்று கேட்டான் அரிமான்குலத் தலைவன்.

``நான் கீழிறங்கப்போகிறேன். நான் சென்ற பிறகு என் தோழன் கபிலனை அழைத்துச் சென்று பாதுகாத்துவைத்திருங்கள்'' சொல்லி முடித்த வேகத்தில் அந்த இடம் விட்டு அகன்றான் பாரி. அரிமான்குலத் தலைவனோ, இந்த உரையாடலைச் சற்றுத்

தொலைவிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த கபிலரோ, பதிலேதும் சொல்வதற்கு எந்த இடமும் தரவில்லை பாரி.

குகை விட்டுக் கீழிறங்கிய வேகத்தில் அவனோடு சிறுபடை இணைந்தது. பாரிக்கான ஆறு வகை ஆயுதங்களையும் அந்தப் படை வீரர்கள் கைகளில் வைத்திருந்தனர். மூவேந்தர்களின் பாசறைத் தாக்குதலையும் மூஞ்சலில் நடக்கும் தாக்குதலையும் ஒருங்கிணைத்துச் செய்தியைப் பரிமாற, கூவல்குடி வீரர்கள் உடன் இருந்தனர். பாரி மலையை விட்டுக் கீழிறங்கும்போது, மற்ற அனைவரும் தங்களுக்கான இடத்தை அடைந்துவிட்டனர். முடியனின் ஈட்டி, உறுமன் கொடியைக் குத்தித் தூக்கிக் கொண்டிருந்தபோது பாரி நாகக்கரட்டிலிருந்து சமவெளியை வந்தடைந்தான்.

பாரி முற்றிலும் எதிர்பாராதது, கொட்டித் தீர்க்கும் பெருமழையை. மழையின் வேகம், நிலத்தை நடுக்கமுறச் செய்தது. மழை பறம்புவீரர்களின் வேகத்தைச் சற்று மட்டுப்படுத்தும் அதேநேரம், தாக்குதலுக்கான வாய்ப்பை அதிகப்படுத்தும், எதிரிகளுக்கு அச்சமூட்டும் இன்னோர் ஆயுதமாக அது மாறும் எனக் கணித்தபடியே முன்னகர்ந்தான். மணல்வெளியில் செவ்வெறும்புகள் சாரைசாரையாக ஊடறுப்பதுபோல இருள்வெளியில் பறம்பு வீரர்கள் கூட்டம் கூட்டமாய் முன்னேறிக் கொண்டிருந்தனர். பாரி முன்னகர்ந்து உள்ளே

வந்துகொண்டிருந்தபோது விண்டனின் தாக்குதல் தொடங்கிய செய்தி அவனுக்கு வந்து சேர்ந்தது. பாண்டியப்படையும் சோழப்படையும் நிலைகுலையத் தொடங்கிவிட்டதை உறுதிப் படுத்தினான். கூட்டைக் கலைத்தால் போதும் பாதி அழிவை அது தனக்குத்தானே நிகழ்த்திக் கொள்ளும். வேந்தர்படை தன் அழிவைத் தானே நிகழ்த்திக் கொண்டிருந்தபோது அதற்கு உதவி செய்துகொண்டிருந்தான் விண்டன். உதிரன் சேரப்பாசறையைச் சுற்றி நிலைகொண்ட செய்தியும் வந்தது.

ஆனால் பாரி முற்றிலும் எதிர்பாராதது, மூஞ்சலை வேந்தர்கள் கைவிடுவதற்கு வெகுநேரம் முன்னரே நீலனை இடம் மாற்றிவிட்டார்கள் என்பது. முடியன் அனுப்பிய செய்தி பாரியை வந்தடைந்ததும் உடனடியாக மூஞ்சலை நோக்கி விரைந்தான். தப்பி வெளியேறிக் கொண்டிருக்கும் மூவேந்தர்களையும் தாக்கி அழிக்கப் பாய்ந்து சென்றுகொண்டிருந்தான் முடியன். அவன் அவ்வாறு செய்துவிடக் கூடாது என்பதற்குத்தான் விரைந்து வந்தான் பாரி. உறுமன்கொடியைக் கொன்றழித்த வேகத்தில் வேந்தர்களைக் கொன்றழிக்க விரைந்துகொண்டிருந்த முடியனைத் தடுத்து நிறுத்தினான் பாரி. ``நீலனை எந்த இடத்துக்குக் கொண்டுபோயுள்ளனர் என்பதை முதலில் தெரிந்துகொள்வோம். அதன்பிறகு வேந்தர்களைத் தாக்கி அழிப்போம்'' என்றான்.

பாரியின் சொல்லை ஏற்க முடியாமல் திணறியது முடியனின் மனம். ஆனாலும் நீலன் குறித்த சிந்தனை மனதை மாற்றியது. `மழை கொட்டும் இந்த இரவில் நீலனை எங்கு கொண்டுபோயிருப்பர்; எங்கே போய் அறிய முடியும்?' எனச் சிந்தித்தபடி திகைத்து நின்றான் முடியன்.

சட்டென வேட்டூர்பழையனின் நினைவு வந்தது. அந்தக் கிழவன் இந்நேரம் இருந்திருந்தால் இந்த மண்ணின் ஒவ்வோர் அசைவையும் சொல்லிவிடுவார். மையூர்கிழாரைப் பற்றியும் வெங்கல்நாட்டைப் பற்றியும் அவரளவுக்குத் தெரிந்தவர் யாரும் இல்லை. அவருக்கு அடுத்து இந்த நிலத்தை நன்கு அறிந்தவன் நீலன். அவனும் இல்லை என நினைத்தபோது, ஆறு ஊர்க்காரர்களின் நினைவுவந்தது. உடனே வீரர்கள் சிலரை அழைத்துக் கொண்டு அவ்விடம் விரைந்தான்.

முடியனுடன் இருந்த பெரும்பகுதி வீரர்களோடு பாரி மூவேந்தர்களைப் பின்தொடர்ந்தான். ``பறம்பின் அனைத்து குடிகளும் கீழிறங்கிவிட்டன. பாதுகாப்புக்கு எங்கே போவது என்று எனக்குப் புரியவில்லை'' என்று கருங்கைவாணனிடம் மையூர்கிழார் புலம்பிக் கொண்டிருந்தபோது அவர்களுக்குப் பின்னால்தான் பாரி வந்துகொண்டிருந்தான். வெட்டி இறங்கும் மின்னல் ஒளியில் முன்னால் போகிறவர்களைப் பார்த்தபடி தாக்குதல் எதுவும் தொடுக்காமல் நிதானமாக வந்துகொண்டிருந்தான் பாரி.

தன்னுடன் இருக்கும் படைவீரர்களுக்கு உத்தரவு கொடுத்தால் போதும், அடுத்த மின்னல் ஒளிபாய்ச்சும்போது முன்னால் போகிற எவனும் உயிரோடு மிஞ்ச மாட்டான். ஆனாலும் நீலனைப் பற்றிய உறுதியான செய்தியைத் தெரிந்து கொள்ளாமல், `இவர்களைத் தாக்கினால் விளைவு கைமீறிப் போய்விட வாய்ப்புள்ளது' என நினைத்தான்.

அந்தக் கணத்தில் அவனது மனம் தேக்கனை நினைத்தது. தனது கைக்கெட்டும் தொலைவில் மூவேந்தர்களும் அஞ்சி ஒடுங்கியபடி சென்றுகொண்டிருக்கிறார்கள். தாக்க முடிவெடுத்தால் ஒருவன்கூட தப்ப முடியாது. ஆனால், நீலன் என்ன ஆவான்; வேந்தர்கள் கொல்லப்பட்ட பிறகு நீலனை உயிரோடு மீட்க முடியுமா என்ற குழப்பத்தில் தாக்கும் முடிவைத் தள்ளிப்போட்டபடி நகர்ந்தான் பாரி. தான் எடுக்கும் இந்த முடிவு சரியானதா என்ற ஐயம், போர்க்களத்தில் முதன்முறையாகப் பாரிக்கு ஏற்பட்டது.

பறம்பு தோன்றியதிலிருந்து இதுவரை நடந்திராத ஒன்று, இப்போது நடந்து கொண்டிருக்கிறது. பாரி உட்பட பறம்புவீரர்கள் அனைவரும் பறம்பின் எல்லையை விட்டு வெளியேறியுள்ளனர். புதிய நிலத்தில் கைக்கெட்டிய எதிரியை விட்டுப்பிடித்துக் கொண்டிருந்தனர்.

பாரியின் மனம் தேக்கனைத் தேடியது. தேக்கனால் எதிரியின் வலிமையைத் துல்லியமாகக் கணிக்க முடியும். அப்படிக் கணிக்க

முடியாத நிலையில் எதிரிகளின் வலிமையின்மையைக் கண்டறிந்துவிடுவான். வலைக்குச் சிக்காதது வாய்க்குச் சிக்கும் என்பதில் அவன் எப்போதும் தெளிவாக இருப்பான். எந்த நிலையிலும் தேக்கனின் ஒற்றைச்சொல் குழப்பத்தைப் போக்கித் தெளிவை உருவாக்கும். அந்தக் கணம் தேக்கனின் குரலுக்காகப் பாரியின் மனம் ஏங்கி அடங்கியது.



ஏக்கத்தினூடே தேக்கனின் சொல் என்னவாக இருந்திருக்கும் எனச் சிந்தித்தான். ``வேந்தர்களை அழிப்பதல்ல; நீலனை மீட்பதே முதற்பணி'' என்றது ஆழ்மனதுக்குள் எதிரொலித்த தேக்கனின் சொல். எடுத்த முடிவில் துணிந்து நடந்தான் பாரி.

பாரி எந்தப் பக்கம் இறங்கியிருப்பான் என்பது தெரியாத குழப்பத்தில் மையூர்கிழார் திணறிக் கொண்டிருக்கும்போது, வேந்தர்களின் பிடரியில் மூச்சுக்காற்று படும் தொலைவில்தான் பின்தொடர்ந்துகொண்டிருந்தான் பாரி. மழையின் வேகம் சற்றே குறையத் தொடங்கியது. பாரி தனது பின்தொடர்தலில் இடைவெளியை அதிகப்படுத்திக் கொண்டான். நேரம் செல்லச் செல்ல மழையின் வேகம் மேலும் குறைந்தது. இருள்நீங்கும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. இந்நிலையில் முன்னால் செல்லும் வேந்தர்படையின் வேகமும் அதிகமானது.

வேறு முடிவெடுக்க முடியாத நிலையில் பின்தொடர்ந்து போய்க் கொண்டே இருந்தான் பாரி.

மழை முழுமுற்றாக நின்றது. இருளின் அடர்த்தி மேலும் குறையத் தொடங்கியது. பின்னால், தொடர்ந்து வருவதை வேந்தர் படையினர் அறிய நேர்ந்தால் அச்சத்தில் உடனடியாகத் தாக்குதலில் ஈடுபடுவார்கள். தாக்குதல் தொடங்கிவிட்டால் எதிரிகளின் படை முற்றாக அழியும். ஆனால், நீலனை மீட்கும் முயற்சியில் ஆபத்து உருவாகும். எனவே, இடைவெளியை மேலும் அதிகப்படுத்தியபடி வந்தான் பாரி. முடியனிடமிருந்து எந்தச் செய்தியும் வரவில்லை. மழை நின்று இருள் குறையத் தொடங்கியது.

இடைவெளியை நன்கு அதிகப்படுத்திய பாரி வேந்தர்படையினர் முன்னகர்ந்த திசையில் வந்து சேர்ந்தபோது, காட்டாறு ஒன்று குறிக்கிட்டு ஓடிக் கொண்டிருந்தது. எதிரிகள் காட்டாற்றைக் கடந்து அக்கரையில் ஏறிக் கொண்டிருந்தனர். அதிர்ந்தான் பாரி. இந்த இடத்தில் இப்படியோர் ஆறு ஓடுவது அவனுக்குத் தெரியாது. மலை விட்டு இறங்கும் ஆறுகள் சமவெளியில் இவ்வளவு உள்வாங்கிய நிலத்தில் எவ்விடம் ஓடுகின்றன என்பது பறம்புவீரர்கள் யாருக்கும் தெரியாது. எதிர்த்திசையைப் பார்த்தபடி அதிர்ச்சியுற்று நின்றான் பாரி. இடைவெளியை அதிகப்படுத்தியது, வேந்தர்படை முழுமுற்றாக ஆற்றைக் கடந்து அக்கரைக்குச் செல்ல வசதியாகிவிட்டது.

கைநழுவிவிட்டதோ என்று மனம் பதைத்தது. வானில் ஒளி கசிந்து பரவிக் கொண்டிருந்தது. அப்போதுதான் முடியன் வந்து சேர்ந்தான். ``நேற்றிரவு மழை தொடங்குவதற்குச் சற்று முன்பே கொட்டடியில் நின்றிருந்த யானைகளைக் காட்டாற்றுக்கு அப்பால் இருக்கும் கோட்டைக் காவலுக்கு அனுப்ப உத்தரவு வந்ததாம். எனவே, ஆற்றுக்கு அப்பால் இருக்கும் கோட்டையில்தான் நீலனை வைத்திருப்பார்கள் என்று காராளி சொன்னான்'' என்றான் முடியன்.

அடுத்து என்ன செய்யலாம் என்று பாரி சிந்திக்கத் தொடங்கும்முன் முடியன் சொன்னான், ``தந்தமுத்தத்துக்காரர்களுக்குச் செய்தி அனுப்பிவிட்டேன். இன்னும் சிறிது நேரத்தில் வந்துவிடுவார்கள்.''

``சரியான முடிவு'' என்றான் பாரி.

எதிரிகள் ஆற்றைக் கடந்துவிட்டனர் என்பது முடியனுக்கும் அதிர்ச்சியை உருவாக்கியது. ஆனால், பாரியைவிட சரியான முடிவை யாரும் எடுக்க முடியாது என அவனுக்குத் தெரியும். எனவே, பாரியின் அடுத்த உத்தரவை எதிர்பார்த்தான்.

``கொஞ்சம் பொறு. பொழுது நன்கு விடியட்டும்'' என்றான் பாரி.

பாசறைகளிலிருந்து அணலிகளின் தாக்குதலுக்குத் தப்பிப்பிழைத்தவர்கள், விண்டன், உதிரன் ஆகியோரின்

தாக்குதல்களில் கொல்லப்பட்டனர். அவற்றிலிருந்தும் தப்பிப்பிழைத்தவர்கள் நிலமெங்கும் சுற்றித்திரியும் பறம்பின் இதர குடிகளிடம் சிக்கி மாண்டனர். அதிலும் தப்பியவர்கள் வெகுசிலரே. அவர்கள் கிழக்குப்புறமாக நகர்ந்து ஆற்றைக் கடந்து அக்கரை ஏறினர். வேந்தர்படையினர், தங்களின் மூன்று பாசறைகளிலிருந்தும் தப்பிவருகிறவர்களை ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனால், மழை நின்றதும் நிலமெங்குமிருந்து மேலெழுந்தது கதறல்களின் பேரோசை.

பகலின் நான்காம் நாழிகை முடியும்போது ஒளியால் நிரம்பியிருந்தது நிலம். செவ்வரிமேட்டில் இருந்த வேந்தர்கள், எதிர்ப்புறத்தில் காட்டாற்றுக்கு அப்பால் ஆற்றைக் கடக்க முடியாமல் திணறியபடி நிற்கும் பறம்புப்படையை முழுமையாகப் பார்த்தனர். இரவு முழுவதும் நடந்த தாக்குதலால் அச்சம் உறைந்திருந்தது. ஆனால் பகலின் ஒளி, அச்சத்தை நீக்கத் தொடங்கியது.

மூன்று பாசறைகளில் இருந்த பல்லாயிரம் பேர், கொன்றழிகப்பட்டுவிட்டனர். மிஞ்சி இக்கரைக்கு வந்து சேர்ந்துள்ளவர்கள் சில ஆயிரம் பேர் மட்டும்தான். ஆனால், பறம்புவீரர்கள் ஆற்றைக் கடக்க முடியாமல் நின்றது நம்பிக்கையை உருவாக்கியது.

மலைமக்கள் ஆற்றினுள் கால் வைக்க அஞ்சுவார்கள் என்பதைக் கண்ணுக்கு முன்னால் பார்த்தபடி இருந்த கருங்கைவாணன், மையூர் கிழாரைப் பாராட்டினான். பேரழிவிலிருந்து தளபதிகள் மீண்டுள்ளனர். செவ்வரிமேட்டில் இருக்கும் வேந்தர்படை வீரர்களின் எண்ணிக்கை எட்டாயிரத்தைத் தாண்டாது. ஒரு லட்சத்து நாற்பதாயிரத்துக்கும் மேற்பட்ட வீரர்களைக் கொண்ட படை, இறுதியில் இவ்வளவுதான் மிஞ்சியுள்ளது. ஆனாலும் மையூர்கிழாரும் கருங்கைவாணனும் நம்பிக்கையோடு போய் வேந்தர்களிடம் சொன்னார்கள்.

``எதிரிகள் ஆற்றைக் கடக்க வழியின்றி அக்கரையில் நிற்கிறார்கள். அது முக்கியமல்ல; அக்கரையில் நிற்பவர்களின் எண்ணிக்கையைப் பாருங்கள். சில நூறு பேர்தான் இருப்பார்கள். எனவே, இதற்குமேல் நாம் பின்வாங்க வேண்டியதில்லை. நாம் நல்ல மேட்டுநிலத்தில் இருக்கிறோம். அவர்கள் ஆற்றைக் கடக்கும்போது இங்கிருந்து தாக்கினால் ஒருவனும் உயிர்தப்ப முடியாது'' என்றனர்.

இரவெல்லாம் பிழைத்தோடிவந்த அச்சம் எளிதில் மனம் விட்டு அகலவில்லை. ஆனாலும் ஆற்றைத் தாண்ட முடியாமல் தேங்கி நிற்கும் சிறு கூட்டத்தைப் பார்த்ததும் இயல்பாக மனதுக்குள் நம்பிக்கை உருவானது. முதன்முறையாகப் பறம்புப்படை

நிலப்பரப்பின் கீழ்நிலையிலும், வேந்தர்படை நிலப்பரப்பில் மேல்நிலையிலும் இருந்தனர்.

`எப்படியும் அவர்கள் நீலனைக் காப்பாற்ற ஆற்றைக் கடக்க முயல்வர். அது அவர்களை முழுமுற்றாக அழிக்கும் வாய்ப்பை நமக்கு வழங்கும். எனவே, இதைத் தவறவிடக் கூடாது' என குலசேகரபாண்டியனுக்குத் தோன்றியது. ``நம் படையணிகளை ஒழுங்குபடுத்திக் கொள்'' என்றார்.

முதல் நாள் இரவு நடந்த பேரழிவிலிருந்து மறுநாள் காலை மீண்டு மேலேறியது வேந்தர்படை. பறம்பின் படை இவ்வளவு சிறியது என்பதை வேந்தர்படையின் ஒவ்வொரு வீரனும் முழுமையாகப் பார்த்தான். பலிவாங்கும் உணர்வும், சிறுத்திருக்கும் எதிரிகளின் கூட்டமும் அவர்களின் நம்பிக்கையை மேலெழுப்பின. இரவெல்லாம் தாக்கி அழிக்கப்பட்டதனால் உருவான வெறி அவர்களை மூர்க்கம் கொள்ளவைத்தது. கருங்கைவாணன், உத்திகளை வகுத்தான்.

ஆற்றின் மேற்குத்திசையில் அப்படியே நின்றிருந்தான் பாரி. நிலமெங்கும் இருந்த பறம்புவீரர்கள் அனைவரும் ஆற்றங்கரைக்கு வந்துசேர்ந்தனர். இருள்வேட்டை முடிவுற்றது. பகலின் பாய்ச்சலுக்காகப் பாரியின் உத்தரவை எதிர்பார்த்து நின்றிருந்தனர். சிறிது நேரத்துக்குப் பிறகு, ``நெட்டிட்டிகளை வீசச் சொல்'' என்றான் பாரி.

சொல்லி முடிக்கும்போது பறம்பின் ஈட்டிகள் ஆற்றுநீருக்குள் எதிர்க்கரை வரை சரசரவெனக் குத்தி இறங்கின. வெவ்வேறு இடங்களிலிருந்து மூன்று வரிசைகளாக போதிய இடைவெளியோடு ஈட்டிகள் எறியப்பட்டன. ஈட்டிகள் குத்தி நிற்பதை வைத்து நீரின் ஆழத்தைக் கணித்தனர். எந்த இடத்தில் பள்ளம் அதிகம் என்பதை அறிந்து, அதற்கு முன்னும் பின்னுமாக சில ஈட்டிகளை எறிந்து ஆழமற்ற பகுதியையும் கண்டுகொண்டனர். ஈட்டிகள் இழுபடும் தன்மைகொண்டு நீரின் வேகம் அறிந்தனர்.

அடுத்து உள்ளிறங்குவதற்குப் பாரி உத்தரவிடுவான் என எதிர்பார்த்து ஆற்றின் அருகில் போய் நின்றான் உதிரன். ஆனால், பாரி அதற்கு ஆயத்தமாக இல்லை. நீரில் இறங்கி அக்கரையை அடைந்துவிடலாம். ஆனால், எதிரிகள் மேட்டின்மீது நிற்கிறார்கள். உயரத்திலிருந்து அவர்கள் தாக்குதல் தொடுத்தால் பறம்பின் பக்கம் இழப்புகள் அதிகமாகும்.

எனவே, மாற்றுவழியைத்தான் கண்டுபிடிக்க வேண்டும் எனத் தோன்றியது. இந்த எண்ணம் தோன்றிய கணமே, `நேரம் அதிகமானால் நீலனை மீட்கும் வாய்ப்பு குறைந்துவிடுமோ!' என்றும் தோன்றியது. வீரர்கள் அனைவரும், பாரி வந்துவிட்டதால் மீட்டே தீருவான் என்ற நம்பிக்கையோடு நின்றனர். அவர்களுக்கு எதிரில் ஓடும் ஆறோ, உயர்ந்து நிற்கும் மேடோ ஒரு பொருட்டாகவே இல்லை. ஆனால், பாரிக்கு எல்லாம் பொருட்டாக

இருந்தன. எந்த வீரனையும் இழந்துவிடக் கூடாது என்ற கவனமும் நீலன் மீதான சிந்தனையுமாக மனதை ஒருமுகப்படுத்திக் கொண்டிருந்தான்.

அப்போது இடதுபுறம் வெகுதொலைவிலிருந்து கூவல்குடியின் ஓசை கேட்டது. என்னவென்று பார்த்தனர். தந்தமுத்தத்துக்காரர்கள் நான்கு யானைகளோடு ஆற்றங்கரைக்கு வந்து நின்றனர். உள்ளே இறங்குவதற்கான அனுமதியைக் கேட்டது அந்த ஓசை. ``ஆற்றுக்குள் இறங்கு. ஆனால், அக்கரையில் ஏறாதே'' என்றது பாரியின் பதில். குறிப்போசையாக இங்கிருந்து எழுப்பப் பட்டது.

இது நடந்துகொண்டிருந்தபோது ஆற்றின் வலதுபுறத்தைக் கைகாட்டி ``அங்கே பாருங்கள்'' என்றான் முடியன்.

ஒரு காதத் தொலைவில் ஒரு கூட்டம் ஆற்றுக்குள் இறங்கி அக்கரையை நோக்கி நடக்கத் தொடங்கியது. உற்றுப்பார்த்துவிட்டு முடியன் சொன்னான், ``திரையர்கள் இறங்கிவிட்டார்கள்.''

முடியன், உதிரன், விண்டன் மூவரும் பாரியிடம் சொன்னார்கள், ``இனியும் நாம் காலம் தாழ்த்த வேண்டாம். ஆற்றைக் கடந்து மேலேறும்போது நம்மில் சிலர் சாகவேண்டியிருக்கும். ஆனால், எதிரிகளால் வலுவான தாக்குதலை நடத்திவிட முடியாது. நம்முடைய வேகத்துக்கு அவர்களால்

ஈடுகொடுக்க முடியாது. எனவே, ஆற்றைக் கடக்க உத்தரவு தாருங்கள்'' என்றனர்.

பாரியிடமிருந்து பதிலேதுமில்லை. `மிகச்சில வீரர்களிடம் மட்டுமே குதிரை இருக்கிறது. மேட்டின் மீதிருந்து வீசப்படும் ஆயுதத்தின் வேகம் வலிமையானது. எதிரிகள், நாம் ஆற்றில் இறங்கியவுடன் தாக்குதலைத் தொடங்கிவிடுவர். சில இடங்களில் கழுத்து வரை ஆழம் இருக்கும் பகுதியை நாம் கடந்தாக வேண்டும். அப்போது நம்மீது நடக்கும் தாக்குதலால் இழப்பு மிக அதிகமாகும்' என்று சிந்தித்தபடி வேறு வழி பற்றி எண்ணங்களைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

வேந்தர்படையில் செவ்வரிமேட்டின்மேல் நின்றிருந்த தளபதி உசந்தன் இடதுபுறமாக ஆற்றை நோக்கிக் கைகாட்டி ``சிலர் ஆற்றைக் கடக்கிறார்கள்'' என்றான்.

எல்லோரின் பார்வையும் அங்கே போனது. ஐம்பது, அறுபது பேர்கொண்ட சிறு படை ஒன்று ஆற்றைக் கடந்துகொண்டிருந்தது. ``ஒருவன்கூட நமது கரையில் கால் வைக்கக் கூடாது. வெட்டி வீசுங்கள்'' என்றான் மையூர்கிழார்.

வீரர்களை அழைத்துக் கொண்டு உசந்தன் செல்ல ஆயத்தமானபோது, ``நானே போகிறேன்' ' எனச் சொல்லி, தனது படையோடு கருங்கைவாணன் விரைந்தான்.

எதிரிப்படைகளில் இருநூறு பேர்கொண்ட படைப்பிரிவு திரையர்களை நோக்கிப் போவதைப் பாரி உள்ளிட்ட அனைவரும் மேற்குக் கரையிலிருந்து பார்த்தபடி நின்றிருந்தனர். முடியன் மீண்டும் சொன்னான், ``காலம் தாழ்த்த வேண்டாம். உள்ளிறங்குவோம்.''

பாரியின் கண்கள் ஆற்றுநீரையே பார்த்துக் கொண்டிருந்தன. கரையோரத்தில் நீரின் எதிர்த்திசையில் சிற்றலைகள் எழும்பி அமுங்கின. என்ன இது என்று கவனித்தபோது காற்று, நீரின் மேல்தளத்தை சீவியபடி வீசியது.

அதன் திசையையும் தன்மையையும் உணர்ந்த பாரி `இது காற்றல்ல; காற்றி. இந்நேரம் நம்மில் யாராவது குளவன்திட்டில் இருந்திருக்க வேண்டும்' என்று எண்ணிய கணத்தில் தலைக்குமேல் எண்ணிலடங்காத சுருளம்புகள் பறந்துகொண்டிருந்தன. எதிர்த்திசையில் செவ்வரிமேட்டின் உச்சியில் நின்றிருந்த வேந்தர்படையின் மீது கண்ணிமைக்கும் நேரத்தில் நூற்றுக்கணக்கான சுருளம்புகள் குத்தி இறங்கின.

அதிர்ந்து திரும்பினான் பாரி. வெகுதொலைவில் சின்னதாய்த் தெரிந்தது குளவன்திட்டு. இகுளிக்கிழவன் உச்சியில் நின்று சிரிப்பதுபோல அவன் மனக்கண்ணில் தோன்றியது.

``எப்படி இவ்வளவு தொலைவில்?'' என்று உதிரன் கேட்டபோது முடியன் சொன்னான், ``அவர்கள் ஐந்து வயதிலேயே குறி தவறும் அம்புகளை எய்து முடித்துவிடுவர். இது காற்றி. குளவன்திட்டில் எவ்விடமிருந்து வீசினாலும் அக்கரைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும்'' என்று சொல்லி முடிக்கும் முன் பாரியின் உறுமல் காற்றையும் உலுக்கியது.

இந்தச் சொல்லுக்காகக் காத்திருந்த பறம்புப் படை, காட்டாற்றுக்குள் பாய்ந்து இறங்கியது. வேந்தர்படையினர் சுருளம்புகளால் தாக்கப்பட்டு பின்னோக்கி ஓடத் தொடங்கியபோது, பறம்புப்படை ஆற்றைக் கடந்துகொண்டிருந்தது. இடதுமுனையில் நான்கு யானைகளின் மீது அமர்ந்தபடி தந்தமுத்தத்துக்காரர்கள் அக்கரையில் ஏறியபோது வலதுகோடியில் மேலேறிய திரையர்களைக் கருங்கைவாணன் படை தாக்கத் தொடங்கியது.

பல்லாயிரம் சுருளம்புகள் இப்படி வந்து இறங்கும் என யாரும் நினைத்துப்பார்க்கவில்லை. தட்டியங்காட்டில் பறம்புவீரர்கள் யானைப்போர் நடத்தாததற்குக் கானவர் செய்த கைம்மாறு இது. சுருளம்புகள் காற்றியால் தூக்கிவரப்பட்டதால் அவற்றின் வேகம் பல மடங்கு இருந்தது. செவ்வரிமேட்டின் முன்பகுதிச் சரிவில் நிறுத்தப்பட்டிருந்த வேந்தர்படை வீரர்கள் சுருளம்புகளுக்காகவே அணிவகுத்து நிறுத்தப்பட்டதுபோல் நின்றிருந்தனர்.

நினைத்துப்பார்க்க முடியாத இந்தத் தாக்குதலால் வேந்தர்படை சிதறியது.

காற்றியின் தாக்குதலுக்குச் சற்று முன்னதாகக் கருங்கைவாணன், இடதுபுறம் ஆற்றில் இறங்கிய எதிரிகளைக் கொன்றழிக்கப் போய்ச்சேர்ந்தான். கரையேறும் மனிதர்களின் உருவ அமைப்பைப் பார்த்ததும் முன்னால் விரைந்து சென்ற வீரர்களின் குதிரைகள் தேங்கத் தொடங்கின. இந்நிலையில்தான் சுருளம்புகள் படையின் மீது இறங்கின. தாக்கப்பட்ட வீரர்களின் பெருங்கூச்சல் காதத்தொலைவுக்கு அப்பால் இருக்கும் கருங்கைவாணனைத் திகைக்கவைத்தது. காற்றில் பறந்துவந்த அம்புகளை அவன் பார்த்துக் கொண்டிருந்தபோது அவன் கண்களின் முன்னால் அவனுடைய படைவீரர்கள் தூக்கி வீசப்பட்டுக் கொண்டிருந்தனர்.

தண்ணீருக்குள் இருக்கும் வரை பெரிய வேறுபாடு எதுவும் தெரியவில்லை. மேலேறிய ஒவ்வொருவனும் மூன்று ஆள் உடலமைப்பைக் கொண்டவனாக இருந்தான். அவர்களின் அடியில் குதிரைகள் மடங்கி விழுந்தன. முட்டைகளின் மீது பாறை விழுவதைப்போல அவர்களின் மீது திரையர்களின் தாக்குதல் இருந்தது. இருநூறு பேர்கொண்ட வேந்தர்படை கண நேரத்துக்குள் உருக்குலைந்தது. என்ன நடக்கிறது என்று கருங்கைவாணன் நிதானிப்பதற்குள் அவனது குதிரையை அடித்து வீழ்த்தினான் ஒருவன். அவனது முகத்தை எங்கேயோ பார்த்திருக்கிறோமே என

எண்ணிக் கொண்டிருக்கும்போது மண்ணில் உருண்டுகொண்டிருந்தான் கருங்கைவாணன்.

விழுந்த வேகத்தில் விரைந்து எழுந்தவன், இடுப்பில் இருந்த வாளை எடுக்கப்போகும்போது ஓடிவந்தவன் இடது தோள்பட்டையோடு முட்டித் தூக்கி எறிந்தான். அவன் முட்டிய வேகத்தில் தோள்பட்டை எலும்பு நொறுங்கியது. முட்டியவன் திரையர் குலத்தலைவன் காலம்பன் என்று கருங்கைவாணனின் மனம் உணர்ந்தபோது, அவனை நெஞ்செலும்போடு அடித்து வீழ்த்தினான் காலம்பன். யானையின் தாக்குதலுக்கு இணையானதாக இருந்தது அந்த அடி. கீழே விழுந்தவனின் மூக்கிலிருந்து குருதி கொப்புளித்தது. காலம்பன், விழுந்து கிடந்தவனின் அருகில் வந்தான். தன் குலம் அழித்தவனைக் காணும்போது உருவாகும் வெறி கட்டுக் கடங்காததாக இருந்தது. அப்போது காலம்பன் எழுப்பிய உக்கிரமேறிய ஓசை செவ்வரிமேட்டில் இருந்த பாரிக்குக் கேட்டது.

ஆற்றிலிருந்து மேடேறிக் கொண்டிருந்த பாரி, என்ன நடக்கிறது என்று திரும்பிப் பார்த்தான். வேந்தர்படையினரிடமிருந்து திரையர்கள் எதையோ பிடுங்கி எறிவது தெரிந்தது. எதிரிகளின் ஆயுதங்களைப் பிடுங்கி எறிகிறார்களோ என்று ஒரு கணம் தோன்றியது. அவை ஆயுதங்கள் அல்ல; பிய்த்து எறியப்படும் மனித உறுப்புகள்!

# பாரி - 110



முழுப்படையுடன் ஆற்றைக் கடந்து செவ்வரிமேட்டின் உச்சியில் ஏறி நின்றான் பாரி. எதிர்ப்புறம் பறந்து விரிந்துகிடந்தது நிலப்பரப்பு. எங்கும் எருக்கும் நெருஞ்சியும் விளைந்துகிடந்தன. கண்ணுக்கெட்டிய தூரம் வரை மேடுபள்ளம் எதுவும் இல்லாமல் வானின் விளிம்பு வரை சமமாய்க் கிடக்கும் மண்ணை வாழ்வில் முதன்முறையாகப் பார்த்தான் பாரி.

அந்த நிலத்தின் வடதிசை ஓரத்தில் இருக்கும் கோட்டையைச் சுற்றி எண்ணற்ற யானைகள் நின்றிருந்தன. அங்கிருந்து தென்திசையில் மிகத் தொலைவில் வேந்தர்படை நின்றுகொண்டிருந்தது. கோட்டையிலிருந்து மிக விலகி ஏன் நிற்கிறார்கள் எனப் புரியவில்லை. யானைப்படையால் சூழப்பட்ட கோட்டைக்குள் நீலன் இருக்கிறான் என்பது உறுதிப்பட்டது.

ஆனால், அந்த இடத்தைவிட்டு காதத்தொலைவு தள்ளி பெரும்படை நிற்கிறது. `ஏன் இந்த உத்தி?' என்று சிந்தித்தபடி நின்றான் பாரி.

காற்றில் வந்த சுருளம்புகளின் தாக்குதலால் செவ்வரிமேட்டில் முன்நிலையில் நின்ற வேந்தர்படை வீரர்கள் முற்றிலுமாக அழிந்தனர். இரண்டாம், மூன்றாம் நிலையில் இருந்தவர்கள் அப்படியே உள்வாங்கி நெடுந்தொலைவைக் கடந்து உள்நிலத்துக்கு வந்துசேர்ந்தனர். அவர்கள் வந்து நிலைகொள்ளும்வரை பறம்புப்படை செவ்வரிமேட்டுக்கு மேலே வந்துசேரவில்லை. ஆற்றைக் கடப்பதற்கு, நினைத்ததைவிட அதிக நேரமாகியிருக்கிறது. அது வேந்தர்படைக்கான வாய்ப்பாக அமைந்தது.

மிக நீண்டநேரம் கழித்து செவ்வரிமேட்டுக்கு மேலேயேறிய பறம்புப்படை பாய்ந்து முன்னேறி வராமல் அப்படியே நின்றது. தொலைவிலிருந்து அதை மையூர்கிழாரும் வேந்தர்களும் உற்றுக்கவனித்தபடி இருந்தனர்.

`நாம் வெகுதொலைவு உள்ளே வந்துள்ளோம். ஆனால், நாம் வந்த இந்தத் தொலைவுதான் அவர்களுக்கு அச்சத்தை ஊட்டுகிறது. உள்நிலப்பரப்புக்குள் வர அவர்களுக்குத் தயக்கமும் மிரட்சியும் இருப்பதை அவர்களின் செயல் வெளிப்படுத்துகிறது' என்று கருதினர்.

மையூர்கிழார் சொன்னார், ``இதுதான் நாம் முதன்முதலில் போர்க்களத்துக்காகத் தேர்வுசெய்த இடம். முடத்திருக்கண் இங்கேதான் திசைவேழரை அழைத்துவந்தான். ஆனால், நமது திட்டத்துக்கு எதிராகச் செயல்பட்ட திசைவேழர், அவர் தேர்வுசெய்த தட்டியங்காட்டிலேயே செத்தொழிந்தார். வெங்கல்நாட்டின் பெருந்தெய்வம் வெண்ணிறை மாடச்சி குடிகொண்டுள்ள நிலம் இது.

மலைக்காட்டில் உள்ள தீயசக்திகளை நிலத்தில் அண்டவிடாமல் மனிதர்களையும் மாட்டினங்களையும் காக்கும் மாடச்சியின் நிலத்துக்கே நாம் வந்து சேர்ந்துள்ளோம். இங்குதான் பாரியின் அழிவு நிகழப்போகிறது. காட்டுப்புலிகள் நாட்டுமாடுகளை வேட்டையாடிய காலம் முடிந்துவிட்டது. நாம் திருப்பித் தாக்கி அவர்களை முழுமுற்றாக அழித்தொழிக்க தெய்வம் ஏற்படுத்திக் கொடுத்த இந்த வாய்ப்பைப் பயன்படுத்தினால், வேந்தர்கள் மூவருக்கும் வெற்றி உறுதி'' என்றார்.

இதுவரை பேசியதுபோல் அல்லாமல், இப்போது தெய்வத்தை துணைக்கு அழைத்துப் பேசினார். மனிதனின் எந்த முயற்சியின் வழியேயும் கிடைக்காத நம்பிக்கை, தெய்வத்தின் பெயரால் ஏற்படுகிறது. வேந்தர்கள் மறுப்புச்சொல் ஏதும் சொல்லவில்லை. அடுத்த கணமே தனது திட்டத்தைக் கூறலானார் மையூர்கிழார். அவரது வேகமும் வெறியும் முன்னிலும் கூடுதலாக இருந்தன.

காரணம், வேந்தர்கள் மூவரும் மனதளவில் போரை கைவிடும் முடிவுக்கு வந்துவிட்டனர் என்பதை அவர் அறிவார். மூவேந்தர்களும் இந்த நிலம்விட்டு அகன்று தங்களின் தலைநகரங்களுக்குப் போய்விடுவார்கள். ஆனால், இனி தானோ, தனது நாடோ இங்கு இருக்க இயலாது. அனைத்தும் அழித்தொழிக்கப்பட்டுவிட்டன. மீதம் இருப்பதும் இன்றைய பகலுக்குள் முடிந்துவிடும். எனவே, கிடைக்கும் கடைசி வாய்ப்பைப் பயன்படுத்தி, பாரியை அழிக்க வேண்டும் என நினைத்தார்.

``கண்ணுக்கு முன்னால் இருப்பது பறம்பின் சின்னஞ்சிறிய படை. நமது திட்டத்தால் அவர்களை மூன்றாகப் பிரிப்போம். வடதிசையில் யானைகளால் பாதுக்காக்கப்படும் கோட்டையைச் சுற்றி மாகனகன் தலைமையிலான படை நின்றுகொண்டிருக்கிறது. நானும் அரசகுல மாவீரர்களான சோழவேழனும் பொதியவெற்பனும் வலிமையான படையோடு நடுவில் இந்த இடத்திலேயே அணிவகுத்து நிற்கிறோம்.

சிறப்புக் கவசப்படை வீரர்களோடு மூவேந்தர்களும் தென்கோடியில் பாதுகாப்புடன் நில்லுங்கள். எதிரிகள் மூன்று கூறுகளாகப் பிரிந்தே ஆவார்கள். மூன்றாகப் பிரிந்தால் ஒரு கூட்டத்தில் முந்நூறு பேருக்குமேல் இருக்க மாட்டார்கள். அவர்கள் எவ்வளவு பெரிய மாவீரர்களாக இருந்தாலும் நமது வலிமையால் அவர்களை எளிதில் வீழ்த்த முடியும். அவர்களில்

முக்கியமானவர்கள், யானைப்படையைத் தாக்க வடக்குக் கோட்டையை நோக்கிப் போவார்கள். அப்போது நாங்கள் அவர்களைச் சுற்றிவளைத்துத் தாக்கி அழிப்போம்'' என்றான்.

மையூர்கிழாரின் திட்டம் குறித்து ஆழ்ந்து சிந்தித்தார் குலசேகர பாண்டியன். `ஆற்றில் இறங்கியவர்களை அழிக்கப் போன கருங்கைவாணன், இன்னும் வந்துசேரவில்லை. நாம் மிகவும் உள்ளே தள்ளிவந்துவிட்டோம். எஞ்சியிருக்கும் படைவீரர்களில் பெரும்பாலானோர் சேர வீரர்களே. இப்போது தாக்குதல் வேண்டாம் என முடிவெடுத்தால் உதியஞ்சேரல் உடனடியாகப் பிரிந்துவிடுவான்.

நமது நிலைமை மிகவும் வலிமை குன்றியதாக மாறிவிடும். நாம் தப்பிப்பதே கடினமாகிவிடும். எனவே, மையூர்கிழாரின் ஆலோசனையை ஏற்று நம்பிக்கையோடு போரிடுவதாக முடிவெடுப்போம். அப்போதுதான் படையை ஒன்றுபடுத்தி நிறுத்த முடியும். போரின் போக்கிற்கேற்ப அடுத்தகட்டத்தை நாம் தீர்மானித்துக் கொள்ளலாம். ஏனென்றால், இது வெங்கல்நாட்டின் எல்லைப்பகுதி. இதற்கு கீழ்ப்பகுதியில் இருப்பது ஊறல்காடு. அதுபற்றி மற்றவர்களுக்கு எதுவும் தெரியாது. யாராலும் அதற்குள் நுழைந்து வெளியேற முடியாது. நாம் எளிதில் தப்பிக்கலாம்' என மனதில் எண்ணியபடி மையூர்கிழாரின் திட்டத்துக்கு உடனடியாக அனுமதி கொடுத்தான் குலசேகரபாண்டியன்.

செங்கனச்சோழனுக்கு பெருங்குழப்பமாக இருந்தது. இவ்வளவு பேரழிவுக்குப் பிறகும் எப்படி எதிர் நின்று தாக்கும் முடிவை எடுக்கிறார் குலசேகரபாண்டியன் என்பது விளங்கவில்லை. `கோட்டைக்குள் இருக்கும் நீலனை வெட்டி வீசச் சொல்லிவிட்டு, நாம் பாதுகாப்பாக இந்த இடம்விட்டு நீங்கலாம்' என்று நினைத்தான். ஆனால், அதைச் சொல்லும் நிலையில் சூழல் இல்லை. அவன் தந்தை சோழவேழன், மையூர்கிழாரைவிட பெருஞ்சினத்தோடு பிரிக்கப்பட்ட படைக்குத் தலைமையேற்றுப் போய்க் கொண்டிருந்தார்.

இதே குழப்பம் உதியஞ்சேரலுக்கும் இருந்தது. ஆனால், `சமவெளியில் நன்றாக உள்ளே வந்துவிட்டதால் பாரி இவ்வளவு தொலைவு மலையைவிட்டு விலகிவர மாட்டான். எனவே, படையை மூன்றாகப் பிரிப்பது சிறந்த உத்தி' என நினைத்தான். அதேபோல `முந்நூறு யானைகளால் காக்கப்படும் கோட்டையைத் தாக்க, அவர்களால் கொண்டுவர முடிந்தது நான்கு யானைகள் மட்டுமே. மீதி யானைகள் வந்துசேர்வதற்குள் போர் முடிந்துவிடும்' எனச் சிந்தித்தான் உதியஞ்சேரல். முக்கியமாக, குலசேகரபாண்டியன் வேறு பக்கம் போகாமல் தங்களோடு இங்கே இருப்பதற்கு ஒப்புக் கொண்டதால், இந்தத் திட்டத்தின் மீது வேறு ஐயம் எதுவும் தோன்றவில்லை.

கருங்கைவாணன் வந்துசேரும் வரை மூவேந்தர்களின் கவசப்படையின் முன் தளபதியாக உசந்தன் நிற்பது என முடிவானது. ஏறக்குறைய தன் வீரர்களை முழுமுற்றாக இழந்து நிற்கும் செங்கனச்சோழன், சோழப்படைத் தளபதி உசந்தன் தனது அருகில் இருப்பதை ஆறுதலாக உணர்ந்தான்.

மையூர்கிழார் திட்டப்படி, போதுமான இடைவெளியோடு வேந்தர்படை மூன்றாகப் பிரிந்தது. பெரும் எண்ணிக்கையிலான வீரர்களோடு பொதியவெற்பன், சோழவேழன் ஆகியோரோடு நடுவில் இருக்கும் படையில் வீறுகொண்டு நின்றார் மையூர்கிழார்.

செவ்வரிமேட்டில் ஏறிய பறம்புப்படை, ஏதும் செய்யாமல் அப்படியே அங்கு நின்றது. முன்னேறுவதா அல்லது திரும்புவதா என்ற குழப்பத்தில் அவர்கள் இருப்பதுதான் இதற்குக் காரணம். அதேநேரம் அவர்கள் வராமல் நாம் முன்சென்று தாக்க வேண்டாம் என்ற முடிவோடு இருந்தார் மையூர்கிழார்.

மேட்டுநிலம் ஏறியவுடன் எதிரிகளை நோக்கி முன்னேறாமல் படையை அப்படியே நிறுத்தியிருந்தான் பாரி. எதிர்களின் படை மீண்டும் பிரிந்து விலகுவதைப் பார்த்தான்.

வடகோடியில் யானைப்படையால் சூழப்பட்ட கோட்டை இருந்தது. தென்கோடியில் கவசம் அணிந்த குதிரைவீரர்கள் நிறைந்த சிறுபடை இருந்தது. இவை இரண்டுக்கும் இடையே

தனக்கு நேரெதிராக வெகுதொலைவில் பெரும்படை ஒன்று அணிவகுத்து நின்றது. காலாட்படை வீரர்களால் நிறைந்துள்ள அந்தப் படையில் ஆங்காங்கே குதிரையில் சில வீரர்கள் நின்றனர். அவர்கள் அணிந்துள்ள கவசங்களின் தன்மையைவைத்து அவர்கள் தளபதிகளாகவோ, வேந்தர்களாகவோ இருக்க வாய்ப்புண்டு எனக் கருதினான் பாரி. இடதுபக்கம் ஆற்றைக் கடந்து நான்கு யானைகளோடு மேலேறிய தந்தமுத்தத்துக்காரர்களுக்கு, சிறிது கால இடைவெளி தேவைப்பட்டது. அதற்கான நேரத்தைக் கணித்த படி திட்டங்களை வகுத்துக் கொண்டிருந்தான் பாரி.



`பறம்புநிலம்விட்டு வெகுதொலைவு வந்துள்ளோம். நாகக்கரட்டின் மேல் நின்று குறிப்புணர்த்தியதுபோல இப்போது எதையும் செய்ய முடியாது. நீலனை மீட்க இதுவே இறுதித் தாக்குதல். பறம்பின் மிக வலிமையான வில்வீரர்களிடம் மிகக் குறைவான அம்புகளே உள்ளன. எதிரிகள் நம்மை மூன்றாகப் பிரித்து எளிதாகத் தாக்கி அழிக்க நினைக்கிறார்கள்' என எண்ணியபடி பாரி சொன்னான், ``கோட்டைக்குள் இருக்கும் நீலனை மீட்பதே முதற்பெரும் வேலை. தந்தமுத்தத்துக்காரர்களின் தாக்குதல் தொடங்கியவுடன் மின்னல் வேகத்தில் செயல்படவேண்டும். எல்லா வகைகளிலும் நமது வலிமையான தாக்குதல் அங்கு நிகழவேண்டும். எனவே, முடியனும் உதிரனும் திறன்மிக்க வீரர்களோடு வடதிசைக்குப் போங்கள்.

விண்டன் சிறிய அளவிலான குதிரைவீரர்களை அழைத்துக் கொண்டு தென்கோடியில் இருக்கும் கவசப்படையைத் தாக்கட்டும். காதத்தொலைவுக்கு அப்பால் ஆற்றின் கரையிலிருந்து வந்துகொண்டிருக்கும் காலம்பன், அவனோடு இணைந்துகொள்ளட்டும். அதுவரை விண்டன் நிதானமான தாக்குதலை நடத்தட்டும். நடுவில் இருக்கும் இந்தப் பெரும்படையை நான் எதிர்கொள்கிறேன்'' என்றான் பாரி.

அதிர்ந்தான் முடியன். ``நடுவில்தான் எதிரிகளின் வலிமைமிகுந்த படை அணிவகுத்து நிற்கிறது. அப்படியிருக்க, எண்ணிக்கையில் மிகமிகக் குறைந்த வீரர்களோடு பறம்புத்தலைவன் தனித்துப்போவது சரியல்ல'' என்றான். ``இப்போது முக்கியம், நீலனை மீட்பது. நீயும் உதிரனும் அந்தக் கோட்டையை நோக்கி முழு வேகத்தோடு முன்னேறுங்கள். நடுவில் நிற்கும் இந்தப் பெரும்படை உங்களை நோக்கி வராமல் நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றான். முடியன், உதிரன், விண்டன் மூவரும் இதை ஏற்றுகொள்ளவில்லை. ஆனால் உதிரனோ, விண்டனோ பாரியை மறுத்துப் பேச முடியாது. முடியன் மீண்டும் சொல்ல வாயெடுத்தபோது ``அங்கே பார்'' என்றான் பாரி. அவன் கை நீட்டிய வடதிசையை அனைவரும் பார்த்தனர்.

கொண்டுவந்த நான்கு யானைகளில் மூன்று யானைகளை முன்னங்கால்களை மண்டியிடவைத்து நிறுத்தினர்

தந்தமுத்தத்துக்காரர்கள். ஒரு யானை மிகவும் பின்னால் நின்றுகொண்டிருந்தது. ``வேலை தொடங்கிவிட்டது. உடனே அவ்விடம் போ'' என்றான் பாரி. அதன்பிறகு பேச இடம் ஏதுமில்லை. தங்களுக்கான வீரர்களோடு முடியனும் உதிரனும் அந்த இடம் விரைந்தனர்.



கோட்டையைச் சுற்றி முந்நூறு யானைகளை அணிவகுத்து நிறுத்தியிருக்கும் அல்லங்கீரன், தன் எதிரிகள் மூன்று யானைகளை மண்டியிடவைத்துக் கொண்டிருப்பதை உற்றுப்பார்த்தான். அவனது யானைப்படைக்குப் பின், பெருந்தளபதி மாகனகன் தனது சிறப்பு வீரர்களோடு நின்றிருந்தான். சிறுவயது முதல் யானைப்போரில் பயிற்சிகொண்டு இணையற்ற பெருவீரனாக வளர்ந்தவன் அல்லங்கீரன்.

யானைப்படையின் தளபதியாக நீண்டகாலம் இருந்த அவன், வயதானதால் அந்தப் பதவியிலிருந்து விலக்கப்பட்டான். ஆனாலும் யானைகளின் மீதிருந்த காதலால் கட்டுத்தறியின் காவலனாகப் பொறுப்பேற்று அந்தப் பணியைச் செய்துவந்தான். எதிர்பாராமல் தட்டியங்காட்டுப் போரின் கடைசி நிலையில் மூவேந்தர்களின் யானைப்படைக்கு அவன் தலைமை தாங்கும் நிலை உருவானது. வாழ்வு முழுவதும் யானைப்போரிலே கழித்த அல்லங்கீரன், எதிர்பாராமல் தனக்குக் கிடைத்த இந்த வாய்ப்பைச் சிறப்பாகப்

பயன்படுத்த வேண்டும் என நினைத்தான். ஆனால், ``போரிடவேண்டிய எதிரிகளோ மூன்று யானைகளை மட்டுமே கொண்டுவந்து மண்டியிடவைத்து ஏதோ சடங்கு நடத்திக் கொண்டு இருக்கிறார்கள். என்ன இதுவென்று புரிவில்லை'' என அலுத்துக் கொண்டான்.

தந்தமுத்தத்துக்காரர்கள், மூன்று யானைகளையும் முன்புறக் கால்களை மடித்து மண்டியிடவைத்தபடி, அவை ஒவ்வொன்றின் பின்புறக் குதத்திலும் வட்டவடிவ நீள்மூங்கிலைச் செருகினர். தாங்கள் குடுவையில் கொண்டுவந்த மூலிகைச் சேர்மானத்தை அதில் ஊற்றினர். அப்போது முன்புறம் நின்றிருந்தவர்கள் நெல்லிக்காய் அளவு உருண்டைகளை யானைகளின் அடிநாக்கில் வைத்தனர்.

தொலைவிலிருந்து அதைப் பார்த்த பாரி, தாக்குதலைத் தொடங்கும் நேரத்தைக் கணித்து உத்தரவிட்டான். குரல் கேட்ட கணம் விண்டன் குதிரைவீரர்களோடு தென்கோடியில் இருக்கும் கவசவீரர்களைத் தாக்க விரைந்தான். இருபுறமும் வீரர்கள் பிரிந்தவுடன், இருக்கும் சின்னஞ்சிறு படையைக் கொண்டு முன்னே நிற்கும் வேந்தர்படையை நோக்கி முன்னேறத் தொடங்கினான் பாரி.

தனது திட்டப்படி எதிரிகள் மூன்றாய்ப் பிரிந்துவிட்டனர் என்பதைப் பார்த்த கணம், வெற்றிக் கூச்சலிட்டார் மையூர்கிழார். அது வீரர்களுக்கும் பெருந்தினவைக் கொடுத்தது. வெகுதொலைவிலிருந்து சின்னஞ்சிறு கூட்டம் முன்நோக்கி ஓடிவந்துகொண்டிருந்தது. வருகிறவர்களை உருத்தெரியாமல் அழிக்கவேண்டும் எனக் காத்திருந்தனர் பொதிய வெற்பனும் சோழவேழனும்.



விண்டன், தென்கோடியை நோக்கி குதிரையை விரட்டிக் கொண்டிருந்தான். முடியனும் உதிரனும் தந்தமுத்தத்துக்காரர்களை வந்தடைந்தனர். கணநேரம்கூட காலம் தாழ்த்தாமல் உள்நுழையவேண்டிய மிகப்பெரிய பொறுப்பை, தங்களிடம் பாரி கொடுத்துள்ளான் என்னும் எண்ணமே சற்றே பதற்றத்தைக் கொடுத்தது. மிகமிகக் குறைந்த வீரர்களுடன் எதிரிகளின் பெரும்படையைத் தாக்க பாரி முன்னேறிக் கொண்டிருப்பது பதற்றத்தை மேலும் அதிகமாக்கியது. நீலனை மீட்டவுடன் விரைந்துபோய் பாரியோடு இணைய வேண்டும் எனத் துடிப்பேறி இருந்தான் முடியன்.

மூலிகைச்சாறு முழுவதும் ஊற்றப்பட்டவுடன் மூங்கிலை உருவி எடுத்தனர். மண்டியிட்ட முன்னங்கால்கள் மேலெழுந்தன. ஒவ்வொரு யானைக்கு அருகிலும் அவை ஒவ்வொன்றின் காலின் பெருநகக்கணுவை மிதித்தபடி வாய்க்குள் கையை விட்டு நாக்கைப் பிடித்துக் கொண்டு சரியான பொழுதுக்காகக் காத்திருந்தனர், அந்தந்த யானையின் பாகன்கள். அச்சமென்பது துளிகூட இல்லாதவன் மட்டுமே செய்யக்கூடிய வேலை இது.

யானைக்கு மதம் உண்டானால் காடு தாங்காது என்பது, பொதுவழக்கு. ஆனால், குட்டமதம், சரளமதம், உள்மதம் என்று மூன்று வகை மதங்கள் உண்டு. இந்த மூன்று வகை மதங்களையும் பிற யானையைக் கொண்டும் பாகன்களைக் கொண்டும் மாற்று நஞ்சைச் செலுத்தியும் அடக்கலாம். ஆனால், இந்த மூன்றுக்கும் அப்பால் நான்காம் வகை மதம் ஒன்று உண்டு.

அதன் பெயர், எரிமதம். அந்த வகை மதம் கண்டால், அந்த யானையை எதிர்கொள்ள எந்த உயிராலும் முடியாது. தனது நிழலையே கொல்ல விரும்பும் மதம் அதுதான். மதம்பிடித்த மற்ற யானைகள் பிளிறினால், அந்தக் காட்டில் மனிதன் எங்கு இருந்தாலும் பிளிறல் கேட்ட கணத்தில் கைகால்கள் தானே பின்னிக் கொள்ள கீழே விழுவான். பிளிறலின் அதிர்வு மனிதனின் உள்ளியக்கத்தை நிலைகுலையச்செய்துவிடும். ஆனால், எரிமதம்

கண்ட யானையின் பிளிறலைக் கேட்டால் யானையே கால்கள் பின்னி கீழே விழும்.

தந்தமுத்தத்துக்காரர்களால் யானைக்கு நான்கு வகையான மதத்தையும் உருவாக்க முடியும். மதமே யானையின் முழு ஆற்றலையும் வெளிப்படுத்தும். மதமே யானையின் மிகச்சிறந்த குணம். அந்தக் குணத்தை யானைக்கு வரவழைப்பது தந்தமுத்தத்துக்காரர்களுக்கு மட்டுமே தெரிந்த செயல்.

யானைகளின் நாக்கைப் இறுகப் பிடித்திருந்த ஒவ்வொருவனும், அது பெருகும் வேகத்தைக் கண்டு உள்ளுக்குள் நடுங்கத் தொடங்கினர். முதலில் எரிமதம்கொண்ட யானையின் நாக்கு பெருகும். பிறகு அதன் முகம், கன்னம், துதிக்கை ஆகிய மூன்றும் பெருகும். நாக்கு பெருகி முடித்து முகம் பெருகத் தொடங்கும் முன், அதன் தன்மை உணர்ந்து அனைவரும் விலக வேண்டும்.

நாக்கு பெருக்கத் தொடங்கியவுடன் அதிலிருந்து கையையும் காலின் பெருநகக் கணுவிலிருந்து தமது காலையும் ஒரே நேரத்தில் விலக்கிக் கொண்டு ஓசை எழுப்பியபடி அந்த இடம்விட்டு மூன்று பாகன்களும் ஓடத் தொடங்கினர்.

பாகன்கள் விட்டுவிலகிய கணம், மூன்று யானைகளும் தங்களுக்கு எதிரில் திரண்டிருக்கும் யானைக்கூட்டத்தை நோக்கி

ஓடத் தொடங்கின. எரிமதத்துக்கான சேர்மானம், உடல் முழுக்கப் பரவிக் கொண்டிருந்தது.



மிகச்சில வீரர்களை மட்டுமே கொண்டிருந்த பாரி, எதிரே நிற்கும் வேந்தர்படையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். எவ்வளவு முயன்றும் போரைத் தவிர்க்க முடியவில்லை. கடந்த ஆறு நாளாக எவ்வளவு முயன்றும் போரை முடிக்க முடியவில்லை. இன்றோடு எல்லாம் முடிவுக்கு வரவேண்டும். இனி பச்சைமலைத் தொடரை நோக்கி வேந்தர்களின் வேற்கம்புகள் ஒருபோதும் நீளக் கூடாது என்ற முடிவோடு முன்னோக்கிச் சீறிக் கொண்டிருந்தான் பாரி.

எரிமதம் கண்ட யானைகள், தமது காதுகள், முகம், வால் ஆகிய நான்கையும் நிலைகொள்ளாமல் ஆட்டின. பிளிறல் தொடங்கும் முன்பு நடக்கும் செயல் இது. தங்களை நோக்கி ஓடிவந்துகொண்டிருக்கும் மூன்று யானைகளின் மீதும் பாகன்கள் இல்லை. ஆயுதங்கள் ஏந்திய வீரர்களோ, முகப்படாமோ கவசமோ இல்லாமல் வந்துகொண்டிருக்கின்றன. ஆனால், `தன்மையும் வேகமும் மிகவும் மாறுபட்டதாக இருக்கின்றனவே!' என அல்லங்கீரனுக்குத் தோன்றியது. எனினும், வெறும் மூன்று யானைகளால் என்ன செய்துவிட முடியும் என்ற எண்ணத்துடன் அவற்றின் வருகையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான்.

அதே மனநிலையோடுதான் மையூர்கிழார் நின்றுகொண்டிருந்தார். மூன்றாகப் பிரிந்த பறம்புப்படையின் மிகச்சிறிய பகுதி மட்டுமே தங்களை நோக்கி வருகிறது. `வரும் படையில் குதிரைகளும் இல்லை; வில்வீரர்களும் இருப்பதுபோல் தெரியவில்லை. பிறகு, எந்த நம்பிக்கையில் அவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள்' என்ற சிந்தனையில் நின்றுகொண்டிருந்தார்.

அதுவரை தந்தத்தின் மேலே துதிக்கையை முறுக்கியபடி ஓடிவந்துகொண்டிருந்த யானைகள், இப்போது துதிக்கையை இருபக்கமும் முழுமையாக வீசத் தொடங்கின. தலையை மறுத்து ஆட்டி, அதைவிட வேகமாக காதுகளை ஆட்டத் தொடங்கின. யானையை, மனிதனால் விரைவாக நடக்கவைக்க மட்டுமே முடியும்; ஒருபோதும் ஓடவைக்க முடியாது. ஏனென்றால், ஓடும் யானையின் மீது தூசுகூட நிற்காது; அப்புறம் மனிதனால் எப்படி அமர முடியும்? யானை ஓடும் நிலத்தில் புற்கள் மீது புள்ளினம் அமராது. யானை ஓடி மனிதன் பார்ப்பது மிகமிக அரிது. மனிதன் பார்த்ததெல்லாம் பாகன்கள் யானையை விரைவாக நடத்திச்செல்வதை மட்டும்தான். போர்க்களத்திலும் அந்தக் காட்சிதான் தென்படும்.

ஆனால், இப்போது அவர்களின் கண்களுக்கு எதிரில் வந்துகொண்டிருக்கும் யானைகள் விரைவாக நடந்துவரவில்லை. நிலம் அதிர வந்துகொண்டிருக்கின்றன. பெரும்பரப்பில்

யானைகளின் ஓட்டத்தை முதன்முறையாகப் பார்க்கின்றனர். அவற்றின் முதுகெலும்பு வளைவுகள் எம்பி இறங்கின. பார்த்துக் கொண்டிருந்த அல்லங்கீரனுக்கும் அவர்களின் யானைகளின் மீது இருக்கும் பாகன்களுக்கும் கண்களில் நடுக்கம் துளிர்க்கத் தொடங்கியது.

பாரியைத் தொடர்ந்து சிறுபடை வந்துகொண்டிருந்தாலும் அவனைச் சுற்றி ஓடிவந்த ஐவர், பாரிக்கான ஆயுதங்களோடு ஓடிவந்தனர். பாரியால் எதிரில் நிற்கும் மொத்தப் படையையும் அழித்தொழிக்க முடியும் என பறம்புவீரன் ஒவ்வொருவனுக்கும் தெரியும். ஆனால், எந்த ஆயுதத்தால் எப்படிப்பட்ட தாக்குதலை நடத்தப்போகிறான் என்பதைக் காண, உடன் ஓடிவரும் வீரர்கள் ஆர்வத்தோடு இருந்தனர்.

ஒருவன், மூவிலைவேலினைப் பெருங்கட்டாகத் தூக்கி வந்துகொண்டிருந்தான். இன்னொருவன், கண்டரக்கோடரிகளை ஏந்திக் கொண்டு வந்தான். வாள் வகைகளையும் வில்அம்பு வகைகளையும் இருவர் எடுத்து வந்தனர். இவர்கள் எல்லாம் ஒன்றுக்கு மேற்பட்ட ஆயுதங்களை எடுத்துவந்தனர். ஆனால், இவர்கள் நால்வரைவிட பின்தங்கி ஐந்தாவதாக ஒருவன் வந்துகொண்டி ருந்தான். காரணம், அவன் தூக்கிவந்த ஆயுதம். அதன் பெயர் எறுழ்தடி.

அது தடிவகையைச் சேர்ந்த ஆயுதம். அதன் தலையில் இரும்புக் களிமண்ணை உருக்கி உருளையாய் வார்த்திருப்பர். அந்த உருளையின் நடுப்பகுதியில் முளைவிடும் விதையளவு இரும்பினால் ஆன மழு எம்பி இருக்கும். தடிவகை ஆயுதமெல்லாம் தாக்கி அழிக்கும் தன்மையைக் கொண்டவை. ஆனால் எறுழ்தடி, தாக்கும் ஆயுதமன்று; சிதைக்கும் ஆயுதம். பாறையோ, பெருமரமோ, எதுவாக இருந்தாலும் எறுழ்தடியால் ஓரடி அடித்தால் சிதைந்து நொறுங்கும். இணையற்ற வலிமைகொண்ட மாவீரர்களால் மட்டுமே கைக் கொள்ள முடிகிற ஆயுதம் அது.

வேந்தரின் படையை நெருங்கின யானைகள். எரிமதம் கண்ணைக்கட்டியது. கருவிழியைச் சுற்றியுள்ள வெண்மை மறைந்து தேன்நிறம் எய்தியது. தேன்நிறம் எரியத் தொடங்கியது. உடலுக்குள் ஏதேதோ நிகழ்ந்தன. கும்பத்தின் உச்சியில் இருக்கும் மயிர்க்கற்றைகள் தீக் கொழுந்துபோல் மேலெழுந்தன. பருத்து வீங்கிய துதிக்கையைச் சுழற்றியபடி தலை உயர்த்திப் பிளிறத் தொடங்கின. பத்து யானையின் பிளிறல் ஒரு மத யானையின் பிளிறலுக்குச் சமமல்ல. பத்து மதயானையின் பிளிறல் ஒரு எரிமத யானையின் பிளிறலுக்குச் சமமல்ல. காற்றெங்கும் பறக்கும் பறவைகள் கிடுகிடுத்தபோது ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக மூன்று யானைகள் விடாது பிளிறின. நேற்றிரவு இறங்கிய இடிகளின் மொத்த ஓசையும் ஒன்றாய் இறங்கிக்

கொண்டிருந்தது. எரிமதப் பிளிறலின் பேரோசை, வேந்தர்படை யானைகளின் உள்நரம்புகளை அதிரச்செய்தது.

படைக்கு அருகில் வந்ததும், ஆயுதத்தை வாங்க பின்னால் வந்துகொண்டிருப்பவனை நோக்கி கையை நீட்டினான் பாரி. ஒருவன் மூவிலை வேலையும் இன்னொருவன் கண்டரக்கோடரியையும் தர முன்வந்தனர். அவற்றை மறுத்து, இறுதியாக வந்துகொண்டிருந்தவனிடம் இருந்து எறுழ்தடியை வாங்கினான் பாரி.

வேந்தர்படையின் நடுவில் நின்றிருந்த மையூர்கிழார், `காததூரத்துக்கு அப்பால் இருக்கும் யானைப்படையின் பிளிறல் ஓசை, இதற்கு முன் கேட்டிராத அளவு இருக்கிறதே!' என்ற நடுக்கத்தோடு பார்த்துவிட்டுத் திரும்பினான். திரும்பிய கனம் யானையின் தும்பிக்கையால் அடித்து வீசப்படும் மனிதர்களைப்போல, தனது படையின் முன்கள வீரர்கள் நாலா புறமும் வீசப்பட்டனர்.

எரிமத யானைகள் அருகே வரும்போது, வேந்தர்படை யானைகள்மேல் இருந்த பாகன்களையும் வீரர்களையும் வீசி அடித்துவிட்டு வெறிகொண்டு ஓடின. எந்த ஓர் உயிரினமும் தன் உயிர்காக்கும் செயலை உச்ச ஆற்றலோடுதான் நடத்தும். சிதறிய படையில் ஒன்றையொன்று சரித்துக் கொண்டு மேலேறியபடி ஓடின யானைகள்.

யானைகளே சரிந்து விழும்போது மனிதர்களால் என்ன செய்ய முடியும்? அல்லங்கீரன் எக்கணம் தூக்கிவீசப்பட்டான் என்பது தெரியவில்லை. மிதி பட்டு நசுங்கியபோது அவனது விழியொன்று உருண்டோடியது.

கட்டுத்தறிக்குப் பழகிய யானைகள் காட்டுயானைகளின் முன் நிற்காது. இவை, காட்டுயானைகள் மட்டுமல்ல; எரிமதம்கொண்ட யானைகள். இவற்றின் பிளிறல்கள் மற்ற யானைகளின் நினைவுப்புலனில் இருக்கும் ஆதி அச்சத்தை விடாது கிளறுபவை. அந்த ஓசையை கணநேரம்கூட அவற்றால் கேட்க முடியாது. ஆனால், எரிமத யானைகளோ விடாது பிளிறக்கூடியவை. ஆயிரம் வீரமுண்டா வாத்தியங்களை ஒன்றாய் இசைத்தாலும் இவற்றின் பிளிறல் ஓசைக்கு முன்னால் அவற்றின் ஓசை சிறுத்து ஒடுங்கும்.

வேந்தர்படையைத் தாக்கி முன்னேறினான் பாரி. உன்மத்தம் ஏறிய யானையின் தாக்குதலைவிட வலிமையானதாக இருந்தது அது. எறுழ்தடியால் தாக்கப்பட்டவர்கள் யானை மிதித்தால் எப்படி உருத்தெரியாமல் ஆவார்களோ, அப்படி ஆனார்கள். அடிவாங்கிய வேகத்தில் தூக்கி வீசப்பட்டவனைத் தாண்டி அவனது தசைகள் போய் விழுந்தன. அதைப் பார்த்த மற்ற வீரர்கள் மிரண்டு ஓடத் தொடங்கினர்.

பிளிறலோடு முன்னேறி வந்த எரிமத யானைகளின் வேகம் கண்டு மற்ற யானைகளால் ஓட முடியாது. விரட்டிவந்த வேகத்தில்

முன்னால் சென்ற யானை ஒன்றின் பின்கால் சப்பையில் அடித்தது. அடிவாங்கிய கணமே கமுக்கட்டை உடைந்து கீழே விழுந்தது அந்த யானை. விழுந்த யானையின் காலைப் பிடித்து தூக்கிச் சுழற்றியது எரிமத யானை ஒன்று.

கண்ணுக்கு அப்பால் தூக்கிவீசப்படும் வீரர்களைப் பார்த்து பொதியவெற்பனும் சோழவேழனும் நடுங்கிப்போயினர். என்ன நடக்கிறது என்பதை அறிய, மையூர்கிழார் சற்றே முன்னேறி வந்தார். சிதையும் வீரர்களுக்கு நம்பிக்கையூட்டும் சொற்களை உச்சரித்தபடி வேகமாக முன்னேறி வந்தவர், அருகில் நெருங்கியதும் எதிர்ப்பட்ட காட்சியைக் கண்டு உறைந்து நின்றார். எறுழ்தடியைச் சுழற்றிக் கொண்டு முன்னேறியவன் பறம்பின் தலைவன் பாரி.

அவனைப் பார்த்த கணம், நினைவின் புலனுக்குள் மூழ்கிக்கிடந்த ஆதி அச்சம் பீறிட்டு மேலே வந்தது. உள்நரம்புகள் அதிரத் தொடங்கின. அவனது கைகளால், நடுக்கத்தை மீறி ஆயுதத்தை இறுகப்பற்ற முடியவில்லை. அவனது உள்ளியக்கம் நிலைகுலைந்துகொண்டிருந்தது.

தட்டியங்காட்டில் எத்தனையோ முறை பறம்புத்தளபதிகளிடம் தப்பிப்பிழைத்தவன், பாரியின் எதிரே நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்த வேகத்தில் நான்கு எட்டு முன்னோக்கிப்

பாய்ந்தான் பாரி. பாயும் வேகத்தில் எறுழ்தடி காற்றைக் கிழித்து முன்னகர்ந்துகொண்டிருந்தது.

ஆட்டுக்குட்டியைப்போல யானை ஒன்று தூக்கி வீசப்படுவதை, தென்கோடியில் நின்றிருந்த வேந்தர்கள் மூவரும் பார்த்தனர். அந்த ஒரு காட்சி, அவர்களுக்குச் சொல்லவேண்டிய எல்லாவற்றையும் சொல்லியது. கோட்டையைச் சுற்றி நிறுத்தப்பட்ட முந்நூறு யானைகளும் சிதைக்கப்பட்ட புற்றிலிருந்து வெளியேறும் கறையான்களைப்போல ஓடிக் கொண்டிருந்தன.

குலசேகரபாண்டியன், தனது இரண்டாம் திட்டத்துக்கு ஆயத்தமாகத் தொடங்கினான். `ஊறல்காட்டை நோக்கி வந்துவிடு' என தன் மகனுக்குச் செய்தியைக் கூற மூன்று வீரர்களை மையப்படையை நோக்கி அனுப்பினான்.

வடகோடியில் நின்றிருந்த வேந்தர்படையைத் தாக்க அனுப்பப்பட்ட விண்டன், கடும்தாக்குதலை நடத்தினான். ஆனால், முன்னின்ற கவசப்படை வீரர்கள் மீது தனது சிறுபடையால் பெரும்பாதிப்பை உருவாக்க முடியவில்லை. ஆனாலும் காலம்பனின் வருகையைக் கணித்து அதற்கேற்ப தாக்குதலைத் தொடுத்துக் கொண்டிருந்தான்.

எரிமத யானையின் தந்தத்துக்கு வேந்தர்படை யானை எதுவும் சிக்கவில்லை. ஆனால், பாரியின் எறுழ்தடிக்குச் சிக்கினார்

மையூர்கிழார். நடுங்கும் கைகளோடு பாரியின் மீது வாள்கொண்டு தாக்குதல் தொடுக்க அவன் முற்பட்டபோது, எரிமத யானையின் காலில் கட்டெறும்பின் தலை நசுங்குவதைப்போல் எறுழ்தடியால் நசுங்கியது மையூர்கிழாரின் தலை.

குலசேகரபாண்டியன் பின்புறமாக நகர்ந்துகொண்டிருப்பதைப் பார்த்தான் செங்கனச்சோழன். உசந்தன் தலைமையிலான நமது கவசப்படை வலிமையாக நின்று போரிட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால், கருங்கைவாணன் இன்னும் வந்துசேரவில்லை. சூழலின் மொத்தமும் அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது.

யானைப்படை சிதைந்த கணமே நமது திட்டம் முழுமையும் தோல்வியடைந்துவிட்டது. தான் தப்பிப்பது மட்டுமே இப்போதைய தேவை என உணர்ந்தான் செங்கனச்சோழன். ஆனால், அவனைச் சுற்றி நின்று கொண்டிருந்த சோழவீரர்களோ மிகமிகக் குறைவானவர்களே. அவர்களின் உதவியால் பாதுகாப்பாக அந்த இடத்தைவிட்டு வெளியேற முடியாது. அதுவும் அவனால் குதிரையில் உட்கார்ந்த நிலையில் விரைந்து செல்ல முடியாது. எழுவனாற்றில் ஏற்பட்ட தாக்குதலால் அந்நிலையை அடைந்தான். போதிய வீரர்கள் சூழவிருந்து தப்பித்தால் மட்டுமே உயிர்பிழைக்க முடியும் என்ற நிலையில் தனது குதிரையை உதியஞ்சேரலை நோக்கிச் செலுத்தினான்.

யானைப்படை சிதைந்ததைப்போல நடுவில் நின்றிருந்த பெரும்படையும் சிதையத் தொடங்கியது. மையூர்கிழாரின் தலையை நசுக்கித் தூக்கி வீசினான் பாரி. அத்துடன் அந்தப் பெரும்படை, ஈரக்குலை நடுங்க உயிர்பிழைக்கும் ஓட்டத்தைத் தொடங்கியது. பாரியைச் சுற்றி நின்றவர்கள் தொலைவில் நிற்கும் சோழவேழனையும் பொதியவெற்பனையும் அடையாளம்காட்டினர்.

யானைப்படை சிதறிய வேகத்தில் கோட்டை அருகில் இருந்த வீரர்களை நோக்கி முடியனும் உதிரனும் பாய்ந்து முன்னேறினர். இந்தப் போரின் மிக முக்கியமான பணியே இனிதான் இருக்கிறது. சிறு கவனப்பிசகோ, வேகக்குறைவோ இருந்துவிடக் கூடாது. துல்லியமான தாக்குதலுக்கு ஆயத்தநிலையில் குதிரையில் விரைந்து கொண்டிருந்தனர் முடியனும் உதிரனும்.

உதியஞ்சேரலிடம் கைகள் குவித்துக் கேட்டான் செங்கனச்சோழன், ``என்னை, இந்த இடம்விட்டு பாதுகாப்பாய் வெளியேற்று.''

மூன்றாம் நிலையில் நின்ற வேந்தர்படையில் அதிகம் இருப்பவர்கள் சேரவீரர்களே. அதனால்தான் உதியஞ்சேரலிடம் உதவி கேட்டான். ஆனால், உதவியாகக் கேட்காமல், ``இதை நீ செய்வதற்கு கைம்மாறாய் நான் உனக்கு ஒன்று தருகிறேன்'' என்றான்.

``போர்க்களத்தின் கடைசிக் கணத்தில் உயிர்பிழைக்கத் தப்பிச்செல்வது பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கும் நிலையில், நீங்கள் எனக்கு என்ன தந்துவிட முடியும்?'' எனக் கேட்டான் உதியஞ்சேரல்.

தனக்கு அருகில் நின்ற வேளக்காரப்படையைச் சேர்ந்த வீரனை நோக்கி செங்கனச்சோழன் கையை நீட்ட, அவனோ பட்டுத்துணியால் சுற்றப்பட்ட ஓலைச்சுவடியின் கட்டொன்றை எடுத்துக் கொடுத்தான். அதை, உதியஞ்சேரலை நோக்கி நீட்டினான் செங்கனச்சோழன்.

`என்ன இது?' என்று உதியஞ்சேரல் கேட்கும்முன் செங்கனச்சோழன் சொன்னான், ``பச்சைமலையில் உள்ள பதினான்கு வேளிர்குலங்களும், தங்களின் விலைமதிப்புமிக்கச் செல்வங்களை காலம்காலமாக பாழி நகரில்தான் சேமித்துவைக்கின்றன. இன்னும் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் அந்த இடமும் அதற்கான குறிப்புகளும் மாறப்போவதில்லை.

அந்த இடம் எங்கு இருக்கிறது என்ற குறிப்பை, காடர்களைக் கொண்டு அறிந்தேன். மிகத் துல்லியமான இந்தக் குறிப்பின் அடிப்படையில் தான் நான் எழுவனாற்றின் மேல்முனை வரை சென்றுவிட்டேன். ஆனால், அதன் பிறகு பாரியால் தாக்கப்பட்டு எனது படை அழிந்தது. காடர்கள் உருவாக்கிய அந்தக் குறிப்பு இந்த ஏட்டில் இருக்கிறது. இந்தப் போரில் வெற்றிபெற்றால், இதை

பாண்டியனுக்கு வழங்கலாம் என்றிருந்தேன். ஆனால், போருக்குத் தலைமைதாங்கிய குலசேகரபாண்டியனோ நம்மிடம் சொல்லாமலேயே இந்தக் களம்விட்டு அகன்றுகொண்டிருக்கிறார். இனி, இது சேரர்களுக்குச் சொந்தம். என்னிடம் இன்னொரு படி இருக்கிறது. என்றைக்கானாலும் அந்தச் செல்வத்தை சேரனோ, சோழனோதான் கைப்பற்ற வேண்டும்'' என்று சொல்லி அதைக் கொடுத்தான்.

உதியஞ்சேரலுக்கு மெய் சிலிர்த்தது. ``இது முன்னமே கிடைத்திருந்தால் இந்தப் போர்க்களத்துக்கே நான் வந்திருக்க மாட்டேனே!'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போது காலம்பனின் பெருங்குரல் கேட்டது. கருங்கைவாணன் மாண்டுவிட்டான் எனத் தெரிந்த கணமே வேந்தர்களின் கவசப்படை நிலைகுலையத் தொடங்கியது. அந்தக் கணத்தில் விண்டன் எறிந்த ஈட்டி உசந்தனைக் குத்தித்தூக்கியது.

படை சிதறத் தொடங்கினாலும் சோழவேழன் தப்பி வெளியேற முயலவில்லை. அவன் பாரியை எதிர்கொள்ளவே முனைந்தான். பொதியவெற்பனும் அதே மனநிலையோடு பாய்ந்து முன்னேறினான். நாக்கைத் துருத்தி பல்லைக் கடித்தபடி விரைந்து வந்தான் சோழவேழன். ஓங்கிய எறுழ்தடியை நிறுத்திவிட்டு கண்டராக்கோடரியை வாங்கினான் பாரி.

யானைப்படையை பறம்பினர் முழுமையாகச் சிதறச்செய்துவிட்டனர் எனத் தெரிந்ததும், தளபதி மாகனகன் தனக்கு வழங்கப்பட்ட இரண்டாம் திட்டத்தை நிறைவேற்றும் முடிவுக்கு வந்தான். கோட்டைக்குள் இருக்கும் நீலனின் தலையை வெட்டி வீசிவிட்டுத் தப்பி வெளியேறுவதுதான் அந்தத் திட்டம்.

மாகனகன் தனது குதிரையைத் திருப்பி உட்கோட்டைக்குள் நுழைய நினைக்கும்போது உதிரனின் விற்படையினரின் அம்புகள் சீறிப்பாய்ந்தன. கணநேரத்துக்குள் கணக்கில்லாத அம்புகள் முழுவிசையோடு இறங்கின. மாகனகன் உள்ளே நுழைந்து நீலனை வெட்டிவிட்டுச் செல்வோமா அல்லது இப்போதே தப்பிச் செல்வோமா என ஒரு கணம் சிந்தித்தான். அப்போது முடியன் மின்னல் வேகத்தில் கோட்டையை நோக்கிப் பாய்ந்துகொண்டிருந்தான்.

தமக்கு முன்னால் மொத்தப் படையையும் அழித்துக் கொண்டிருக்கும் பாரியை வீழ்த்தும் வெறியோடு சோழவேழனும் பொதியவெற்பனும் சூழந்து தாக்க முற்பட்டபோது, அவர்களின் தாக்குதலைத் தடுக்க எந்தவித முயற்சியும் பாரி செய்யவில்லை. அந்தத் தாக்குதல் சிறுபிள்ளைத் தனமாகத் தோன்றியது. சோழவேழன் வீசிவந்த வாளை கண்டராக்கோடரியால் தட்டிவிட்ட வேகத்தில் அவன் கழுத்தில் கொடுத்து வாங்கினான் கோடரியை.

கண்டராக்கோடரியின் கூர்மை, மலைவேம்பின் முண்டையே வெட்டி இறங்கக்கூடியது.

அறுத்து இழுக்கப்பட்ட கோடரியின் வேகத்தில் சோழவேழனின் தலை கண்ணிமைக்கும் நேரத்தில் சரிந்தது. தனது குதிரைக்கு முன்னால் உருண்டு வந்த சோழவேழனின் தலையைப் பார்த்து மிரண்ட பொதியவெற்பன், தான் என்ன செய்யலாம் எனச் சிந்தித்தக் கணத்தில் அவனது நெஞ்சுக்குழிக்குள் இறங்கியது கண்டராக்கோடரியின் கைப்பிடி முனை.

வெளியில் நின்று போரிட்டுக் கொண்டிருக்கும் ஒரு வீரன்கூட கோட்டைக்குள் நுழையக் கூடாது என்பதில் மிகத் தீவிரமாக இருந்தான் உதிரன். அவன் வீசிய அம்புகள் கோட்டைவாயிலின் அருகே ஒருவரையும் நிலைகொள்ளச் செய்யவில்லை. அதையும் மீறி மாகனகன் உள்ளே நுழைய முயன்றான்.

குதிரையில் பாய்ந்து வந்துகொண்டிருந்த முடியனின் கண்கள், கோட்டை வாசலில்தான் நிலைகுத்தி இருந்தன. மாகனகன் கோட்டைக்குள் நுழையும் கணத்தில் அவனது கவசத்தைத் துளைத்துக் கொண்டு உள்நுழைந்தது முடியனின் ஈட்டி. வேந்தர்களின் கடைசி முயற்சியை பறம்பின் குடிமுடியன் குத்திச்சாய்த்தான்.

காலம்பன் பெரும் உறுமலோடு வந்து கவசப்படையைத் தாக்க முயலும்போது வேந்தர்கள் மூவரும் வெளியேறி இருந்தனர்.

முடியன் முழுவேகத்தோடு உள்ளே நுழையும் வரை அவனுக்குப் பின்னால் இருந்த உதிரனின் படை, இடைவிடாது அம்புகளைப் பாய்ச்சியபடி இருந்தது. நடுவில் நின்ற படை முற்றிலுமாகச் சிதறி ஓடிக் கொண்டிருந்தபோது, முடியன் கோட்டைக்குள் நுழைந்தான்.

நுழைந்த கணம் அவன் எழுப்பிய சீழ்க்கை ஓசை, எங்கும் எதிரொலித்தது.

பாரியும் காலம்பனும் விண்டனும் தங்களை எதிர்த்து நிற்கும் வீரர்கள் யாரும் இல்லாத களத்திலிருந்து சீழ்க்கை ஓசை கேட்ட கோட்டையை நோக்கி ஓடிவரத் தொடங்கினர்.

இந்த ஓசைக்காகக் காத்திருந்த தந்தமுத்தத்துக் காரர்கள் தனியே நிறுத்தியிருந்த நான்காம் யானையை, கோட்டை நோக்கி அழைத்துச் சென்றனர்.

பகலின் பதினைந்தாம் நாழிகை. கதிரவனின் வெப்பக்கதிர் நிலமெங்கும் ஒளிவீசிக் கொண்டிருந்தது. காணும் இடமெல்லாம் எருக்களை இலைகளும் நெருஞ்சி இலைகளும் குருதியை ஏந்தியிருந்தன.

எங்கும் மனிதக்கதறல் எதிரொலித்தது. குத்திச் சாய்க்கப்பட்ட குதிரைகளும் யானைகளும் ஈனக்குரலில் ஒலியெழுப்பின.

எரிமதம்கொண்ட யானையாலும் எறுழ்தடி கொண்ட பாரியாலும் நடுங்கிய நிலம், உச்சிப்பொழுதில் நிலைகொள்ளத் தொடங்கியது.

நான்காம் யானை, கோட்டையைவிட்டு வெளியேறத் தொடங்கியது. அதன் கழுத்தில் தந்தமுத்தத்துக்காரன் உட்கார்ந்திருந்தான். முதுகில் இலவம்பஞ்சால் சிறு நார்கொண்டு பின்னப்பட்ட விரிமெத்தையின்மேல் நீலன் அமர்ந்திருந்தான். அவன் பின்னே, முதுகின் மேல்நிலையில் பாரி அமர்ந்திருந்தான்.

நீலனின் இடதுகாலின் காயம் மிக வலிமையானதால், முழுப்பிடிமானமும் கிடைக்கவில்லை. யானையின் அசைவுக்கு ஏற்ப பின்னால் அமர்ந்திருந்த பாரியின் இடதுதோளில் சாய்ந்தபடி இருந்தான் நீலன்.

யானையைத் தொடர்ந்து முடியன், காலம்பன், உதிரன், விண்டன் ஆகியோரும் பறம்புவீரர்களும் ஏந்திய ஆயுதங்களோடு வந்துகொண்டிருந்தனர்.

தகிப்பேறிய கண்களும் சீற்றம் குறையாத முகமுமாக இருந்த பாரிக்கு, நீலன் தோளில் சாய்ந்த கணத்திலிருந்து வெப்பம் குறையத் தொடங்கியது. செந்தேன் நிறத்தில் எரிந்துகொண்டிருந்த

அவனது கண்கள் வெண்மைகொள்ளத் தொடங்கின. எரிமதம் இறங்கத் தொடங்கியது.

அவர்களுக்கு முன்னே கிழக்கும் மேற்குமாக நீண்டுகிடந்த பச்சைமலைத் தொடர், தன் பிள்ளைகளுக்காகக் கைவிரித்துக் காத்திருந்தது. நடந்துகொண்டிருந்த யானையின் தந்தத்தின் மீது தும்பி ஒன்று வந்து அமர முயன்றது.

குனிந்து அதைப் பார்க்க முயன்ற பாரி, பறவை ஒன்றின் மாறுபட்ட ஓசையைக் கேட்டு தலைநிமிர்ந்து பார்த்தான்.

அவனது தலைக்கு மேலே காரமலையை நோக்கி ஓசையெழுப்பியபடி பறந்து கொண்டிருந்தது கருங்கிளி.

# பாரி – 111

இன்று முழுநிலவு நாள். கொற்றவையின் கூத்துக்களம் நோக்கிப் பறம்புமக்கள் குவியத்தொடங்கினர். குருதியாட்டுவிழா தொடங்கவிருந்தது. போரின் இழப்புகளை வெற்றியின் மகிழ்வுகொண்டு மேவும் விழா இது. போர்த்தெய்வமான கொற்றவை தனது பசியாறி மகிழ்ந்திருப்பாள். அவளின் மகிழ்வை பறம்புநாட்டுப் பெண்களின் மகிழ்வாக மாற்றுவதே இத்திருவிழா.

மூவேந்தர்களுக்கு எதிராகப் போர் தொடங்கும்முன் கொற்றவைக்கு நீராட்டுவிழா நடந்தது. அவ்விழாவின்பொழுது நிறைசூல்காரியின் வயிற்றில் உள்ள கருவுக்கு வாக்களித்தாள் கொற்றவை. இம்மண்ணை அடுத்த தலைமுறைக்குக் காத்தளிப்பேன் என்று அவள் சொல்லிய சொல் இன்று மலர்ந்துள்ளது. வாக்கினைக் காத்தளித்த கொற்றவைக்கு நன்றிகூறும் பெருவிழா இது.

இழப்பையும் வலியையும் கண்ணீரையும் கடந்தால் மட்டுமே மேடேறி வந்து நன்றி சொல்ல முடியும். இக்காடு காக்கப்பட்டது; இப்பறம்பு காக்கப்பட்டது. நிலமெல்லாம் காக்கப்பட்டதன் அடையாளமாய்ச் சிலிர்த்து நிற்கின்றன. இவ்வளவும் காக்கப்பட்ட நிலையில் எனது இழப்பை நினைத்து மட்டுமே வருத்தப்பட்டுக் கொண்டிருக்க முடியாது. இக்காப்பிற்கானதே அவ்விழப்பு. எனவே, இழப்பினைத் தன்னுள்ளிருந்து பிய்த்து எடுப்பதும் எடுத்த இடத்தில் பக்கு மேவப் புதுத்தோல் பரவி விரிவதுமே தேவை.

வீரர்களின் குருதியில் தோய்ந்த துணிகள் தீபங்களில் திரியாய் எரிந்துகொண்டிருந்தன. பந்தங்களில் ஒளிவீசிக் கொண்டிருந்தது. எரிந்து மறைதலும். ஒளிர்ந்து அடங்குதலுமே வாழ்வு. இருளை விலக்கத்தான் முடியும்; அழிக்க முடியாது. ஒளிகொண்டு கண்டறியப்படும் உண்மை அதுதான். மரணமும் அப்படித்தான்.

கொற்றவையின் கூத்துக்களம் நோக்கி வழியெங்கும் தீபங்கள் ஏற்றப்பட்டிருந்தன. எல்லாம் ஒளிவீசும் வீர நினைவுகள். சுடரைத் தொட்டுவணங்கியபடி கூட்டங்கூட்டமாய் மக்கள் கூத்துக்களம் நோக்கி வந்தவண்ணமே இருந்தனர். பறம்பின் அத்தனை ஊர்களிலிருந்தும் சாரிசாரியாய் வந்துகொண்டிருந்தனர். குருதியாட்டு விழா தொடங்குவதுதான் இன்று; முடிவது என்றென யாராலும் கணிக்கமுடியாது. காட்டில் எத்தனை வகைக் கள்ளுண்டோ அத்தனையையும் குடித்து, கறிவகைகளை விடாது கடித்துண்டு, ஆட்டமும் பாட்டுமாய் இவ்விழா பலநாள்கள் நீடிக்கும்.

பறம்பின் தென்னெல்லையிலிருந்து வடவெல்லைவரை உள்ள ஊர்கள் அனைத்தும் ஒரே நேரத்தில் வந்து திரும்ப முடியாது. எனவே, மக்கள் இரவும் பகலுமாக நாட்கணக்கில் வந்துகொண்டே இருப்பர். உள்ளங்கையில் பிடித்து வைத்திருக்கும் மணல் ஆற்றுநீருக்குள் கரைந்து மறைவதைப் போல விழா மகிழ்வில் கண்ணீர்த்துளி தனது போக்கில் மறையும். அதுவரை குருதியாட்டு விழா தொடரும்.

கொற்றவையின் கூத்துக்களத்தின் நடுவில் வைக்கப்பட்டுள்ள வட்டப்பானையில் நிறைநீர் தளும்பியிருக்கும். ஈன்றெடுத்த குழந்தையை அப்பானை நீரில் மிதக்கவிட்டபடி எள்முனையால் அதன் மார்பினைக் கீறுவர். துளிர்த்து மேலெழும் செங்குருதி நீரில் பரவியபடியிருக்க குழந்தையை வெளியில் எடுத்துவிடுவர். பின்னர்,

செந்தினையைக் குருதியோடு கலந்துவைப்பர். பிள்ளையை ஈன்றெடுத்த தாய் அக்குருதிச்சோற்றினைப் பிசைந்து கொற்றவைக்குப் படையலிடுவாள். மறுதலைமுறைக்கு மண்ணையும் மக்களையும் காத்தளித்தவளுக்குப் புதிய மனிதர்களின் குருதிகொண்டு செய்யும் நன்றிக்கடன் இது. குருதிச்சோறு ஊட்டப்பட்டவுடன் துணங்கை ஆட்டம் தொடங்கும்.



போர்த்துணங்கை கொற்றவைக்கு உரியது. குரவை ஆட்டம்போல ஆணும் பெண்ணும் தழுவியாடும் ஆட்டமல்ல இது. வெறிகொள் மாந்தர் சினந்தாடும் வெற்றிக்கூத்திது. முழவுதான் துணங்கைக்குரிய இசைக்கருவி. அதனுடன் ஆனைப்பறையை மட்டும் இணைத்துக் கொள்ளலாம். இருளேறிய கணத்தில் எவ்வியூரின் மேற்பாறையிலிருந்து மொந்தைக் குடமுழவம்

இசைக்கப்படத் தொடங்கியது. குலநாகினிகள் கூத்துக்களம் நோக்கிப் புறப்பட்டதன் அடையாளம் அது.

நாகினிகளின் முன்னே வெறிகொள் பாவையர் சுழன்றாடுவர். அவர்கள் அணிந்துள்ள மாலைகளில் உள்ள மலர்கள் முற்றிலுமாக உதிர்ந்துவிழும் வரை சுழன்றாடுவர். எதிரிகளின் கபாலமேந்தி சிலர் ஆடிவருவர். கபாலக்கூத்துக்கு மணிமுரசம் முன்செல்லவேண்டும். வெற்றியின் உச்ச ஆட்டம் அது. ஒவ்வொரு திசையிலிருந்தும் ஒவ்வொரு வகையான ஆட்டத்தோடு கூத்துக்களம் நோக்கி வந்துகொண்டிருந்தனர் பெண்கள். காடெங்கும் ஒளிசிந்திக் கொண்டிருந்த முழுநிலவுக்குக் கேட்டுத்திரும்பியது துணங்கைக்கான முழவொலி. நள்ளிரவு வரை வெறியாட்டம் ஆடி வந்துகொண்டே இருந்தனர் மக்கள். மூவேந்தர்களை வென்று முடித்த வெற்றிவிழாவை ஆடித்தீர்க்க இருகால்கள் போதவில்லை.

நாகக்கரட்டின் மேலே பறம்புப்படைகள் தங்கியிருந்தன. ஆனால், அவற்றுக்குப் பின்னால் இரலிமேட்டின் குகைகளில் முதுவேலன் இருந்தான். அதற்கு மேல் காரமலையின் உச்சிமுகட்டுக்குச் சற்றே கீழ்நிலையில் இருந்தபடி போரினை முழுமையாகப் பார்த்துக் கொண்டிருந்தனர் பெண்கள். கீழே, தட்டியங்காட்டில் போரிடும் பறம்பு வீரர்கள் பொதுப்படையாகத் தெரிவர். தனித்த உருவம் தெரியாது, எந்த ஒருவனையும் அடையாளங்கண்டுவிட முடியாத உயரத்தில் அவர்கள் இருந்தனர்.

தட்டியங்காட்டுத் தாக்குதலின் தன்மையையும், குளவந்திட்டிலிருந்து பாரி உத்தரவு எழுப்புவதையும் நாகக்கரட்டிலிருந்து வாரிக்கையன் ஒலிக்குறிப்புகளை அனுப்புவதையும் அவர்கள் உச்சியிலிருந்து பகலெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தனர்.



இரவானதும் யாராவது ஒருத்தி ஒப்பாரிப் பாடலைப் பாடுவாள். அந்தப்பாடல் பெயர் அடையாளமற்று, உருவ அடையாளமற்று வீரத்தை மட்டுமே உருவகப்படுத்தி இருந்தது. எதிரிகளை கணக்கேயில்லாமல் கொன்றழித்த பறம்புவீரன் குருதிபெருக மண்ணில் மாண்டுவிழுவதைப் பற்றிய பாடலது. அப்பாடலில் பாடப்படும் வீரன் தன் கணவனாகவோ, மகனாகவோ, காதலனாகவோ, தந்தையாகவோ, உடன்பிறந்தவனாகவோ இருப்பானோ என்ற எண்ணம்வராதவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள்.

எல்லோரும் எல்லோரின் மரணத்தையும் மன அளவில் ஒவ்வோர் இரவிலும் சுமந்து கடந்து வெளிவந்து கொண்டிருந்தனர். வீரர்களின் குருதி பெண்களின் கைகளில் இரவெல்லாம் படிந்திருந்தன.

எவ்வளவு கொடிய தாக்குதல் நடந்தாலும் யார் இறந்தாலும் அவர்களுக்கு விதிக்கப்பட்ட எல்லையைத் தாண்டிக் கீழே

போகக்கூடாது. கரியனூர் பெரியாத்தாதான் எல்லைக்காவலாக நின்றிருந்தாள். இளவயதுக்காரிகள் சில நேரங்களில் துக்கம் தாங்காமல் நான் போய்ப் பார்க்கவேண்டும் என்று துடித்துப் புறப்படுவார்கள். அவர்களையெல்லாம் தடுத்தாட்கொள்ள வேண்டும். காரமலையின் மேல்விளிம்பில் பெண்களின் கண்ணீர், உருளமுடியாத பெரும்பாறையாக உருத்திரண்டு நின்றிருந்தது. பால்கட்டிய மார்பென நீர்கட்டி நின்றன விழிகள்.

ஆறாம் நாள் நள்ளிரவு கூவல்குடியினர் எழுப்பிய ஓசை மலையெங்கும் எதிரொலித்தது. ஆறுநாட்களும் இறந்த யாருடைய பெயரும் அறிந்திராத பெண்கள் தேக்கனின் மறைவைக் கூவல்குடியினர் சொல்லக்கேட்டு நடுங்கிப்போயினர். அதுநாள் வரை யாரையும் எல்லைதாண்ட விடாமல் காத்து நின்ற கரியனூர் பெரியாத்தா தலையிலும் மார்பிலும் அடித்துக் கொண்டு, எல்லைதாண்டி இரலிமேட்டினை நோக்கி ஓடத் தொடங்கினாள்.

அவளைப் பிடித்து நிறுத்துதல் எளிய செயலன்று. எல்லோரும் எவ்வளவோ முயன்றும் அவளை நிறுத்த முடியவில்லை. நாகினிகள் யாரும் இங்கில்லை. அவர்கள் எல்லோரும் எவ்வியூரில் இருந்தனர். பெரியாத்தாவை யாராலும் கட்டுப்படுத்த முடியவில்லை. தேக்கனின் மரணத்தைத் தாங்கிக் கொள்ளும் திடம் பறம்பில் யாரிடமும் இல்லை. இம்மலையின் பேராசான் போர்க்களத்தில் மாண்டான்

என்பதை எப்படி நம்புவது? பெண்கள் ஏது செய்வதென்று தெரியாமல் திணறி நின்றனர்.

“இங்குள்ள பெண்கள் எல்லோருக்கும் தாய் நீ. மார்பில் அடித்து நீ கதறுவதை இளம்பிள்ளைகள் எப்படித் தாங்குவார்கள்? தேக்கன் தெய்வத்துக்கு நிகரானவன். அவனது மரணத்தை மனிதர்களான எங்களால் எப்படித் தாங்கமுடியும்? எங்களை ஆற்றுப்படுத்தவேண்டிய நீயே எல்லையைத் தாண்டினால் மற்றவர்களால் என்ன செய்யமுடியும்? துக்கத்தை வாயால் சொல்லித் துடித்தழு. அதை விடுத்து எல்லைதாண்டி முன்னகராதே” என்று எவ்வளவோ சொல்லிப்பார்த்தனர். ஆனால், அவளை யாராலும் தடுக்கமுடியவில்லை.

இறங்கிக் கொண்டிருந்த அவளை நோக்கி இறுதியாக இறங்கிவந்தாள் ஆதினி. என்ன சொல்லிப் பெரியாத்தாளை நிறுத்தப்போகிறாள் என்பதறியாது மற்ற பெண்கள் பார்த்துக் கொண்டி ருந்தபொழுது, அவளருகில் சென்று ஆதினி சொன்னாள். “மயிலாவுக்கு வலி கூடியிருக்கிறது. குழந்தை பிரண்டிருக்கும் என்று நினைக்கிறேன். வந்து எடுத்துக் கொடு.”

அதிர்ந்து நின்றவள் கண்ணீரைத் துடைத்தபடி, எல்லோரையும் விலக்கிக் கொண்டு “ஏம்மகளே...!” எனக் கத்தியபடி மயிலாவை நோக்கி ஓடினாள் பெரியாத்தா.

நிலவின் மஞ்சள் ஒளியில் காடே ஒளிர்ந்துகொண்டிருந்தது. கூத்துக்களம் நோக்கித் தன் பிஞ்சுமகவைத் தூக்கிவந்தாள் மயிலா. அவளைச்சுற்றி எண்ணற்ற தோழிகள் இருந்தனர். ஆனாலும் அங்கவைதான் அவளை முன்னடத்தி வந்தாள். ஆதினியும் மற்ற பெண்களும் அவளின் வருகையை எதிர்பார்த்துக் கூத்துக்களத்தில் காத்திருந்தனர்.

ஆண்கள், பெண்களுக்கு அப்பால் நின்றிருந்தனர். விரிபலகையில் நீலன் அமர்ந்தி ருந்தான். காயங்கள் இன்னும் முழுமையாக ஆறவில்லை. அவனது வலப்புறம் கபிலர் அமர்ந்திருந்தார். இடப்புறம் முடியன் அமர்ந்திருந்தான். அவர்களுக்குப் பின்னால் உதிரனும் விண்டனும் நின்றிருந்தனர். காலம்பன் மற்ற பெரியவர்களுடன் எதிர்த்திசையில் அமர்ந்திருந்தான். முன்னும் பின்னுமாக, பறம்பெங்குமிருந்து வந்த கூட்டம் மொய்த்துக்கிடந்தது.

கூத்துக்களத்தின் நடுவிலிருந்த வட்டப்பானையில் நிறைநீர் தளும்பிக் கொண்டிருந்தது. அருகில் வந்த மயிலா நீருக்குள் தன் மகவை மெள்ள உள்ளிறக்கினாள். பெண்கள் குலவையிடத் தொடங்கினர். பறம்புக்கு ஆசானான தேக்கன் இல்லாததால் முடியன் எழுந்துவந்தான். விரல் இடுக்கிலிருந்த எள்முனைகொண்டு மகவின் மார்பில் சிறுகீறலை உருவாக்கினான். குழந்தை அவனைப்பார்த்து வீறிட்டபொழுது குருதி நீருக்குள் கலந்திருந்தது.

குலவையொலி எங்கும் பெருக மகவை பானையிலிருந்து மேலெடுத்தாள் மயிலா. தோழிகள் செந்தினையைக் கூடையில் கொண்டுவந்தனர். அதனை இருகைகளிலும் அள்ளி, குருதிநீரில் கலந்தாள். குலவையொலி மேலும் கூடியது. போர்க்களத்தில் மாண்டோரின் குருதிகொண்டு பிசையப்படும் பலிச்சோறது. நான்கு முறை கைகளால் அள்ளிப் போட்டவள். ஐந்தாம்முறை தினையை அள்ளும்பொழுது, “வேண்டா. அவ்வளவுதான் இருக்கும்” என்று சொல்லிவிட்டு, தனது இடம் நோக்கி நகர்ந்தான் முடியன்.

வீரன் ஒவ்வொருவனின் குருதியாலும் ஒவ்வொரு தினையைப் பிசைந்து கொற்றவைக்குப் பலிச்சோறிடும் நிகழ்விது. இறந்த வீரர்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டு நான்கு பிடியோடு நிறுத்தினான் முடியன். பிசைந்து முடித்து பலிச்சோற்றினைக் கொற்றவைக்குக் கொடுக்கும் சடங்கு தொடங்கியது. குருதியாட்டு விழா அதன் உச்சத்தை நெருங்கியது. குலவையொலி மேலும் மேலும் கூடியபடியிருக்க மயிலா பலிச்சோற்றினை எடுத்து கொற்றவையின் அடிவாரத்தில் வீசத் தொடங்கினாள்.

வீசிய கணம் போர்த்துணங்கைக்கான முழவின் ஒலி பீறிட்டு எழுந்தது. குலவை ஒலியும் முழவின் ஒலியும் இணைந்து இருட்டையும் காட்டையும் மிரட்டிய வேளையில் பெண்களின் துணங்கை ஆட்டம் தொடங்கியது. போர்த்துணங்கைக்கான ஆட்டத்தில் ஒவ்வொரு பெண்ணாக ஆடத் தொடங்கினர்.

ஆட்டத்தினூடே பலிச்சோற்றினை அள்ளி, கொற்றவையை நோக்கி வீசினர் பெண்கள். புதுமகவின் குருதியால் கொற்றவைக்கு நன்றிசொல்லல் இது.

மனதின் ஆழத்தில் உறைந்துகிடக்கும் துயரத்தின் வலியைப் பிடுங்கியெறிய வலிமைகொண்டு ஆடினர். நேரமாக ஆக முழவின் ஓசையில் காடு நடுங்கியது. அப்போது ஆனைப்பறை முழங்கத் தொடங்கியது. அணங்குகள் இறங்கத் தொடங்கினர். வெறிகொள் பாவையர் சுழன்றாடினர். துணங்கையாடும் பெண்களிடமிருந்து விலகி நின்று வணங்குதலே மரபு. கூட்டம் முழுமையாக விலகி நிற்கமுடியாமல் திணறிக்கிடந்தது. வந்திருந்த பெண்கள் எல்லோரும் ஆடத் தொடங்கினர்.

அவர்கள் ஒவ்வொருவருக்குள்ளும் ஓர் அணங்கு இறங்கி ஆடத் தொடங்கியது. ஆட்டத்தினூடே குலநாகினிகள் தனித்து எழுப்பும் குலவையொலி மேலெழ, கூட்டம் இடங்கொடுத்து விலகியது. அவ்வொலி கேட்டதிலிருந்து முழவுகளின் ஓசை சிறிதுசிறிதாகக் குறையத் தொடங்கியது. அணங்கிறங்கியவர்களும் தங்களது ஆட்டத்தைக் குறைத்தனர்.

பலகையில் உட்கார்ந்திருந்த கபிலர் என்ன நடக்கிறது என்பதை அறிய எட்டிப்பார்த்தார். குலநாகினிகளின் நடுவே நீராடி மேலெல்லாம் குருதி பூசியபடி வந்துகொண்டிருந்தான் வேள்பாரி. கூட்டத்தின் ஓசை நன்றாகக் குறைந்தது. அவன் வந்து

கூத்துக்களத்தின் நடுவே நின்றான். முழவுகளின் ஓசை முழுவதுமாக நின்றது.

உட்கார்ந்திருந்த கபிலருக்கு அங்கு என்ன நடக்கிறது என்று தெளிவாகத் தெரியவில்லை. எழுந்து நின்றார். பாரியின் கைகளில் வில் இருந்தது. குருதியாட்டு விழாவுக்கு ஏன் வில்லேந்தி வந்துள்ளான் பாரி என்பது கபிலருக்குப் புரியவில்லை. குலநாகினிகள் அம்பொன்றை அவன் கைகளில் கொடுத்தனர். அதன் முனையில் பூச்சூடி இருந்தது. அதனை வாங்கினான் பாரி. வாங்கிய கணம் அவனது உடல் சிலிர்த்து அடங்கியது. கண்களை ஒரு கணம் மூடினான். அந்த அம்பு தேக்கன் தனக்குள் செலுத்திக் கொண்ட அம்பு.

தேக்கனின் நினைவோடு கண்களைத் திறந்தபொழுது குருதியின் நிறங்கொண்டிருந்தன கண்கள். அவன் அம்பினை நாணில் பூட்டி இழுத்தான். குலநாகினிகள் குலவையொலி எழுப்பினர். பெண்கள் பேராசானை நினைத்து, கைகளை உயர்த்திக் கதறினர். பாரி அம்பினை விடுவித்தான். கொற்றவை குடிகொண்டுள்ள மரக்கூட்டத்துக்குள் அம்பு பாய்ந்து மறைந்தது. ஆசான் தனக்குள் செலுத்திக் கொண்ட அம்பினை மீண்டும் தனக்குள் செலுத்திக் கொண்டது பறம்பு.

எழுந்த குலவையொலியோடு முழவின் ஓசை இணைந்துகொண்டது. குலநாகினிகள் அடுத்து மூவிலைவேலினைப்

பாரியிடம் கொடுத்தனர். வேலினை வாங்கினான் பாரி. எழுந்த ஓசை முன்னிலும் பலமடங்கு அதிகரித்தது. பாரியின் உடலில் ஒவ்வொரு நரம்பும் விசையைக்கூட்டியது. கண்கள் கலங்கின. ஒரு மாவீரனைப் போற்றும் கணமிது. அவனது நினைவை நெஞ்சில் ஏந்தியபடி மூவிலை வேலினைத் திருப்பிப்பிடித்து கூத்துக்களத்தின் முன்னிலத்தில் ஓங்கிக்குத்தி மண்ணுள் இறக்கினான். நிலமிறங்கிய வேலின் கைப்பிடி அதிர்ந்து ஆடிக் கொண்டிருக்க, அதற்குப் பூமாலை சூட்டினர் நாகினிகள். இனி காலம் உள்ளவரை நடப்பட்ட மூவிலைவேலின் வழி வணங்கப்படுவான் இரவாதன்.

வேலினை ஊன்றிய கணத்தோடு அவ்விடம் நிற்கமுடியாமல் வெளியேறி கபிலரின் அருகில் வந்தமர்ந்தான் பாரி. துணங்கை ஆட்டம் முன்னிலும் வேகங்கொண்டது. முழவுகள் பேரோசையை எழுப்பின. கூட்டம் கூடிக் கொண்டேயிருந்தது. துணங்காடிய பெண்களைத் தங்களின் இரு கைகளைக் கொண்டு விலக்கித் தள்ளினர் குலநாகினிகள். ஆனால், ஆடும்பெண்கள் எளிதில் நகர்வதாக இல்லை. பேரொலி எழுப்பிய குலநாகினிகள் அவர்களைப் பிடித்துத் தள்ளி இடம் அமைத்துக் கொடுத்தனர்.

அங்கு நடப்பதைப் பார்க்கக் கூட்டம் முண்டியடித்து முன்னேறியது. பாரி வந்ததும் அமர்ந்த கபிலர் மீண்டும் எழுந்து நின்று பார்த்தார். இளம்பெண் ஒருத்தி தனியே ஆடிக் கொண்டிருந்தாள். ஆனால் துணங்கை ஆடும் மற்ற

பெண்களைப்போல அவள் ஆவேசங்கொண்டு ஆடவில்லை. தலையை மட்டும் ஆட்டி ஆட்டி மெள்ள ஆடிக் கொண்டிருந்தாள். அவளுக்கு முன்னால் குலநாகினிகள் கைகுவித்து வேண்டியபடி நின்று கொண்டிருந்தனர்.

பார்த்துக் கொண்டிருந்த கபிலருக்கு எதுவும் புரியவில்லை. சூழ்ந்திருந்த பெண்கள் பேரோசை எழுப்பினர். கூட்டத்தினரின் குலவையொலி மேலும் மேலும் பன்மடங்காகியது. ஆடியவளின் முன்னால் பச்சைமண் சிலையொன்று வைக்கப்பட்டிருந்தது. இப்பொழுதுதான் அது வைக்கப்பட்டிருக்க வேண்டும். அதைப் பார்த்தபடி நின்று அந்தப்பெண் ஆடிக் கொண்டிருந்தாள். குலவையொலி மேலும் கூடியது. எந்நிலையிலும் கண்ணீர் சிந்தாத குலநாகினிகள் கைகுவித்துக் கண்ணீர் மல்க வேண்டி நின்றனர்.

கூட்டதினூடே அங்கு நடப்பது கபிலருக்குத் தெளிவாகத் தெரியவில்லை. சற்றே தலையை நிமிர்த்தி எட்டிப்பார்த்தார். குலநாகினிகளின் வேண்டுதலை ஏற்று அப்பெண் மண்சிலைக்கு அருகிலிருந்த எதையோ எடுக்கத் தொடங்கினாள். நாகினிகள் குலவையிடத் தொடங்கினர். இதுவரை இல்லாத அளவு வெளிவந்துகொண்டிருந்தது பேரோசை. எடுத்தவள் தன் காதுகளில் அதை அணிந்துகொண்டாள். கூட்டத்திலிருந்த ஒவ்வொருவரும் குலவையொலியைப் பன்மடங்காக்கினர்.

அவள் மீண்டும் தலையை மெள்ள ஆட்டத் தொடங்கினாள். பின்புறமிருந்து பார்த்துக் கொண்டிருந்த கபிலருக்கு நீண்டநேரங் கழித்துதான் புரியத் தொடங்கியது. அவள் காதில் அணிந்தது மகரக்குழைக் காதணி. புதிய மண்சிலையில் நினைவினை இறக்கி நடத்தப்பட்ட வழிபாட்டுச்சடங்கு பொற்சுவைக்கானது. அதை உணர்ந்த கணத்தில் கபிலரின் மேலெல்லாம் வியர்த்துப் பொங்கியது. கண்களில் நீர்பெருக, கூட்டத்தை விலக்கிச் சடசடவென உள்ளே நுழைந்தார். பெண்கள் மட்டுமே ஆடும் களத்தில் கபிலர் ஏன் உள்ளே நுழைகிறார் என்று மற்றவர்கள் சிந்தித்து முடிக்கும் முன் கூத்துக்களத்தின் முன்னிலையை அடைந்தார்.

மகரக்குழை இருகாதுமடல்களிலும் தொங்க ஆடிக் கொண்டிருந்தவளின் முகத்தைப் பார்த்தார். குலவையொலியினூடே அவள் கண்களை இறுக மூடியிருந்தாள். தானும் கண்மூடினார் கபிலர். அவரின் கண்களிலிருந்து நீர் பொங்கிவந்தது. மண்டியிட்டு அவளின் காலினைத் தொட்டு வணங்கினார் கபிலர்.

அமர்ந்திருந்த பாரி எழுந்து வேகமாகக் கூட்டத்துக்குள் நுழைந்தான். உயிர்துறக்கும் பொழுது தனது மடியில் கிடந்த பொற்சுவையின் காலடியைத் தொட்டு வணங்கிய கபிலர் அவ்விடம் விட்டு எழமுடியாமல் அப்படியே கிடந்தார். பாரி அவரைக் கைபிடித்துத் தூக்கினான்.

துணங்கை ஆட்டம் மீண்டும் தொடங்கியது. முழவுகள் ஒலியெழுப்பத் தொடங்கின. பெண்கள் சுழன்றாடினர். கபிலரை அழைத்துவந்து நீலனின் அருகில் அமரவைத்தான் பாரி. உணர்ச்சியின் கொந்தளிப்பில் இருந்தார் கபிலர்.

துணங்கை ஆட்டம் உணர்வுநிலையைக் கூட்டிக் கொண்டேயிருந்தது. கூட்டத்திலிருந்த சங்கவை, தந்தையைத்தேடி அருகில் வந்தாள். பாரி அவளைத் தூக்கி, தனக்கும் கபிலருக்கும் நடுவில் உட்காரவைத்துக் கொண்டான். கபிலரின் கைகள் சங்கவையின் தலையைக் கோதிவிட்டன. அவள் இடப்புறமாகத் திரும்பி கபிலரைப் பார்த்துப் புன்முறுவலோடு அவரின் தாடியைச் சட்டென வருடிவிட்டபடி கூத்துக்களத்தைப் பார்த்துத் திரும்பிவிட்டாள்.

நீண்டநேரமாக உணர்ச்சிக் கொந்தளிப்பிலிருந்த கபிலரின் முகம் சற்றே மாறத் தொடங்கியது. சங்கவையின் சிறுகுறும்பு அவரின் மனநிலையை மாற்றத் தலைப்பட்டது. சினமாந்தர்கள் ஆடும் போர்த்துணங்கை இறுதிக்கட்டத்தை எட்டிக் கொண்டிருந்தது. கபிலருக்கு வாரிக்கையனின் நினைவு வந்தது. அவரை கூத்து தொடங்கியதிலிருந்து பார்க்க வில்லையே என்று சிந்தித்தபடி பாரியிடம் கேட்டார், “வாரிக்கையன் எங்கே?”

“இன்னும் சிறிதுநேரத்தில் வந்துவிடுவார்.”

“பொழுது நள்ளிரவை நெருங்கப்போகிறது. பறம்புநாடே இங்கிருக்கையில் அவர் மட்டும் எங்கே போயுள்ளார்?”

“அவருடன் முதுவேலனும் சேர்ந்து போயுள்ளார்” என்றான் பாரி.

எங்கு என்று மட்டும் சொல்லாமல் வெளிவந்துகொண்டிருந்தன பாரியின் சொற்கள். வழக்கமாக அதைப் புரிந்துகொள்பவர்தான் கபிலர். ஆனால் இன்றைய உணர்வுநிலையில் சொற்களின் துல்லியத்தின் மீது பயணிக்கும் நிலையில் அவர் இல்லை. “வாரிக்கையன் எங்குதான் போயுள்ளார் பாரி?” எனக் கேட்டார்.

பாரி சொன்னான், “நான்காண்டுக்கு ஒருமுறை ஒளிவாள் இறங்குமல்லவா, ஆதிமலையின் பெருங்கடவு. அங்கே போயுள்ளார்.”

‘அங்கு எதற்கு?’ எனச் சிந்தித்தபடியே கேட்டார், “இதுபோல அங்கேதும் கூத்து நடக்கிறதா?”

“தேக்கனும் இரவாதனும் பொற்சுவையும் நிலைகொள்ளவேண்டிய இடம் இதுதான். ஆனால் திசைவேழர் நிலைகொள்ள வேண்டிய இடம் அதுதானே. அதனால்தான்

திசைவேழர் பயன்படுத்திய நாழிகைக்கோலினை எடுத்துக் கொண்டு அங்கு போயுள்ளனர் வாரிக்கையனும் முதுவேலனும்.''

உறைந்த உணர்வு மீண்டும் வெடித்து மேலெழுவது போல இருந்தது. சங்கவையைக் கடந்து பாரியின் தோள்நோக்கிப் போனது கபிலரின் கை.

அக்கையை இறுகப்பிடித்த பாரி சொன்னான், ''அறங்காக்கும் தெய்வங்கள் எமது நிலத்தை ஆளட்டும். எம் மக்களை ஆளட்டும். எம்மை ஆளட்டும்.''

சொல்லிமுடிக்கும் பொழுது முழவின் ஒலியோடு மீண்டும் குலவையொலி இணைந்தது. அனைத்துப் பெண்களும் பெருங்குலவையை வெளிப்படுத்தியபடி துணங்கை ஆட்டத்தை முடிவுக்குக் கொண்டுவந்தனர்.

கள்ளும் ஊனும் சேர பாணர்கூத்து தொடங்கும் நேரம் நெருங்கியது. உணர்வால் இறுக்கப்பட்டிருந்த கபிலர் மீண்டுவர முடியாமல் திணறிக் கொண்டிருந்தார். கூத்தர்களும் பாணர்களும் களம்புக ஆயத்தமாயினர்.

முழவினை வெளியேற்றிவிட்டு மற்ற இசைக்கருவிகளை உள்ளெடுத்து வரத் தொடங்கினர். கஞ்சத்தாலான குமுழுவம், கருங்காலியாலான இடக்கை, செங்காலியாலான சல்லியம்,

வேம்பாலான மத்தளம் ஆகியவற்றைக் கொண்டு இசைவாணர்கள் கூத்துக்களத்தைச் சுற்றி வட்டமிட்டு நின்றனர்.



எண்ணற்ற பாணர் குழுக்கள் வந்து சேர்ந்துள்ளன. துணங்கைக் கூத்து முடிவதற்காகத் தான் அனைவரும் காத்திருந்தனர். இப்பொழுது களம்புகுந்தனர். செம்மேழிப் பாணர் கூட்டத்தின் பெயர் சொல்லி உரக்கக் கத்தினான் நீலன்.

நீலனின் குரல் கேட்ட கணம் கூத்துக்களம் மொத்தமும் அமைதியடைந்தது. என்ன சொல்லப்போகிறான் நீலன் என்பதை அறிய அனைவரும் ஆவலோடு அவனைப் பார்த்தனர். கூட்டத்துக்குள் இருந்த மயிலா குழந்தையோடு மீண்டும் முன்னால் வந்து எட்டிப்பார்த்தாள். அனைவரின் பார்வையும் நீலனின் மீது இருந்தது. அவன் திரும்பி கபிலரைப் பார்த்தான். கலங்கி உறைந்த முகம் அப்படியே இருந்தது.

ஒரு கணத்தில் இம்முகத்தை மலரச்செய்ய என்னால் முடியும் என்பது போல் இருந்தது அவனது பார்வை. கபிலரிடமிருந்து பார்வையை விலக்கி பாணனைப் பார்த்துச் சொன்னான், ‘‘பனையன் மகனே பாடலைப் பாடுங்கள்’’

சொல்லிய கணம் கூட்டத்தின் பேரொலி விண்ணை முட்டியது. கபிலரின் முகம் மறுகணமே மாறத் தொடங்கியது. தான் பறம்புக்குள் நுழைய வேட்டுவன் பாறையில் கால்வைத்த முதல்நாள் நீலன் சொன்னான், ‘‘முழுநிலவு நாளில் பனையன் மகனே பாடலைப் பாடினால் பறம்பு நாடே எழுந்து ஆடும்.’’

நீலன் அன்று சொன்ன சொற்கள் நினைவுக்குள்ளிருந்து மேலெழுந்து வந்தது. குறிஞ்சி நிலத்துக்குரிய தொண்டகச் சிறுபறையைத் தனது இடுப்பில் கட்டியிருந்த முதுபாணன். கூத்துக்களத்தை வட்டமடித்தபடி உள்ளே நுழைந்தான். முழுநிலவு பொழிந்து கொண்டிருந்தது. கூட்டத்தின் ஆரவாரம் பெருகத் தொடங்கியது. பாணர்கள் எல்லோரும் இசையாலும் குரலாலும் இணையத் தொடங்கினர். பாடல் தொடங்கிய கணத்தில் பறம்பே எழுந்து ஆடத் தொடங்கியது.

**பனையன் மகனே பனையன் மகனே**

**பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே**

**தினையின் அளவே பிறவுயிர் வாடினும்**

**துடித்துக் காக்கும் தொல்குடி வேந்தே — நின்**

**பறம்பு நிலமும் படர்ந்த காடும்**

**தவழும் காற்றும் தழலும் வானும்**

அண்டுவார் தம்மை அணைக்கும் தாய்மடி

அளவிலா அன்பைப் பொழியும் தொல்குடி

பனையன் மகனே பனையன் மகனே

பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே

தினையின் அளவே பிறவுயிர் வாடினும்

துடித்துக் காக்கும் தொல்குடி வேந்தே — உனக்கு

கோலு மில்லை குடையு மில்லை

கொடியு மில்லை முரசு மில்லை

நிகர்பகை யில்லை பழியு மில்லை

நின்னை வெல்வோர் யாருமில்லை

பனையன் மகனே பனையன் மகனே

பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே

தினையின் அளவே பிறவுயிர் வாடினும்

துடித்துக் காக்கும் தொல்குடி வேந்தே — நீ

அழிக்கும் செந்நாய்க்கு ஆளி யாவாய்

அழியாப் பகையை ஏற்ற எதிரிகள்

சூது செய்யினும் சூழ்ந்து தாக்கினும்

ஏது மற்றவராய் இழந்தே செல்வர்

பனையன் மகனே பனையன் மகனே

பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே

தினையின் அளவே பிறவுயிர் வாடினும்

துடித்துக் காக்கும் தொல்குடி வேந்தே — நீ

வையைக் கழிமுக வைப்பூர் எரித்தாய்

திரையர் குலத்தைத் தீதின்றி மீட்டாய்

எழுவனாற்றில் இறங்கிய படையை

எளிய பூச்சியால் அழித்தே ஒழித்தாய்

சிறுகாது முயலின் குருதி தோய்த்து

பெருவேந்தர்களை நடுக்குறச் செய்தாய்.

வேளிர் குலத்தின் பாழியைக் காத்தாய்

சேரனை வென்று குதிரைகள் சேர்த்தாய்

பனையன் மகனே பனையன் மகனே

பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே

திணையின் அளவே பிறவுயிர் வாடினும்

துடித்துக் காக்கும் தொல்குடி வேந்தே — நீ

நீயாய்ப் பிறர்மேல் நெல்முனையும் வீசாய்

எல்லை கடந்தவர் ஏறி வந்திடின்

கொற்றவைக் களத்தில் வஞ்சினம் உரைப்பாய்

செருக்களம் வென்று செங்குருதி குளிப்பாய்

வேந்தர் படையை வெல்வா யென்றே

கருங்கிளி நிமித்தம் கழறிய பின்னரும்

போரினை வெறுத்தாய்; பொறுமை காத்தாய்

நீலனை மீட்கவே நெடும்படை ஒறுத்தாய்

பனையன் மகனே பனையன் மகனே

பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே

திணையின் அளவே பிறவுயிர் வாடினும்

துடித்துக் காக்கும் தொல்குடி வேந்தே — நீ

முருகன் வள்ளி முடிச்சிலொரு கண்ணிநீ

எவ்வி சோமா இணைப்பிலொரு பின்னல்நீ

சூலிவேள் தூதுவை பின்னலின் தொடர்ச்சிநீ

தேக்கனும் பழையனும் விட்டுச்சென்ற வீரம்நீ

பனையன் மகனே பனையன் மகனே

பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே

தினையின் அளவே பிறவுயிர் வாடினும்

துடித்துக் காக்கும் தொல்குடி வேந்தே - எம்

பாணர் வந்தால் பாடல் கேட்டும்

கூத்தர் ஆடினால் குளிர்மனம் கொண்டும்

இல்லை எனாது எல்லாம் வழங்கி

பல்லுயிர் ஓம்பும் பாரி வேளே — நீ

பனைபோல் வாழ்க பனைபோல் வாழ்க.

# முற்றும்